# வாட்டர்பரீஸ் வைட்டமின் காம்பவுண்ட்




## திட ஆரோக்கியத்துக்கும் தென்புக்கும்

நல்லதென்பதற்கு 4 காரணங்கள் இதோ...

1. எந்த சீத வெப்ப நிலையிலும் எப் பருவத்திலும் முதியோர், சிறுவர் யாவரும் சுவைத்துப் பருகுவதற்கு இனிய, உடல் நலனுக்கு உகந்த டானிக் இதுவே.
2. இரத்த விருத்தி செழிக்கச் செய்து, நரம்புகளுக்கு வலுவூட்டுகிறது.
3. பசியின்மைக் கோளாறுகளுக்கும், பிணியாறும் பருவத்திற்கும் பிரத்தியேகமாக உரித்தானது.
4. பொது பலவீனம், ஊட்டக் குறைவு, சோர்வு, உணவிலே உலோகப் பொருள் குறைபாடு, மிதமிஞ்சிய உடல் தளர்ச்சி, உள்ளத் தளர்ச்சி யாவினுக்கும் உகந்த நிவாரணமாகச் சிபாரிசு செய்யப்படுகிறது.

## வாட்டர்பரீஸ் வைட்டமின் காம்பவுண்ட்

வார்னர் - லாம்பர்ட் பார்மஸூடிகல் கம்பெனி.

( வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு. எஸ். ஏ. வில் இணைக்கப்பெற்றது )

சுபகிருது, ஆடிமீ 14உ



ஜூலை 29, 1962

# பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



ஆடம்பரப் பொருளாகக் கருதப்படினும், அரசன் முதல் ஆண்டிவரை புகையிலையை ஏதேனுமொரு விதத்தில் உட்கொள்ளாதவர்களே இல்லை. இந்தியாவிலும் சரி, பொடியோ, புகையிலையோ போடும் பழக்கத்தைவிட புகைபிடிக்கும் பழக்கமே மக்களை மேன்மேலும் கவர்ந்துள்ளது. இதன் பயனாக ஆண்டுதோறும் 3200 கோடி சிகரெட்டுகளுக்கு மேலாக உபயோகிக்கப்பட்டு வருகிறதென இன்று உத்தேசக் கணக்கெடுக்கப்பட்டுள்ளது.

## புகையிலையின் வரலாறு... 8



மலர் 22 | தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | இதழ் 52

# தி. மு. க. மறியல்

திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர்கள் விலைவாசி உயர்வை எதிர்த்துக் கிளர்ச்சிகள் செய்து சிறை சென்றிருக்கின்றனர். ஏராளமான தொண்டர்களும் அவர்களுடன் இந்த மறியலில் ஒத்துழைத்திருக்கிறார்கள்.

இந்தச் சமயத்தில், விலைவாசிகள் எதனால் உயர்கின்றன என்பதை மக்கள் எண்ணிப் பார்க்க வேண்டும்.

இதற்குக் காரணம் நமது ஐந்தாண்டுத் திட்டங்கள். இந்தத் திட்டங்களுக்காகக் கோடானு கோடி ரூபாய்கள் தேவைப்படுகின்றன. இவ்வளவு ரூபாயும் எப்படிக் கிடைக்கும்? வரிகளின் மூலம்தான் கிடைக்கும். எனவே வருமானவரி போன்ற நேரடி வரிகளையும், விற்பனை வரி போன்ற மறைமுக வரிகளையும் உயர்த்த வேண்டிய நிர்ப்பந்தம் அரசாங்கத்துக்கு ஏற்பட்டே இருக்கிறது. எந்த வரியானாலும் உற்பத்தியாளர்களும், விநியோகிக்கும் வியாபாரிகளும் அவற்றின் சுமையைப் பொதுமக்களின் தலைக்கு மாற்றத்தான் யத்தனிப்பார்கள். அதாவது பண்டங்களின் விலைகளை ஏற்றுவார்கள். இதுவே இன்று நாம் காணும் நிலவரம்.

வரிகளின் மூலம் திட்டத்துக்குத் தேவைப்படும் தொகை முழுவதையும் பெற முடியாதென்பதால் ரூபாய் நோட்டுக்களை வரம்பின்றி அச்சிட்டு வழங்குகிறது சர்க்கார். நாட்டின் உற்பத்தி பெருகாமல், அதற்காக மக்கள் செலவிடக்கூடிய தொகை மட்டும் உயர்வதால் விலைவாசிகள் மேலும் உயர்கின்றன.

அதாவது பகாசுரத் திட்டங்கள் இருக்கும் வரையில் வரி உயர்வைத் தடுக்க முடியாது; வரி உயர்வைத் தடுக்காத வரையில் விலைகள் உயர்வதையும் தடுக்க முடியாது. இதெல்லாம் பொருளாதார நிபுணர்களுக்குப் புரியும் விஷயம்.

ஐந்தாண்டுத் திட்டங்களை வரவேற்கிறவர்கள் வரிகளையும் விலையேற்றத்தையும் வரவேற்பதாகவே பொருள். சிலர் தமிழகத்துக்கு மட்டிலுமே 1000 கோடி ரூபாயில் திட்டம் வகுக்க வேண்டும் என்கிறார்கள். இந்தத் திட்டங்களுக்கு வேண்டிய பணத்துக்கு என்ன செய்வதாம்? யார் அதிகாரத்தில் இருந்தாலும் வரி போடாமலோ, நோட்டு அச்சடித்துப் புழக்கத்துக்கு விடாமலோ இவ்வளவு பெரும் தொகைகளை எப்படிப் பெறுவார்கள் என்று சர்க்காரில் இப்போது கேட்கிறார்கள்.

'பந்தைச் சுவரின் மீது விட்டெறிவேன்; ஆனால் அது திரும்பி வரக் கூடாது' என்று சொல்வது போல்தானிருக்கிறது — 'திட்டத்தை ஆதரிப்போம்; ஆனால் விலைகள் உயரக் கூடாது' என்பது.

நோயைக் குணப்படுத்தாமல், தேக உஷ்ணத்தை மட்டும் தணிக்கப் பாடுபடுவதில் பயனில்லை. திட்டத்தை வைத்துக் கொண்டே விலைகளைக் குறைக்க ஏதேனும் நடவடிக்கை எடுப்பதானால் அது கண்ட்ரோல் பேய்களையும், லைசென்சுப் பிசாசுகளையும் தலைவிரித்தாடச் செய்வதாகவே முடியும். கள்ள மார்க்கெட்டுக்கு விதை ஊன்றுவதாகவே ஆகும். இதன் விளைவாக விலைவாசிகள் இன்றிருப்பதைவிட பயங்கரமாக உயரும்.

இந்த ராட்சதத் திட்டங்கள் இப்போது தேவையே அல்ல என்னும் சுதந்திரக் கட்சியின் வாதத்தை மக்கள் இப்போதேனும் புரிந்து கொள்ள வேண்டும். சமீபத்தில் 'வரி எதிர்ப்பு வாரம்' கொண்டாடியபோது இதனையே சுதந்திரக் கட்சி வலியுறுத்தி

யது. திட்டம்—வரிகள்—விலைவாசி இவை மூன்றும் பிரிக்க முடியாத தொடர்பு கொண்டவை என்றறிந்து மூல காரணத்தைச் சரி செய்ய முனைவதே விவேகமாகும்.

மறியல் செய்தால் சர்க்கார் அதற்கு எதிரிடையாகச் சில்லறைக் காரியங்கள் செய்வார்கள்; கோபமூட்டுவார்கள். பலாத்காரத்தைக் கிளப்புவார்கள். கிளப்பிவிட்டு மறியல் செய்பவர் பேரில் குற்றம் சாட்டுவார்கள். இவையெல்லாம் மறியலும் ஊர்வலங்களும் செய்து நாற்பது ஆண்டுகளுக்கு மேல் அநுபவம் பெற்ற காங்கிரஸ்காரர்களுக்குத் தெரியும். தி.மு.க.வும் அந்த அநுபவத்தைத் தற்போது பெற்று வருகிறது.

## ஆர்ப்பாட்டம் எதற்கு?

கல்லூரிகளில் தமிழ் மூலம் போதிக்கும் முறைக்குப் போதிய ஆதரவு இல்லை என்று அமைச்சர் பக்தவத்ஸலம் அவர்கள் கூறியது கோவை மாணவர்களுக்குப் பிடிக்கவில்லை. அவர் ஏதோ தவறுதலாகச் சொல்லி விட்டது போலவும், உண்மையில் இம்முறைக்கு அமோக ஆதரவு இருப்பது போலவும் எண்ணி, அவர்கள் ஸ்டிரைக் செய்து தங்கள் கண்டனத்தைத் தெரிவித்திருக்கிறார்கள்.

இரண்டு ஆண்டுகளாகக் கோவை ஜில்லாவில் நான்கு கல்லூரிகளில் பி. ஏ. வகுப்பில் கணிதம், விஞ்ஞானம் நீங்கலாக, மற்றப் பாடங்கள் தமிழில் சொல்லித் தரப்படுகின்றன. தமிழில் படிக்க முன் வருபவர்களுக்குச் சம்பளம் கிடையாது. மாதம் 30 ரூபாய் உபகாரச் சம்பளம்கூட உண்டு. இவ்வளவு சலுகைகள் அளித்தும் ஒரு கல்லூரியில் 14, மற்றொன்றில் 12, மூன்றாவதில் 3, நான்காவதில் 14 மாணவர்கள்தான் படிக்கின்றனர். தமிழ்ப் போதனை முறைக்கு அதிகமான ஆதரவு இருப்பதானால் மாணவர்கள் இந்த இரண்டு ஆண்டுகளில் கல்லூரிகளில் வந்து குவிந்திருக்க வேண்டுமே! முதல் ஆண்டில் இருந்த

ரிப்பேர் திருப்தியில்லை!



எண் ணிக்கையை விட இரண்டாவது ஆண்டில் மாணவர்களின் எண்ணிக்கை குறைந்துதான் இருக்கிறது.

1949–50 ஆண்டுகளில் இதே முறை பரீட்சார்த்தமாக அண்ணாமலை சர்வ கலாசாலையில் மேற்கொள்ளப்பட்டது. இரண்டு வருஷ அனுபவத்துக்குப் பின்னர் போதிய மாணவர்கள் ஆர்வம் காட்டாததால் கைவிடப் பட்டது.

மாணவர்கள் பெருமளவில் தமிழில் உயர் கல்வி கற்க முன் வராமைக்கு, பல காரணங்கள் உள்ளன. இதுதான் உண்மை நிலை. இதில் ஆர்ப்பாட்டத் துக்கும் உணர்ச்சி வேகத்துக்கும் இடமே இல்லை.

உண்மையில்போதனைமொழிப்பிரச்னை என்ன என்பதையே யாரும் புரிந்து கொள்ளக்காணோம். ஆங்கிலத்தில் தான் நல்ல பாடப் புத்தகங்களும் துணைப் புத்த கங்களும் உள்ளன. அவற்றை மாண வர்களுக்குப் புகட்டும்போதே அவசிய மான இடங்களில் தாய் மொழியில் கூறி விளங்கவைப்பது தவறல்ல. ஆங்கில இலக்கியத்தைக் கூட இவ்வாறு தமிழ்ப் போதனையால் தெளிவு படுத்தலாம். ஆனால் எந்த மொழியின் உதவிகொண்டு கற்பித்தாலும் மாணவர்கள் ஆங்கிலத் தில் விஷயங்களை அறிவதே இலட்சிய மாக இருக்க வேண்டும். அப்போதுதான் அகில இந்தியாவிலும், ஏன், அகில உலகத்திலுமே அவர்கள் கற்ற கல்வி பயன்படும். அவர்களும் அப்போதுதான் தாங்கள் பெற்ற கல்வியின் பலன்களை எங்கும் பெற முடியும். பாட புத்தகத்தி லிருந்து, பேராசிரியரின் விரிவுரைகள் வரை எல்லாமே ஏதோ ஒரு மொழியில் தான்— ஆங்கிலம் அல்லது பிரதேச மொழியில் தான் — இருக்க வேண்டும்; அதுவே போதனை மொழி என்று எண்ண வேண்டிய அவசியம் கிடையாது.

கல்லூரி மாணவர்கள், விருப்பு வெறுப்பின்றி இந்தப் பிரச்னையைத் தங்களுடைய வருங்கால நலனைக் கருத் தில் கொண்டு சீர்தூக்கி ஆலோசித்துப் பார்க்க வேண்டும். அரசியல் வாதிகள் மற்றக் காரணங்களை மனத்தில் கொண்டு வைத்துள்ள இந்தப் போதனைமொழி மாற்றம் என்ற கண்ணியில் மாணவர்கள் விழலாகாது என ராஜாஜி அவர்களுக்கு அன்புடன் எச்சரித்திருக்கிறார். பிர தேச மொழியில் மாணவர்கள் சுலப மாகப் பரீட்சைகள் எழுதி, மார்க்குகள் வாங்கிப் பட்டம் பெற்று விடலாம்; ஆனால் நாடு பதினைந்து சின்னஞ்சிறு தனிப்பட்ட தீவுகளாகச் சிதறிவிடும்; மாணவர்கள் பெறும் பட்டங்கள் காகி தப் பட்டங்களாகவே இருக்கும்; அகில இந்திய அந்தஸ்தில் அவர்களால் போட்டியிட முடியாது என்று அறி வுரை வழங்கி யிருக்கிறார். இந்த நல் லுரைக்கு மாணவர்கள் செவி சாய்ப் பார்களாக.

# என்ன சேதி?

## தீவிரச் சாகுபடியின் லட்சணம்

சென்னை மாநிலத்தில் உணவு தான்ய உற்பத்தியைப் பெருக்கத் தீவிர விவசாய முறை தஞ்சை மாவட்டத் தில் மேற்கொள்ளப்பட்டது. அமெரிக்க ஸ்தாபனமாகிய ஃபோர்ட் நிலையத் தின் (Ford Foundation) உதவி யுடன் சென்னை அரசாங்கத்தின் கூட் டுறவின் கீழ் செயல்படுத்தப்பட்ட இம் முறையினால் என்ன பலன் கிடைத் தது என்று சட்டசபையில் கேட்கப் பட்ட கேள்விகளுக்கு விவசாய அமைச் சர் திரு கக்கன் அவர்கள் அளித்த பதில் விவசாய மக்கள் அனைவரும் கவனிக்கத் தக்கது.

சாதாரணமாக இதுவரையில் மேற் கொள்ளப்பட்ட விவசாய முறையில் ஏக் கருக்குச் சராசரி 130 ரூபாய் செலவில் சுமார் 2160 ராத்தல் நெல் கிடைத்து வந்ததாம். இதனுடைய மதிப்பு ரூ. 348.40. தீவிரச் சாகுபடி மூலம், ஏக்க ருக்கு 182 ரூபாய் செலவில் 2600 ராத் தல் நெல் கிடைத்ததாம். இதனுடைய மதிப்பு ரூபாய் 400. இதில் சர்க்கார் சிப் பந்திகளின் மேற்பார்வைக்கும் நிர்வா கத்துக்கும் செய்த செலவு அடங்கியிருக் கிறதா என்று தெரியவில்லை. ஃபோர்ட் ஸ்தாபனத்தினர் செய்த செலவும் இதில் சேர்ந்திருக்காது. அப்படி யிருந் தும், ஏக்கருக்கு ரூ. 182 செலவு ஆகி யிருக்கிறது. ஆகவே ஓர் ஏக்கர் நிலத்தி லிருந்து அதிகப்படியாகக் கிடைத்துள்ள 51.60 ரூபாய் மதிப்புள்ள தானியத் துக்காக ஏற்பட்ட அதிகச் செலவு ரூ. 52.00. வரவை விடச் செலவு சற்றுக் கூடுதலே.

52 ரூபாய் செலவு செய்து 51 ரூபாய் வருமானம் கிடைக்கும் தொழிலை லாபகரமான தொழில் என்று யாரும் சொல்ல மாட்டார்கள். இவ்வாறு முத லீடு செய்ய யாரும் முன்வர மாட் டார்கள். காவிரியால் வளமாக்கப் பட்ட பூமி என்றும், தென்னகத்தின்

களஞ்சியம் என்றும், வானிலையை எதிர்பார்க்காமலே விவசாயம் நடைபெறும் பாசன வாய்ப்புக்கள் நிறைந்தது என்றும் பெயர் பெற்ற தஞ்சையில் இந்த நிலை என்றால் ஜல வசதிகள் குறைவாக உள்ள இதர மாவட்டங்களில் விவசாயம் எந்த நிலையில் நடைபெறும் என்பது சொல்லாமலே விளங்கும்.

விவசாயம், முக்கியமாக ரயத்துவாரிப் பிரதேசங்கள் மிகுதியான தென்னகத்தில், கட்டுப்படியாகாத ஒரு தொழிலாகத்தான் நடைபெறுகிறது என்பதற்கு இந்தப் புள்ளி விவரங்கள் சான்று கூறுகின்றன. இந்த நிலையில் விவேகத்துடன் செயலாற்றும் எந்த அரசாங்கமும் விவசாயிகளுக்கு ஊக்கமளிக்கக்கூடிய நடவடிக்கைகளை மட்டுமே மேற்கொள்ளும். ஆனால் நமது மாநில சர்க்காரின் போக்கு இதற்கு நேர்மாறானது. தீவிரச் சாகுபடி முறை கொள்கையாகவே ஒப்புக் கொள்ளப் பட்டு விட்டதாம். எனவே இது தீவிரமாக அமுல் நடத்தப்படுமாம். எப்படி இருக்கிறது? பகுத்தறிவுக்குச் சீட்டுக் கொடுத்துவிட்டு, புது தில்லியிலிருந்து வரும் தாக்கீதுகளையும் திட்டக் கமிஷனின் நீட்டோலைகளையும் லட்சியங்களாக அரியாசனத்தில் ஏற்றிவைத்துச் செயல்படத் தொடங்கினால், விவசாயம் எப்படி உருப்படும்?

## பாடப் புத்தகம் படும்பாடு

பள்ளிகளில் இடம் கிடைப்பது பெரும் பிரச்னை. இடம் கிடைத்து விட்டால் பாடப் புத்தகங்களைச் சேகரிப்பது அதைக்காட்டிலும் பெரிய பிரச்னை. நமது மாநிலத்தில் மட்டும் அல்ல. இதர ராஜ்யங்களில் கூட இப்படித்தான் இருக்கிறதாம். பரோடா நகரத்தில் சில நாட்களுக்கு முன் பாடப் புத்தகம் கிடைக்க வில்லையே என்று ஒரு சிறுவன் தற்கொலையே செய்துகொண்டு விட்டானும். மைசூரில் பாடப் புத்தகம் தயாரித்து விநியோகிப்பதில் வெறுப்பூட்டும் அளவுக்குக் கால தாமதம் ஏற்படுகிறதாம். கேரளத்திலோ என்றால் சமீபத்தில்தான் 9 லட்சம் ரூபாய் மதிப்புள்ள பாடப் புத்தகங்கள் குப்பைக் காகிதம் போல் சுமார் ஐம்பதினுயிரம் ரூபாய்க்கு விற்கப்பட்டன. இதற்கெல்லாம் காரணம் எடுத்ததையெல்லாம் தேசிய மயமாக்கிவிட வேண்டும் என்ற மோகம்தான். தேசியத் தொழில்களும் தேசிய நிர்வாகமும் எந்த லட்சணத்தில் நடைபெறுகின்றன என்பது நன்கு தெரிந்தும், இந்த மோகம் மட்டும் குறையவில்லை.

## நல்ல காரியத்துக்குத் தடை

மதுரை மீனாட்சியம்மன் ஆலயத் திருப்பணிக்கு மதுரை நகரசபை நன்கொடையாக அளிக்கத் தீர்மானித்த ரூ. 15000 ரூபாயைக் கொடுக்கக் கூடாது என்று ஆட்சேபம் தெரிவிக்கப்பட்டதாம். காரணம் மத சம்பந்தமான ஒரு செலவை மதச் சார்பற்ற கொள்கையைக் கடைப்பிடிக்கும் நாட்டிலுள்ள நகராண்மைக் கழகம் ஏற்றுக் கொள்ளக் கூடாது என்பதே. மதுரையின் பெருமையே இந்த ஆலயத்தைத் தழுவி நிற்பது. மதுரை ஆலயம் சிற்பக் கலையின் சிகரம். வெளி நாட்டினரும் கண்டு வியப்பது. தென்னாட்டின் கலைச் செல்வங்களிலெல்லாம் தலைச் செல்வமாகத் திகழும் திருக் கோயில்களில் தலைமை ஸ்தானம் பெற்றுப் பொலிவது மீனாட்சியம்மன் ஆலயம். புராதனச் சின்னங்களைப் பாதுகாப்பதும், அவற்றைக் கலை அழகு கெடாமல் பராமரிப்பதும் நகராண்மைக் கழகங்கள், ராஜ்ய மத்திய அரசாங்கங்களின் கடமையாகும். அம்முறைப்படியே மதுரை கோபுரத் திருப்பணிக்கு உதவ நகரசபை முன் வந்ததைப் பாராட்ட வேண்டுமே தவிர எதிர்க்க வேண்டியதில்லை.

## பஸ் கட்டணங்களில் ஜாலவித்தை

சர்க்கார் பஸ் கட்டணங்கள் உயராது என்று சமீபத்தில்தான் தொழிலமைச்சர் உறுதி கூறினர். ஆனால் நேரடியாகக் கட்டணங்களை உயர்த்துவதற்குப் பதிலாக மறைமுக நடவடிக்கையை அவர் இப்போது மேற்கொள்ளப் பார்க்கிறார். இப்போது சென்னைக்குள் பஸ் கட்டணங்கள் 7 நயா பைசாவிலிருந்து ஆரம்பித்து மும்மூன்று பைசாக்கள் வீதம் உயர்ந்து கொண்டே போகின்றன. இந்த முறையில் சில்லறை கொடுக்க வேண்டிய கஷ்டங்கள் ஏற்படுகின்றனவாம். இதைத் தவிர்ப்பதற்காக முதல் கட்டத்துக்கான கட்டணத்தைப் பத்து நயா பைசாவாக்கி அதிலிருந்து கட்டத்துக்கு ஐந்து பைசா வீதம் உயர்த்திக் கொண்டு போக உத்தேசித்திருக்கிறார். எந்தச் சாக்கைக் காட்டியேனும் மக்களிடமிருந்து அதிகப் பணம் பறிப்பதே காங்கிரஸ் சர்க்காரின் கொள்கையாக இருந்து வருகிறது. முதல் கட்டத்துக்கான கட்டணத்தை ஏன் ஐந்து பைசாக்களாக நிர்ணயிக்கக் கூடாது? குறைந்த பட்சக் கட்டணம் ஓரணுவிலிருந்து ஏழு நயா பைசாவாக உயர்ந்து இப்போது பத்து பைசாவாகி விட்டது. க்ஷேமநல சர்க்காரைப் பார்த்தீர்களா?




ஆகாயத்துக்கும் மேகத்துக்கும் எவ்வாறு தொடர்பு கிடையாதோ அதே போல எனக்கும் — அதாவது ஆத்மாவுக்கும் — உடலுக்கும் எவ்விதத் தொடர்பும் கிடையாது. எனவே உடலுக்குரிய விழிப்பு, கனவு, உறக்கம் முதலிய நிலைகள் என்னை எவ்விதம் தீண்டும்?—விவேக சூடாமணியில் ஸ்ரீ ஆதி சங்கரர்

# 12. இல்லற நாடகம்

எல்லாமான பரம் பொருளோடு ஒன்றியிருப்பவர்களுக்குத் தெரியாதது ஒன்றுமே கிடையாது. குடும்ப சுகத்தைப் பற்றியும் ஆசாரிய சங்கரருக்குத் தெரியாது என்பதில்லை. எனினும் விவகார உலகத்தில் அநுபவ பூர்வமாக மட்டுமே அறியக் கூடிய விஷயங்களை ஒரு துறவி கூறினால் அவனது துறவறத்துக்கே அல்லவா மாசு கற்பிக்கப்படும்? அதோடு மட்டுமில்லை. பாமர மக்கள் ஒரு துறவியின் தவற்றைக் கொண்டு துறவறத்தையே அல்லவா பழிக்க முற்படுவார்கள்? சரஸவாணிக்கு விடை கூறுவிடிலோ சங்கரர் மண்டன மிச்ரருக்குத் தோற்றதாக ஏற்படும்; நிபந்தனைப்படி இல்லற வாழ்க்கையை ஏற்க நேரிடும். விபரீதத்திலேயே ஒரு வேடிக்கை! தாம்பத்திய இன்பம் பற்றிச் சொல்லாதற்குத் தண்டனையாக தாம்பத்திய வாழ்வு தொடங்க நேரிடும். என்ன சிக்கலான நிலைமை?

சங்கரர் பிரமித்து அமர்ந்திருந்தார். சரஸவாணி வெட்கத்தினால் தனது வெண் முகத்தில் இரத்தம் பாயக் கூசிப்போய் அமர்ந்திருந்தாள். சிக்கலைத் தீர்க்க ஏதும் வழியுண்டோ என்று அவள் உள்ளம் சிந்தனையில் ஆழ்ந்தது. உடனடியாக உபாயம் ஒன்றும் தோன்றாததால் அந்தப் பிரச்னையைச் சிறிது காலம் ஊறப் போட்டுப் பார்க்கலாமே என்று தோன்றியது அவளுக்கு. 'சுவாமி, தங்களுக்கு ஒரு மாத காலம் அவகாசம் தருகிறேன். என் வினாவுக்கு விடை தெரிந்து வாருங்கள்' என்றாள்.

அமைதியே உருவான ஆசாரிய சங்கரரும் அலைபாயும் உள்ளத்தினராக, கால் போனபடி சென்று கொண்டிருந்தார். குருவை இடைவிடாது பின்பற்றினர் பத்மபாதரும் மற்ற சீடர்களும்.

வனம் ஒன்றில் சஞ்சாரம் செய்து கொண்டிருந்த பகவத் பாதரின் கண்களில் திடீரென ஒரு சோகம் படிந்தது. மறு விநாடியே அது மாறி ஓர் ஒளியும், உற்சாகமும் அவற்றில் சுடர்விட்டன.



அவர் கண்ட காட்சி என்ன? வனத்தில் வேட்டையாட வந்திருந்த அமருகன் என்ற அரசன் ஒரு விருட்சத்தின் கீழ் மாண்டு விழுந்திருந்தான். அவன் அருகில் யாருமே இல்லை. வழி தவறி எங்கேயோ தன்னந் தனியாக வந்து கால கதிக்கு ஆளாகி விட்டான். அவன் சடலத்தைக் கண்டதில் ஆசாரியருக்குச் சோகமேற்பட்டது நியாயம்தான். உடனேயே ஏன் ஒரு தெளிவும், தெம்பும் ஏற்பட வேண்டும்?

''பத்மபாத! என் உள்ள உளைச்சல் தீர ஒரு வழி கிடைத்து விட்டது!'' என்றார் சங்கரர் மகிழ்ச்சியுடன்.

''இதோ இந்த அரசன் உடலில் நான் பிரவேசிக்கப் போகிறேன். அவனுடைய ராஜதானிக்குத் திரும்பப் போகிறேன். அரசன் அமருகனாகவே அங்கு சிறிது காலம் ராஜ்ய பாரம் வகிக்கப் போகிறேன். அதோடு சரஸவாணியின் வினவுக்கு அநுபவ பூர்வமாகவே விடை தெரிந்து கொள்ளப் போகிறேன். அவள் அளித்த ஒரு மாத கெடுவுக்குள் மீண்டும் அமருகன் உடலிலிருந்து வெளிப்பட்டு இதோ இந்த சரீரத்திலேயே புகுந்து விடுவேன். அது வரை இந்த என் உடல்...''—உடலைத் தமது என்று கூறிக் கொள்ளும் போது சங்கரரின் நாவு தடுமாறியது. சுதாரித்துக் கொண்டு, ''இந்த என் உடல், அதோ, அந்தக் குகையில் இருக்கட்டும். ஆத்மாவைக் காமம் பாதிக்காது. இப்போது நான் தரித்துள்ள உடலாலும் போகம் துய்க்கக் கூடாது. எனவேதான் இந்த முடிவு'' என்றார்.

பத்மபாதரின் முகம் வெளிறியது. கலவரத்தால் குரல் நடுங்க, தாம் ஒரு போதும் எதிர் வார்த்தை பேசியறியாத குருவின் தீர்மானத்துக்கு மாற்றுக் கருத்து தெரிவிக்க முற்பட்டார்.

''சுவாமி! என்னை க்ஷமிக்க வேண்டும்! தங்கள் முடிவைக் கண்டு நான் அஞ்சுகிறேன். ஆத்மாவாகவே ஒளிர்பவர் தாங்கள். சூதாடும் இடத்தில் இருந்தாலும், கர்ப்பக் கிருகத்தில் இருந்தாலும் ஒரு தீபத்தை அதன் சுற்றுப்புறம் எப்படித் தொடாதோ—எனினும் அது எப்படித் தனது சூழலைத் துலங்க வைக்கிறதோ — அதே போலத் தாங்கள் ஞானியர் சதஸில் இருந்தாலும், இந்த அரசனின் அந்தப்புரப் பெண்களிடை இருந்தாலும் தங்களைச் சூழல் தொடாது. எனினும் இதை சாமானிய மக்கள் புரிந்து கொள்வார்களா? உடலை விட்டு, உடலுக்கு மேலாகவே, எப்போதும் ஆத்ம வஸ்துவின் உறையும் மனிதர்களுடைய உடல் எங்கிருந்தாலும் அது அவர்களுக்கு ஒரு விஷயமாகாது என்று சாதாரண ஜனங்கள் தெரிந்து கொள்வார்களா? வேண்டாம் ஐயனே, இந்த விளையாட்டு! தாங்கள் உடல், ஆத்மா பற்றிச் சொல்வதெல்லாம் சாமானிய மக்களுக்குப் புரியாது. அபவாதத்துக்கு ஆளாகாதீர்கள், என் சுவாமி!'' என்று விம்மினார் பத்மபாதர்.

தமது பொற்கரத்தால் பத்மபாதரைத் தடவிக் கொடுத்தார் சங்கரர்.

''இதை ஏன் நீ எனக்கு ஏற்பட்ட சோதனையாக எண்ணித் துன்புறுகிறாய்? நான் இந்தச் சோதனைக்கு ஆளாகாவிட்டால் சத்தியத் தத்துவத்துக்கே சோதனை நேரும் என்பதை ஏன் மறந்தாய்? அதைத் தீர்ப்பதற்காக நான் அபவாதத்தையும் ஏற்கத் தயாராக இருக்கிறேன். துறவியாகவே இருந்து இல்லற இயலைப் பற்றிக் கூறினால் நான் ஒரு வேஷதாரி என்று எண்ணுவார்கள். அதனால் நீ போற்றிப் புகழும் எனக்கே கூட, இந்தப் பரகாயப் பிரவேசத்தை விட அதிக இழுக்கு ஏற்படும். அல்லது சரஸவாணியிடம் தோற்றுப் போவதால் பாதகமில்லை என எண்ணுகிறாயா? என்னுடைய வெற்றி தோல்வியைப் பற்றி நான் கவலைப்படவில்லை, பத்மபாத! ஆனால் அவதார காரியத்தையே தோல்வியுறச் செய்வதற்கில்லையே....''

தம்மை மறந்து சங்கரர் அவதாரத்தைப் பற்றிக் குறிப்பிட்டு விட்டார். பத்மபாதரும் மௌனமானார். நாராயணனின் அம்சமல்லவா அவர்? அந்த நாராயணன் ராமனாகப் பிறந்து வாலி வதம் செய்த முறைக்காக எவ்வளவோ அபவாதத்தைப் பெற்றவன் அல்லவா? கண்ணனாகத் தோன்றி குருக்ஷேத்திரத்தில் மற்றவர் செய்யத் தவறிய பழி பாவங்களை முன் வந்து ஏற்றவனுமிற்றே அவன்? தான் படைத்த மக்களுக்கு ஏற்படும் சோதனைகளை விடப் பெரிய சோதனைகளுக்குத் தானே ஆளாவதல்லவா அவதாரங்களின் விசேஷம்?

பத்மபாதரின் பத்ம நயனங்களிலிருந்து கண்ணீர் தாரை தாரையாக வழிந்தது. தொண்டையை அடைக்க அவர் கூறினார்:

''ஐயனே! அன்றைக்குக் காசி க்ஷேத்திரத்தில் புலையன் நெருங்கிய போது, பேத புத்தி சற்றுமில்லாத தாங்கள், உலகுக்குப் பாடம் புகட்ட வேண்டும் என்பதற்காகவே பேத உணர்ச்சி உள்ளவர்போல நடித்தீர்கள். பிறருக்குப் போதிக்கும் அளவுக்கு உள்ளத்தால் தூய்மை பெறாதவர்போல் நடித்தீர்கள். இப்போது உடலாலும் அதே அபக்கியாதியைப் பெற முனைந்து விட்டீர்கள்.''

துக்கச் சுழலில் தடுமாறிய பத்மபாதரால் மேலே பேச முடியாதபடி அவருடைய வாக்கு நெஞ்சிலேயே சிக்கிச் சுழன்றது.

தமது நீண்ட, மெல்லிய, திருவிரல்களால் பத்மபாதரின் கண்களைத் துடைத்துவிட்டார் சங்கரர். கண்ணீரை விடக் குளிர்ந்த அந்த ஸ்பரிசம் போதாதென்று குளிரக் குளிரப் பேசலானார்.

''இதற்கே இவ்வளவு வருந்துகிறாயே, பத்மபாத! இன்னொரு காலம் வரப் போகிறது. இப்போது இல்லற வாழ்வால் துறவறத்துக்குப் பங்கம் ஏற்படும் என்று எண்ணும் நான் அப்போது என் துறவறத்துக்கே பங்கம் விளைவித்துக் கொள்ளப் போகிறேனே! ஆம், இப்போது அறிவு மூலம் சரஸ்வாணியை வெல்வதற்காகத் துறவறத்தைக் காக்கும் நான் அப்போது அன்புக்காக அதையும் நீத்துவிடப் போகிறேன். இப்போதெல்லாம் போல அது வெறும் நடிப்பாக இருக்கப் போவதில்லை. தாயன்பு எவ்வளவு உண்மையோ அவ்வளவு உண்மையாக என் நியமங்களைக் கைவிடப் போகிறேன்....அதை ஏற்க நீ உன் மனத்தைக் கெட்டிப்படுத்திக் கொள்ள வேண்டாமா?''

பத்மபாதரும் மற்றச் சீடர்களும் வாயையே திறக்கவில்லை. 'சித்தன் போக்கு; சிவன் போக்கு' என்பார்கள். சிவனே சித்தனாக வந்துள்ள ஆசாரியரின் இயல்பை யார் ஆழம் காண முடியும் என்று எண்ணித் தெளிந்தார்கள்.

யோக சாஸ்திரம் உணர்ந்த ஆசாரியர் தம் கால் பெரு விரலிலிருந்து பிராணனை மேலே வாங்கி பிரமரந்திரத்தால் வெளியே சென்று அமருகன் உடலுக்குள் புகுந்தார். அவரது உடல் ஒரு குகையில் வைக்கப்பட்டது.

வேட்டைக்குச் சென்ற அமருக மன்னன் திரும்பி வந்து விட்டதில் தலைநகரம் திமிலோகப்பட்டது. தங்களுடைய அரசன் எப்போதையும்விட அதிகப் பொலிவுடன் விளங்குவதைக் கண்டு அமருகனுடைய பிரஜைகள் வியப்புற்றனர். அவனுடைய மதி நுட்பம் திடீரென்று வளர்ந்திருப்பதைக் கண்ட மந்திரிமார்களுக்கு மலைப்புத் தட்டிற்று. சிற்றின்பத்தையே பெரிதாகக் கருதும் தங்கள் கணவன் இப்படி ஞானியாக இருப்பது எதனாலோ என்று ராணிகளுக்குப் புரியவில்லை.

தினவு எடுத்தால் சுவரில் முதுகைத் தேய்த்துக் கொள்ளுகிறோம். நமக்கு இதமாக இருக்கிறது. எனினும் நம்முடன் சம்பந்தப்பட்டு நமக்குச் சுகமளிக்கும் அந்தச் சுவரென்னவோ எந்த உணர்ச்சியும் அநுபவிப்பதில்லை அல்லவா? கோபியர்கள் கிருஷ்ண பரமாத்மாவுடன் கூடியிருக்கையில் இவ்வாறேதான் அவன், தான் ஓர் உணர்ச்சியும் அநுபவிக்காமல், அவர்களுக்கு மட்டும் இன்பம் அளித்தான். இவ்விதமே சங்கரரும் இல்லற இயலை ஏற்று நடத்தினார்.

ஜகத்குரு என்றும், ஆசாரியர் என்றும், அறிஞர் என்றும், அருளாளர் என்றும் எந்த உருவைக் கண்டு மக்கள் கொண்டாடினார்களோ அந்தத் திருஉடலையே தமதெனக் கருதாத ஆசாரியர் அமருகன் உடலைத் தமதென எண்ணுவாரா என்ன? மரத்திலிருந்த இலை சிவக்ஷேத்திரத்தில் விழுந்தாலும், நாற்சந்தி முனையில் விழுந்தாலும் அதைப் பற்றி மரம் எப்படி ஒரு சிந்தையும் கொள்வதில்லையோ, அதுபோல் ஆத்மாவில் நிலைத்த ஞானி உடல் எங்கு கிடந்தாலும் அதைப் பொருட்டாக எண்ணுவதில்லை என்று கூறியவர் அல்லவா அவர்? நம்முடைய நிழல் தண்புனலில் விழுந்தாலோ, கொதிக்கும் எண்ணெயில் விழுந்தாலோ அந்தத் தட்ப வெப்பங்கள் தம்மைத் தீண்டாதது போல உடலின் சூழல் உயிரைத் தீண்டாமல் வாழ்ந்த மகாஞானி அல்லவா ஆசாரியர்? உலகமே ஒரு [illegible]டகமெனக் கருதிய அவர் அந்த [illegible]துக்குள் நடக்கும் சம்பவங்களை உண்மையென எண்ணுவாரா? எனினும் உலகில் சத்தியத் தத்துவம் நிலைபெறவேண்டும் என்பதற்காக இப்படி ஒரு நாடகம் நடித்தார்.

மந்திர, யோக சாஸ்திரங்கள் கற்ற அமைச்சர்களுக்கு அரசனைக் குறித்து ஏற்பட்ட ஐயம் வலுத்தது. கூடு விட்டுக் கூடு பாயும் வித்தை நடந்திருக்கிறது என்று முடிவு செய்தனர். அந்த இன்னொரு கூட்டைத் தேடிப் பிடித்துக் கொளுத்தி விட்டால், இந்தக் கூட்டில் இருக்கும் பிராணனை மேலும் சிறிது காலம் தம்முடனேயே நிறுத்திக் கொள்ளலாமே, மதி மன்னனின் ஆட்சியைத் தொடர்ந்தும் பெறலாமே என்று எண்ணினார்கள்.

வந்தது ஆபத்து! வனத்துக் குகையிலிருந்த சங்கரரின் உடலை அவர்கள் தேடிக் கண்டு பிடித்து விட்டார்கள். பரமேசுவரன் உறைந்த திருக்கோயிலாகிய அந்தப் புனித சரீரத்தை— எழுதவே கை கூசுகிறது — சிதையின் மேல் வைத்துத் தீயும் இட்டு விட்டுத் திரும்பினார்கள்.

காலம் நெருங்கி விட்டதே என்று துடித்த இதயத்தினராகச் சீடர்கள் வனம் வந்து பார்த்தால் சிதையில் எரிந்து கொண்டிருக்கிறது ஆசாரியரின் திவ்விய தேகம்!

அதே சமயத்தில், பத்மபாதரின் இதயத்திலிருந்து பீறிட்டெழுந்த பக்தியே பற்றி இழுத்து வந்தது போல் சங்கரரது பிராணனும் அமருகன் உடலிலிருந்து மீண்டு வந்து பழைய உடலில் பிரவேசித்தது.

சிதையிலிருந்து எழுந்து வந்தார் சங்கரர். பெரு மகிழ்ச்சி அடைந்த சிடர்கள் மறுகணமே இதயம் பதறினர். சங்கரரது கையைத் தீ கருக்கிய பின்னரே அவருடைய ஆவி அந்த உடலை அடைந்திருக்கிறது. அடியார்களுக்கு அபயம் கூறும் அந்த அம்புஜ ஹஸ்தம், ஞான சாம்ராஜ்யத்தின் செங்கோலான தண்டத்தை அனவரதமும் பிடித்துள்ள அந்த அழகுக் கைமலர் எரிந்து போவதா? அந்தக் கையில் ஏற்பட்ட சுடு புண்ணைக் கண்டு தம் கண்ணில் சுட்டது போலவே துடி துடித்துப் போனார் பத்மபாதர்.

''சுவாமி! என் லக்ஷ்மி நரசிம்மனைத் துதித்துத் தங்கள் கையைத் திரும்பப் பெறுங்கள்! உலகுக்கெல்லாம் கை கொடுத்துக் காக்க வந்த தங்களைக் கையில்லாமல் பார்க்க மாட்டோம். தங்களுக்கு உடல் பொருட்டல்ல என்பதால் அலட்சியமாக இருக்காதீர்கள், ஐயனே! மனத்தை ஒரு முகமாக்கிப் பிரார்த்திக்கக்கூட இயலாமல் நான் தத்தளிக்கிறேன். அதனால் தான் தங்களையே பிரார்த்திக்கச் சொல்கிறேன். சுவாமி, எங்களுக்காக உங்கள் கையை மீளவும்வேண்டிப் பெறுங்கள்'' என்று அலறினார் பத்மபாதர்.

சங்கரர் சிஷ்யருக்காக மனம் இறங்கினார். சிஷ்யருடைய இஷ்ட தெய்வமான நரசிம்ம மூர்த்தியைக் குறித்துத் துதி செய்யலானார்.

பொய்யோ, மெய்யோ, உண்மையோ, நடிப்போ தாமும் சம்சாரத்தில் சிறிது காலம் விழும்படியாயிற்று அல்லவா என்பதை எண்ணிக் கசிந்தபடி பாடினார். ''சம்சாரம் என்று ஒரு மரம்; பாப விதையை ஊன்றியதால் தோன்றிய மரம்; கர்மங்கள் என்ற கிளைகள் கொண்ட மரம்; புலன் என்னும் இலைகள் துளிர்க்கும் மரம்; காமம் மலரும் மரம்; அக்காம மலர் துன்பமாகப் பழுக்கும் மரம். அந்தச் சம்சார மரத்தின் மேலேறி விழுந்து விட்டேன்! ஹே தயாளோ! லட்சுமிநாயக நரசிம்மா, கை கொடுத்தருள்வாய்!'' * என்று மனமுருக வேண்டினார். செய்யாத பிழையைத் தாமாக ஏற்று, அந்தப் பிழையைச் செய்யும் நாமெல்லாம் எப்படி உருக வேண்டும் என்பதைக் காட்டி விட்டார்.

ஆசாரியர் வேண்டியது வீண் போகுமா, என்ன? நரஹரியின் அருளால் மீண்டும் கையைப் பெற்றார் சங்கரர்.

பதின்மூன்றே சுலோகங்கள்கொண்ட இந்த லக்ஷ்மீ — ந்ருஸிம்ம ஸ்தோத்திரம், படிப்பவர் துன்பங்களைத் தீர்த்து வைப்பதால் ''சங்கட நாசன'' என்ற அடைமொழியையும் பெற்றிருக்கிறது.

அப்புறம் கேட்பானேன்! சரஸவாணியும் சங்கரருடன் நடத்திய போட்டியில் தோற்று விட்டாள்.

கணவன் துறவு பூண இருப்பதால், தான் மீண்டும் பிரம்ம லோகம் சென்று

---

* ''மம தேஹி கராவலம்பம்'' என்பதில் ''எனக்குக் கை ஏனும் பிடிப்பைத் தருவாய்'' என்றும் ''என் கைப் பிடிப்பாக ஆவாய்'' என்றும் இரு பொருள் கொள்ளலாம்.



வாணியுடன் ஐக்கியமாகப் போவதாகத் தெரிவித்தாள். சங்கரர் அவள் அவ்வாறு செய்யாதவாறு வன துர்க்கா மந்திரத்தால் அவளைக் கட்டினார். அவளது சாந்நித்தியமானது தாம் விரும்பித் தெரிவிக்கும் இடத்தில் உறைந்து அருள் புரிய வேண்டுமெனக் கேட்டுக் கொண்டார். சரஸவாணியும் அதற்கு இசைந்தாள்.

இதற்கேற்பவே, பின்னர் ஆசாரியர் சிருங்ககிரியில் மடஸ்தாபனம் செய்த போது அங்கு சாரதையாகத் தனது சாந்நித்தியத்தைத் ததும்ப வைத்தாள்.

சங்கரனும், சரஸ்வதியும் சோதரர்களென ஓர் ஐதிஹ்யம் உண்டு. சுத்த சத்துவமான வெண்மை நிறம் தாங்கி, ஞானமயமாக விளங்கும் மூர்த்தியர் அவர்கள். சிருங்ககிரியில் தமையன் சொற்படித் தங்கையாக உறைந்தாள் அவள். அதோடு அவர் வழித்தோன்றலாகிய பல ஆசாரியர்களாகவும் ஆனாள். 'பாரதி' என்னும் ஆசிரம நாமம் பெற்றவர்களல்லவா சிருங்ககிரி சாரதாபீடத்து யதீசுவரர்கள்? மேலும், இறுதியில் ஆசாரியர் காமகோடி பீடத்தை ஸ்தாபித்தபோதும் அங்கு நிறுவிய மடத்துக்கு சாரதா மடம் என்றே பெயரிட்டு, அங்கு பீடாரோஹணம் செய்த தம்மையும் இந்திர சரஸ்வதி என்ற ஆசிரமநாமத்தாலேயே அலங்கரித்துக் கொண்டார்.

மண்டன மிச்ரர் துறவு பூண்டார். சுரேச்வராசாரியர் என்ற திருநாமம் பெற்றார். கர்மவாதியாக இருந்தஅவரே தான் பின்னர் கர்மமற்ற நிலைக்கு வழி கோலும் 'நைஷ்கர்ம்ய சித்தி' என்ற நூலைச் செய்தார்.



புதிய பீடராகிய சுரேச்வரருடனும், பழைய சிஷ்யர்களுடனும் ஆசாரியர் மீண்டும் திக்விஜயம் தொடங்கினார்.

அவரது காலத்தில் இந்நாட்டில் வேதத்தைப் பிரமாணமாகக் கொண்ட மதங்களும், வேதத்தைப் பிரமாணமாகக் கொள்ளாத மதங்களுமாக எழுபத்திரண்டு சமயங்கள் வெவ்வேறு மக்களால் பின்பற்றப்பட்டன. இவ்வளவு மதங்களையும் தனியொரு மனிதரான சங்கரர், அரசபலம் முதலிய துணைகள் இன்றி, தமது அறிவின் பெருமையாலேயே கண்டனம் செய்தார். அத்வைதத்தை ஸ்தாபித்தார். இதைப் போன்ற அதிசயத்தை வேறெங்கிலுமே, வேறெப்போதுமே கண்டதில்லை என்பதைச் சரித்திரமே ஒப்புக் கொண்டு வியக்கிறது. ஆசாரியருக்குப் பிற்காலத்தில் நமது நாட்டில் விசிஷ்டாத்வைதம், த்வைதம், சைவ சித்தாந்தம் போன்ற பல மதங்கள் தோன்றியிருப்பது உண்மையே. ஆனால் இவை அத்வைத சம்பிரதாயத்தை ஒரேயடியாக முறித்து விடவில்லை என்பதற்கு இன்று நாடெங்கிலுமுள்ள ஸ்மார்த்தர்களே சான்று. ஆனால் ஆசாரியரோ தாம் அத்வைதத்தை ஸ்தாபித்த போது அன்று நிலவி வந்த மதங்களில் பலவற்றை அடியோடு இங்கிருந்து அப்புறப்படுத்தி விட்டார். இன்று நமக்கு அவர் காலத்திலிருந்து சமயங்களில் பலவற்றின் பெயர்கூடத் தெரியவில்லை. இவ்வளவும் தாம் இவ்வுலகில் வாழ்ந்த முப்பத்திரண்டே ஆண்டுகளுக்குள் அவர் செய்திருக்கிறார். இந்த அற்புதத்தை — ஆனால் அற்புதங்களின் மூலமின்றி அறிவினாலேயே நிகழ்த்திய சாதனையை—எண்ணி எண்ணி ஆச்சரியமும், பக்தியும் கொள்ள முடிகிறதே தவிர எழுத்தில் அதனை வடிக்க இயலவில்லை.

தமது திக்விஜயங்களில்தான் ஆசாரியர் பிற மதத்தினரைச் சந்தித்து, வாதிட்டு அவர்கள் வேதாந்தமாகிய அத்வைதத்தை ஏற்கச் செய்தது. இதுவே பரமேசுவரன் பிறப்பெடுத்ததன் பயனுமாகும். அவதார காரியத்தைச் செவ்வனே செய்வதற்காக அவன் தனது செவ்விய திருவடிகளை இந்நாடு முழுதும் பதித்தான்.

சங்கரர் தமது திக்விஜயத்தில் எவ்விடங்களுக்கு எப்போது சென்றார் என்பதில் சங்கர விஜய நூல்களுக்கிடையே முன்பின்னாகச் சில மாறுபாடுகள் இருக்கின்றன. அவர் சந்தித்ததாகக் கூறப்படுபவர்களில் சிலர் அவரது காலத்தில் வசித்தவர்கள்தானா என்பது பற்றியும் ஐயமுள்ளது. எனினும் அவர் தேச முழுவதையும் தமது திருவடிகளால் துலக்கினார் என்பதை அவை ஒவ்வொன்றும் நிச்சயப்படுத்துகின்றன. ஆசாரியர் மும்முறை பாரத தேசத்தைச் சுற்றிப் பிரயாணம் செய்திருக்க வேண்டுமென ஆராய்ச்சியாளர்கள் கருதுகிறார்கள்.

இவ்வளவும் எதற்காக? அவருக்குக் காரியமும் கிடையாது; அதன் பயனையும் அவர் நுகர்ந்தது கிடையாது. உலகம் எவ்வளவு காலம் இருக்குமோ அது வரையில் வாழப் போகும் மனித குலத்துக்கெல்லாம் அமர நிலை என்னும் மாபெரும் பயனை அளிக்கவே உடல் தரித்து உலவினார் அந்த உத்தம புருஷர், அல்லது உத்தம தெய்வம்.

இனி ஆசாரியரின் காலத்தில் இந்நாட்டில் நிலவிய சில முக்கியமான மதங்களைப் பற்றிச் சிறிதளவு தெரிந்து கொள்வோம். ஆசாரியர் புறம்கொண்ட பூர்வ மீமாம்சை குறித்து முன்பே கூறியாகி விட்டது. இதுபோக, நியாயம், வைசேஷிகம், சாங்கியம், யோகம் ஆகிய மதங்களும் வேதத்தை அடிப்படையாகக் கொண்டு அப்போது அநுஷ்டானத்தில் இருந்து வந்தன.

நியாயம் என்பது ஒரு பிரமாண சாஸ்திரம் என்றே கூறலாம். அதாவது நாம் பெறும் அறிவு சரியானது என்று நிச்சயப்படுத்தும் தத்துவங்களையே அது பெரும்பாலும் ஆராயப் புகும். தர்க்கம் முதலியவற்றை ஆதாரமாகக் கொண்டு, புலன், மனசு இவை ஆத்மா ஆகா என்று கண்டுகொள்வதே துயரை ஒழிக்கும் மோட்ச நிலை என்கிறது அது. ஆனால் தர்க்க ரீதியில் ஓர் உண்மையை நிலைநாட்டுவது எப்படி அநுபவத்துக்கு அடிகோலும்? தான் உடலல்ல என்ற ஞானம் அநுபவித்துப் பார்க்க வேண்டியது அல்லவா? அதற்கான சாதனங்கள் நியாய மதத்தில் கிடையா.

கடவுள் அணுக்களைக் கொண்டு உலகைப் படைத்தார் என்கிறது அம் மதம். தனித்தனியாக அணுவுக்குப் பரிமாணம் கிடையாது; பல அணுக்கள் கூடினால் பரிமாணம் உண்டாகிறது என்று அது கூறுவது கணித நியதிக்குப் புறம்பானது. அதோடு, களிமண்ணைக் கொண்டு குயவன் பானை செய்வது



போல, கடவுள் அணுக்களைக் கொண்டு உலகைச் செய்கிறார் என்பதால், கடவுள் வேறு அணுக்கள் வேறு என்றாகிறது. யாவும் கடவுளே என்பதற்கு இது விரோதமாகும் அல்லவா? கடவுளுக்கும் அணுக்களுக்கும் உள்ள தொடர்பு என்ன என்பதும் சரியாக விளங்கவில்லை. நையாயிகர்கள் கொள்கைப்படி சிருஷ்டி என்பது இறுதி நிலைவரை உண்மை என்று கொண்டால் கடவுள் தீமையை ஏன் படைத்தார் என்ற வினாவும் எழுகிறதல்லவா!

வைசேஷிகம் என்ற மதமும் அணுக் கொள்கையை அடிப்படையாகக்கொண்டதுதான். நியாய—வைசேஷிகம் என்று இவற்றை ஒன்றாகச் சேர்த்துச் சொல்வதுண்டு. 'அணுக்கள் நிரந்தரமானவை; அவற்றின் தொகுப்பே நாம் அநுபவிக்கும் பொருட்கள். இவை நிரந்தரமானவை அல்ல. அணுக்கள் ஒன்றுக்கொன்று தனிப்பட்ட — விசேஷமான— தன்மைகள் கொண்டவை. இந்த மாறுபாடுகள் நிரந்தரமானவை' என்கிறது அது. இந்த விசேஷணத்தை ஆராய்வதாலேயே இம்மதம் வைசேஷிகம் எனப்படுகிறது. அணுக்களை திரவியம், குணம், கர்மம், பொதுத் தன்மைகள், விசேஷணம், உள்ளுறையும் தன்மை இவற்றைக் கொண்டு பகுத்து ஆராய்வதே சாதகன் தன்னை அறிந்து கொள்ள வழியாகும் என்கிறது வைசேஷிகம். துன்பத்தையும் கர்மவினையையும் தீர்த்துக் கொள்ள, புறப் பொருட்களை ஆராய்வது மட்டும் எப்படி வழிவகுக்கும்? முதல் நிலையில் புறப் பொருட்களை விலக்கி, அகப் பொருளை ஆராய்ந்து அதில் நிலையாக நின்று, பின்னர் புறமும் அகமும் ஒன்றேயாவதல்லவா அன்புக்கு ஊற்றுக் கண்ணாகும்? அந்த அன்பு வரும் போது தானே கோபம் — தாபம், விருப்பு—வெறுப்பு இவை நீங்கி சாந்தியும், அதன் வழியே வீடும் கிட்டும்? பொருட்களைப் பேதமாகக் காணச் செய்யும் விசேஷணங்களைப் பிரதானமாகக் கருதும் வரை—இந்தப் பேதங்கள் நிலையானவை என்று கருதும் வரை— ஐக்கிய உணர்வு எப்படி உண்டாகும்? எங்கே பேதமில்லை என்று கண்டு, உள்ளை வெளியிலும், வெளியை உள்ளிலும் கரையச் செய்வதல்லவா அன்புக்கு வழி?

கடவுளைப் பற்றி வைசேஷிக மத ஸ்தாபகரான கணாதர் நிச்சயமாக எதுவும் கூறவில்லை. அணுக்கள் ஜடப் பொருட்கள் என்றும், விளக்க இயலாத ஏதோ ஒரு தத்துவமே அவற்றை இயக்குகிறது என்றும் பின் வந்தவர்கள் கூறுகிறார்கள். எனினும் கடவுளுக்கும் பிரபஞ்சத்துக்கும் உள்ள தொடர்பு இன்னதென்பது இந்த சாஸ்திரத்தில் தெளிவாகவில்லை.

சாங்கிய மதம், உலகுக்கு மூலகாரணம் பிரகிருதி என்ற ஜடப் பொருள் என்றும், பிரகிருதியின் காரியங்களை ஜீவன் தனதென எண்ணி மயங்குவதே சம்சாரத்துக்குக் காரணம் என்றும் சொல்கிறது. அத்வைத சாஸ்திரத்தின் மாயையைப் போன்றது பிரகிருதி எனத் தோன்றும். எனினும் ஞானம் வந்தபோது மாயை மாயும் என்கிறது அத்வைதம். சாங்கியர்களோ பிரகிருதியும் இறுதி சத்தியம் என்பர். ஆத்மாவைப் 'புருஷன்' என்று கூறும் இம்மதம், ஜீவன் பிருகிருதியின் தன்மையை உணர்ந்து அதிலிருந்து விடுபட்டவுடன் வீடு பெறுகிறான் என்கிறது. புருஷனுக்குச் செயலோ, குணங்களோ கிடையாது என்ற அதன் கோட்பாடு அத்வைத வேதாந்தத்தின் ஆத்மக் கொள்கை போன்றதே. எனினும், ஆத்மாவில் உறைய அதனை அறிவதே உபாயம் என்று அத்வைதத்தைப்போலக் கூறாமல், பிரகிருதி எப்படிப் பிரபஞ்சமாகப் பரிணமித்தது என்று ஆராய்வதே வீட்டுக்கு வழி என்கிறது சாங்கியம். பிரகிருதி என்பது புத்தியில் தொடங்கி, புலன்கள் ஈறாக இருபத்துநாலு தத்துவங்களாகப் பரிணமிக்கிறது என்று கூறி அவற்றை ஆராயச் சொல்கிறது சாங்கியம். பிரகிருதியின் சேஷ்டைகளையெல்லாம் தள்ளுவதே மோட்சம் என்று கூறிய பின், இல்லத்திலிருந்து வெளியேற்ற வேண்டிய குப்பைகளை ஆராய்வது போல, அதன் பரிணாமக்கிரமத்தை ஆராய்வதில் ஏது பொருள்? ஜடப் பொருளான பிரகிருதி ஏன் இந்தக் கிரமத்தில்தான் பரிணமிக்க வேண்டும் என்பதற்கு என்ன விடை?

சாங்கியம் விட்ட இடத்தில் தொடங்குகிறது யோகம். சாங்கிய — யோகம் என்று இவற்றை இணைத்து ஒன்றாகக் கொள்வதும் உண்டு. பிரகிருதியிலிருந்து புருஷனை விடுவிக்கும் வழி முறைகளை விளக்குகிறது அது. இது அகப்பொருளையே மையமாகக் கொண்ட மதம்.

சாங்கியம், எல்லாம் பிரகிருதியின் செயல் என்பதால் கடவுளுக்கு இட













மளிக்கவில்லை. யோகம் ஈசுவரனை ஒப்புக் கொள்கிறது. எனினும் பிரகிருதியின் கட்டுக்களைத் தகர்த்த ஓர் ஆதரிச முக்தன் என்பது தவிர ஈசுவரனது உபயோகம் எதுவும் இந்த சாஸ்திரத்தில் புலனாகவில்லை. அஹிம்சை, சத்தியம், புலனடக்கம், ஆசையின்மை ஆகிய வற்றைப் பயிலும் யமமும், தூய்மையை வளர்த்து, விரதங்களும் வேத கர்மாக்களும் அநுஷ்டிக்கும் நியமமும், உடற் பயிற்சி மூலம் இந்திரிய நிக்கிரகம் செய்யும் ஆசனங்களும், ஜீவசக்தியை ஒழுங்கு படுத்தும் பிராணாயாமமும், புறப் பொருட்களில் மனசைச் செலுத்தாமல் தடுக்கும் பிரத்யாகாரமும், மனசை ஒரு நிலையில் வைக்கும் தாரணையும், அந்நிலையில் 'தான்' என்பதன் வேரை ஆராய்ந்து சிந்திக்கும் தியானமும், அதனால் கைகூடும் சாந்த நிலையான சமாதியும் யோகத்தின் எட்டு அம்சங்கள்.

இந்த யோகமார்க்கம் அத்வைதத்துக்குப் புறம்பானதல்ல. எனினும் கர்மத்தில் தொடங்கி, உபாசனையை அடுத்த படியாகக் கொண்டு ஞானத்தில் சாதகனைச் செலுத்தும் அத்வைதத்தின் ஒழுங்கான வரிசைக் கிரமம் இந்த சாஸ்திரத்தில் முறைப்படுத்தப் படவில்லை. மேலும் 'சமாதி நிலை என்பதென்ன? புருஷன் (ஆத்மா) தானாக ஒளிர்வது என்றால் என்ன?' என்பவையும் விளக்கப்படவில்லை. சமாதி என்பது நித்திரை போன்றது, அப்போது எல்லாம் சூனியமாகிவிடும் என்றுதான் கோடி காட்டுகிறது யோகம். உண்மையில் சமாதிதான் விழிப்பு நிலை, அப்போது எல்லாம் சூனியமாகாமல் பரம்பொருளாகி விடும் என்பது அத்வைதம்.

அத்வைதத்தின் இந்த உறுதிப்பாட்டுக்குக் காரணம், மற்றெந்த மதமும் கூறாத அதன் விவர்த்த வாதமேயாகும். கயிறு பாம்பாகத் தோன்றுவது போல் பரம்பொருள் மாயையால் உலகாகத் தோன்றுகிறது என்பதே விவர்த்த வாதம் எனப்படுவது. இதனால்தான் கயிற்றைப் பாம்பாகக் காணத் தவறிய பின் சூனியம் ஏற்படாமல் கயிறு நிற்பது போல, விவகாரத்தில் நாம் காணும் உலகத் தோற்றம் அழிந்த பின், பரம்பொருள் ஞானம் மட்டும் நிற்கிறது என்கிறது அது. நாம் காணும் உலகுக்கு ஒரு மூல காரணம் இருக்க வேண்டும் என்பது எல்லா மதங்களும் ஒப்புக் கொள்ளும் விஷயமாகும். காரணமும் விளைவும் வெவ்வேறாகும் என்கிறது நியாயம். 'பானை தரும் பயனை மண் தராது. அவை வெவ்வேறு தானே? அணுக்கள் என்ற மண்ணைக் கொண்டு உலகம் என்னும் பானையைச் செய்யுங் குயவன் கடவுள். அவனும் இவற்றுக்கு வேறானவன்' என்கிறது அது. இது ஆரம்ப வாதம் எனப்படும்.

நியாய சித்தாந்தத்தை மறுக்கிறது சாங்கியம். 'காரணமும் விளைவும் முற்றிலும் வேறு பட்டவை என்றால் எதிலிருந்தும் எதையும் பெறமுடியுமா? தயிர் பாலிலிருந்து தான் கிடைக்குமே ஒழிய நீரிலிருந்து கிடைக்காதே! பிரகிருதி என்ற பால் தான் உலகம் என்ற தயிராகத் திரிந்திருக்கிறது' என்கிறது அது. இது பரிணாமவாதம் எனப்படும். இங்கே கடவுளுக்கு அவசியமே இல்லை.

பிரபஞ்சத்துக்குக் கடவுள், அணுக்கள் என இரண்டு காரணங்களைக் கூறும் நியாய மதம் கடவுளின் சர்வவியாபகத்துக்குப் புறம்பானது. பிரகிருதியே மூல காரணம் என்ற சாங்கியக் கொள்கையை ஏற்றால் பிரகிருதியிலிருந்து பிரபஞ்சத்தைக் கழிக்கும் போது ஏதுமில்லை—அதாவது, பிரபஞ்சமாகப் பரிணமித்த பின் மூலகாரணமே யில்லாமல் போகிறது—என்று ஏற்படும். அவ்வாறானால் பிரகிருதி சத்வஸ்து என்ற அவர்களது கோட்பாடு பொய்யாகும்.

இந்த முரண்பாடுகளை அத்வைதமே அறிவு வழியில் தீர்க்கிறது. இறுதி நிலையில் பார்க்கும்போது சிருஷ்டி என்பதே கிடையாது, உலகம் பரம்பொருளின் தோற்றமே என்ற அத்வைதத்தின் விவர்த்த வாதம்தான் கடவுள் அன்றி வேறெதுவும் கிடையாது என்னும் தத்துவத்துக்குப் பொருந்தியது. காரணம், விளைவு என்று இரு வேறு பொருட்கள் இல்லை; மூலகாரணமான பிரம்மமே உலகம்போல் தோன்றுகிறது என்பதால் பரிணாம வாதத்தில் காணும் குறைபாட்டையும் அது தவிர்க்கிறது.

சுருங்கச் சொன்னால் இதர மதங்கள் பல தத்துவங்களைக் கூறி அவைகளைப் பகுத்தும், தொகுத்தும், பிரித்தும், விரித்தும் பார்ப்பதால் மோட்சம் கிடைக்கும் என்கின்றன. ஆசாரியரோ 'உள்ளது ஒரே மெய்ப்பொருள்; அதன் தோற்றமே காண்பன வெல்லாம். ஒன்றேயான அகண்ட வஸ்துவைப் பகுப்பதும், தொகுப்பதும், பிரிப்பதும், விரிப்பதும் இயலாத காரியம். அதுவாகவே ஆவதுதான் மோட்சம். அநுபவம்தான் மோட்சமே ஒழிய ஆராய்ச்சி அல்ல' என்று நிர்த்தாரணம் செய்தார். அந்த அநுபவத்தைப் பெற மார்க்கத்தையும் விரிவாக அமைத்துக் கொடுத்தார். அதை விளக்கி வாதிட்டு வென்றபடி திக்விஜயம் செய்தார். (தொடரும்)

# சிந்தனை மேடை

## அரவிந்தன்

### 8. பாவம் ஆசிரியர்கள்

இந்த வாரத்துச் சிந்தனை மேடையில் கல்விக் கூடங்களையும் ஆசிரியர்களையும் பற்றி எழுதுவதென்று தீர்மானமாகி விட்டது. ஒரே ஒரு நேயர் (அவரும் ஒரு பள்ளி ஆசிரியர்தான்) உங்கள் சிந்தனை மேடையில் கல்விக் கூடங்களையும், ஆசிரியர்களையும் பற்றிய சிந்தனைக்கு இடம் உண்டோ, இல்லையோ என்று எழுதிக் கேட்டிருக்கிறார். 'தாராளமாக இடம் உண்டு' என்று பதில் சொல்லிக் கொண்டிருப்பதை விடக் காரியத்தில் காண்பித்து விடுவதே நல்லதல்லவா?



சிந்தனைகள் மலரவும், மலர்விக்கவும் காரணமாக இருக்கும் முதல் எண்ணம் தூய்மையான ஆசிரியன் எவனோ அவனிடமிருந்து தான் தோன்றியிருக்க வேண்டும். மகா முனிவர்கள் புண்ணிய நதிகளின் கரைகளிலே புல்லில் வேய்ந்த சின்னஞ் சிறு தவக் குடில்களில் இருந்து கொண்டு பேரரசர்களின் பிள்ளைகளும் தங்களை இருப்பிடம் தேடி வந்து கற்கும்படி அறிவின் கம்பீரத்தோடு வாழ்ந்த காலம் தொடங்கிக் கொல்லம் ஓடு வேய்ந்த விசாலமான வகுப்பறைகளில் ஓட்டு வெக்கையையும் விட்டு வாழ்க்கையின் வறுமை வெக்கையையும் சேர்த்து அனுபவித்துக் கொண்டு ஒடுங்கி நைந்த தோற்றத்தோடு வாழும் இன்றைய 'வாத்தியார்'கள் வரை அனைவரும் ஆசிரியர்கள்தாம். இன்றைக்குப் பொது மேடைகளில் பேசுகிறவர்கள் புகழ்வதற்கு யாரும் கிடைக்காத நேரத்தில் ஆசிரியர்களைப் பற்றிப் புகழ்வது உண்டு. மிக மிகப் பழங்காலத்துப் புகழ்ச்சி மொழியாகிய

**“எழுத்தறிவித்தவன் இறைவன் ஆகும்”**

என்பது வரை எல்லாவற்றையும் இப்போது சிந்திக்கலாம். புகழில் என்ன இருக்கிறது? மனத்திலிருந்து பிறவாமல் நாவிலிருந்தும், உதடுகளிலிருந்தும் பிறக்கிற வெறும் புகழ்ச்சி செவிகளை மட்டுமே நிறையச் செய்யும். ஆனால் இன்றைய ஆசிரியனுக்கு வயிறும் நிறைய வேண்டுமே! அப்படி வயிறு நிறைவதற்குத் தன் தொழிலும் பயன்பட்டாக வேண்டுமே!

எப்போதோ பல நூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட காலத்தில் வாழ்ந்த ஆசிரியர்கள் கற்பதற்காகத் தங்களைத் தேடி வந்து குருகுல வாசம் செய்யும் மாணவர்களுக்குத் தத்தம் ஆசிரமங்களிலேயே உணவளித்து வளர்த்துப் பேணி அவர்களுடைய வாழ்க்கையின் ஒவ்வொரு விநாடியும் எப்படி எப்படி உருவாக வேண்டும் என்பதையும் கல்வியோடு சேர்த்தே கற்பித்திருக்கிறார்கள். இன்றைய நிலையோ முற்றிலும் மாறுபட்டது; வேறுபட்டது. வகுப்பறைகளில் கழியும் சில மணி நேரங்களுக்குப் பின் ஆசிரியனும், மாணவனும் தனித்தனியே பிரிந்து விடுவதைப் போன்று இன்று வாழ்க்கையும் கல்வியும் கூடத் தனித் தனியே பிரிந்துதான் இருக்கின்றன.

வேத காலத்திலும், துரோணர் போன்ற இதிகாச கதாபாத்திரங்களைப் பற்றிய நினைவு உண்டாக்கப்படுகிற காலத்திலும், கல்வி கற்பிப்பது என்ற செயல் கோயில் வழிபாட்டைப் போல - ஒரு புனிதமான இயக்கமாக இருந்திருக்க வேண்டுமென்று நாம் அனுமானிக்க முடிகிறது. கற்பிப்பது என்பது ஒரு காலத்தில் எத்தகைய பிரதிபலனையும் எதிர்பாராமல் செய்யப்படுகிற புனித இயக்கமாக இருந்ததென்று நினைத்து விட்டு ஒரு விநாடிக்குப் பின் அப்படி இருந்த பொற்காலத்தை மீண்டும் எண்ணிச் சிந்தனையைப் பின்னோக்கி ஓட விடும் போது உங்களுக்கு மெய் சிலிர்க்கிறதல்லவா? அப்படி இருந்த காலத்தில் அறிவை வழங்குகிறவன் எவனோ அவனும் தெய்வமாக மதிக்கப் பெற்றிருப்பான் என்பதில் சிறிதும் சந்தேகமே இல்லை. இப்போது மதிக்கப்படுகிற காரணங்களும், மதிக்கிற காரணங்களும், விதம் விதமாக மாறியிருக்கின்றன. பணமுடையவர்கள் சிலரை அவ்வுடைமைக்காகத் தெய்வங்களாகத் தொழுகிறோம். புகழுடையவர்கள் சிலரை அவ்வுடைமைக்காகத் தொழுகிறோம். பதவியும் செல்வாக்கும் உள்ளவர்கள் சிலரை அவற்றுக்காகத் தொழுகிறோம். குணங்களுக்காகவும், அறிவுடைமைக்காகவும், அவற்றை உடையவர்களைத் தேடித் தொழுவது இன்றைய சமுதாய வாழ்க்கையில் மிகவும் குறைந்து போயிருப்பதாகவே தோன்றுகிறது. 'எந்த விதத்தில் எப்படி இந்த மதிப்பீடு குறைந்து போயிற்று!' என்று சற்றே சிந்தித்துப் பார்க்கலாம்.

### ஏணிகளைப் போல

இன்றைய நிலையில் இந்த நாட்டுக் கல்விக் கூடங்களையும், அவற்றில் உழைக்கும் ஆசிரியப் பெரு மக்களையும் பற்றிச் சிந்திப்பதற்கு நிறையப் பிரச்னைகள் இருக்கின்றன. ஆசிரியராக இருப்பதென்பது வேத காலத்து இலட்சியத்தைப் போல் இன்று பயன் எதிர்பாராத புனித இயக்கமாக இல்லை. அப்படி இருப்பதும் இன்று சாத்தியமாகாது. எனவே இன்றைய நிலையில் கற்பிப்பதென்பதை உழைப்பாகவும் தொழிலாகவும் தான் கொள்ள வேண்டும். குறிப்பிட்ட ஆசிரியர் தொழிலில் ஈடுபட்டிருப்பவர்களும் அதை அப்படித்தான் கருதியிருக்க முடியும்.

ஆசிரியர் தொழிலில் ஈடுபட்டிருப்பவர்கள் எப்போதாவது அதில் சலிப்பு அடைவதற்கும் இடமிருக்கிறது. ஆசிரியர்கள் ஏணியைப் போல் பிறர் ஏறி ஏறி மேல் படிக்குச் செல்வதற்குத் தாங்கள் சாதனமாக மட்டும் அமைந்து அவ்வளவில் நின்று விடுகிறார்கள். இந்தச் சிந்தனையை வேறொரு கோணத்தில் மாற்றிச் சிந்தித்துப் பார்த்தால் வேதனையாகக் கூட இருக்கலாம். திண்ணைப் பள்ளிக்கூட வாத்தியார் திருவேங்கடத்திடம் அரிச்சுவடி படித்த மன்னார்சாமி சில பல ஆண்டுகளில் ஐ. ஏ. எஸ். தேறி அதே மாவட்டத்துக்குக் கலெக்டராகக் கூட வந்து விடலாம். வாழ்க்கைத் தொல்லைகளும், குடும்பத் துன்பங்களும் முன்னேற முடியாமல் தடுக்கிற பட்சத்தில் வாத்தியார் திருவேங்கடம் அதே ஒட்டுப் போட்ட சட்டையும் பழுப்பேறின வேட்டியுமாக அரிச்சுவடி சொல்லிக் கொடுத்தே தம் காலத்தைக் கழித்து விடுவார். பதவி ஏற்றத் தாழ்வுகளையோ, செல்வாக்கையோ இப்படிக் கணித்துப் பார்த்து முடிவு சொல்வது கூடாதுதான். ஆனாலும் இன்றைய சமுதாய வாழ்வில் சராசரி மதிப்பீடுகள் எல்லாமே இப்படித்தான் இருக்கின்றன. எனவே நாமும் வேறு விதமாக மதிப்பீடு செய்ய முடிவதில்லை. சமூகத்தில் ஆசிரியர்களுடைய மதிப்புப் பெருக வேண்டும் என்று எல்லோரும் நினைக்கிறார்கள், ஒப்புக்கொள்கிறார்கள். 'ஆனால் எந்த விதத்தில் அதைப் பெருகச் செய்வது?' என்ற கேள்வி வரும்போதுதான் தயக்கமாக இருக்கிறது. 'கற்பிப்பதும் ஒரு தொழில்; அதனாலும் வருவாய் தேட முடியும்' என்ற நிலையில் உள்ள இந்த நூற்றாண்டில் ஓர் ஆசிரியன் அடைய முடியாத அவ்வளவு சமூக மதிப்பைக் கற்பிப்பது தொழிலாக இல்லாத காலத்தில் முனிவர்களும், பெரியவர்களும் அடைந்திருக்கிறார்கள். மாபெரும் மன்னர்கள்கூடத் தங்களைத் தேடி வந்து வணங்கும்படி அடர்ந்த காடுகளிலும், நதிக்கரைகளிலும், ஒதுங்கி வாழ்ந்து கொண்டே தெய்வங்களைப் போல மதிக்கப்பட்டிருக்கிறார்கள் அந்தப் பெரியவர்கள். சொந்த அமைச்சர்களிடமும் கலந்து ஆலோசிக்க முடியாத பெரிய பெரிய காரியங்களை இப்படி ஒதுங்கி வாழ்ந்த முனிவர்களையும், பெரியவர்களையும் தேடிப் போய்க் கலந்து ஆலோசித்திருக்கிறார்கள் பழைய காலத்து அரசர்கள். இன்றைய ஆசிரியனைத் தேடி (திண்ணைப் பள்ளிக்கூட ஆசிரியனோ, கல்லூரிப் பேராசிரியனோ, யாராக இருந்தாலும் சரி) இப்படிப்பட்ட மாபெரும் அரசியல் பிரச்னைகள் எதுவும் வரப் போவதில்லை. இன்றைய ஆசிரியர்களுக்குள்ள வேதனைகளை ஒவ்வொன்றாக எண்ணிப் பார்த்தால் அவர்கள் இந்தச் சமூகத்தை ஒருநாளும் மன்னிக்க மாட்டார்கள்.

## குறைந்த கவர்ச்சி



ஒரு சிறிய அரசாங்கக் காரியாலயத்தில் இரண்டாந்தரத்துக் குமாஸ்தாவாக வேலை பார்க்கிற ஓர் இளைஞனையும், உயர்தரப்பள்ளியில் ஆசிரியனாக வேலை பார்க்கிற ஓர் இளைஞனையும், முன் நிறுத்திப் பெண்ணுக்குத் திருமணத்துக்கு வரன் பார்த்துக் கொண்டிருக்கிற பெற்றோரிடம் கேட்டால் குமாஸ்தாவைத்தான் முதலில் நாடுவார்கள். 'மனித சமுதாயத்தை உருவாக்குகிற புனிதப் பணியைச் செய்கிறவர்கள்' என்ற ஆசிரியப் பணியின் இலட்சிய அடையாளங்களை யெல்லாம் பொது உலகத்தில் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். 'வக்கற்றவனுக்கு வாத்தியார் வேலை' என்ற தரக் குறைவான பழமொழியை உண்டாக்கியதே பொது உலகம்தானே ?

சேம நிதி, ஓய்வுக் கால ஊதியம், மாணவர்கள் பலரால் புகழப்படும் நிலை — எல்லாம் இருந்தும்கூட இந்தத் தொழில் ஏதோ ஒரு விதத்தில் கவர்ச்சி குன்றியதாகவே கருதப்படுகிறது. உத்தியோகம் தேடி ஆவலோடு புறப்படுகிற பட்டதாரி இளைஞர்களும் கம்பெனிகள், சர்க்கார் வேலை, வியாபாரம், பொறியியல் துறை வேலை, இவைகளுக்கு எல்லாம் முயன்று இயலாமையோடு அலுத்த பின்பே, ''சரி! சரி! கடைசியாக டீச்சர்ஸ் டிரெயினிங்கிலாவது போய்ச் சேரலாம்'' என்ற முடிவோடு வருகிறார்கள். தனியார் துறைக் கம்பெனிகளிலும், வியாபார நிறுவனங்களிலும் செய்வதைப் போல் விருப்பு — வெறுப்பு — வேண்டியவர் — வேண்டாதவர் நிலைகளைக் கொண்டு திடீர் திடீரென்று ஊதிய வளர்ச்சி (இன்க்ரிமெண்ட்)களைத் தந்து தூக்கி விடப்படலாம் என்ற அதிர்ஷ்ட நம்பிக்கை கூட ஆசிரியர் தொழிலில் இல்லை. திட்டமிடப்பட்ட எளிய ஊதியம் வீங்காமலும், மெலியாமலும் ஒரு சீராகக் கிடைப்பது தவிர (சில பள்ளிக்கூடங்களில் ஒரு சீராகக் கிடைக்காமல் இரண்டு மாதப் பாக்கி, மூன்று மாதப் பாக்கி நின்று விடுவதும் உண்டு) வேறு எந்த அதிர்ஷ்டக் கனவுகளுக்கும் ஆசிரியர் தொழிலில் இடம் இல்லை. மில்லில் வேலை பார்க்கிறவர் வருஷத்துக்கு இரண்டு மூன்று முறை போனஸ் கிடைக்கும் என்று நினைப்பது போல் ஆசிரியர் தொழிலில் நாளைய அதிர்ஷ்டம் பற்று எதை நினைத்தும் அதிர்ஷ்டக் கனவுகள் காண்பதற்கு வாய்ப்புக்கள் அறவே இல்லை.

தன்னிடம் படிக்கிற பையன் காரிலே வந்து பள்ளிக்கூடத்தில் இறங்குவதைப் பார்த்துக் கொண்டே தான் வேர்க்க விறுவிறுக்க நடந்து வந்து கற்பிக்கிற பள்ளி ஆசிரியன் மானிட சமுதாயத்தை உருவாக்கும் பணியில் ஈடுபட்டிருப்பதற்காகப் பெருமைப்படலாம். ஆனால் 'தன்னுடைய தகுதிகளை உற்று நோக்கித் தன்னை இந்தச் சமூகம் எவ்வளவுக்கு மதித்துக் கொண்டிருக்கிறது?' என்ற கேள்வியை அவன் மனம் அவனிடமே கேட்கத் தொடங்கி விட்டால் சிந்தனை அந்த இடத்தோடு அறுபட்டுப் போவதோடு மனமும் கண்களும் கலங்கி விடும். 'ஓர் ஆசிரியனைச் சமூகம் எந்த அளவு மதிக்கிறது?' — மிகவும் பரிதாபகரமான

கேள்வி இது. தான் இந்தச் சமூகத்துக்கு வெறும் ஏணியாக இருந்து கொண்டிருக்கிறோம் என்ற உண்மை அந்த விநாடியில் அவனுக்குப் புரியத் தொடங்கி விடுகிறது. 'வேத காலத்து முனிவர்களும் அப்படித்தானே இருந்திருக்கிறார்கள்?' என்றெண்ணி இன்றைய ஆசிரியன் தன்னைத் தியாகியாகப் பாவித்துக் கொண்டும் திருப்திப் படமுடியாது. வேத காலத்து முனிவர்கள் புகழையும், பொருளையும் பற்றிக் கவலைப் படாமல் 'நாம் இந்த உலகத்தின் புத்தியின் பரம்பரையை உருவாக்குகிறோம்' என்ற பெருமிதமான நம்பிக்கையோடு ஒதுங்கி வாழ்ந்தார்கள். இன்றைய ஆசிரியர்கள் அப்படி வாழமுடியாது. மற்றத் துறையில் இருப்பவர்களுக்கு உள்ளதைப் போலப் பொது வாழ்க்கையின் எல்லாவிதமான கவலைகளும் இன்றைய ஆசிரியர்களுக்கும் உண்டு. அதே சமயத்தில் பொது வாழ்க்கையின் எல்லா விதமான வசதிகளின் கதவுகளும் இவர்களுக்காகத் திறக்கப்பட வில்லை. அதனால்தான் இந்தத் தொழில் பலவிதத்திலும் கவர்ச்சி குறைந்ததாகப் போய்விட்டது.



## கல்விக் கூடங்கள்

ஆசிரியர்கள் நிலைதான் இப்படி என்றால் கல்விக் கூடங்களின் நிலையைப் பற்றிச் சொல்லவே வேண்டாம். முக்கால் மணி நேரத்துக்கு ஒரு பாடவேளையாகப் பிரித்து, 'இந்த முக்கால் மணி நேரத்துக்கு இந்தக் கனவைத்தான் காண வேண்டும்' என்று வற்புறுத்திக் கனவு காணச் செய்வது போல் எதிலும் மனத்தை ஆழ விடாமல் செய்கிறது இன்றைய படிப்பு. இளம் பருவத்து மாணவன் இந்த நூற்றாண்டில் தன்னுடைய ஆசிரியரை எப்படி அளந்து பார்த்து மதிக்க முடியும் என்பதையும் சிறிது சிந்திக்கலாம்.

மனம் பக்குவப்படாத பதினாறு பதினேழு வயது மாணவன் தன் கண்களுக்கு முன்னால் தெரிகிற உலகத்தில் படாடோபமாக வாழ்கிற பலரையும் அப்படி வாழ முடியாத தன் ஆசிரியரையும் இணைத்து எடை போட்டுப் பார்ப்பான். அவனுடைய நிறுவையில் ஆசிரியர் பெரும்பாலும் எடை குறைந்தே தோன்றுவார். சமூக வாழ்க்கையில் எந்த ஆடம்பரங்களையும் கடைப்பிடிக்க இயலாத எளிய வருவாய் உள்ள இனம் ஆசிரிய இனம். கப்பல் போல் நீளக் காரில் தனி ஆளாகப் பவனி வருகிற திரை வானத்துத் தாரகைகளையும், வெள்ளம் வெள்ளமாய்க் கூட்டம் கூட மேடையேறி மாலையும் கழுத்துமாக நிற்கும் அரசியல் பிரமுகரையும், விநாடிக்கு இலட்ச ரூபாய் வரவு செலவு செய்யும் வியாபாரியையும், பார்த்துப் பார்த்து ஆச்சரியப் படத் தொடங்கும் பிஞ்சு உள்ளங்கள் அவ்வாறே தன் ஆசிரியரிடமும் ஆச்சரியப்படத் தக்க சக்தி ஏதாவது இருக்கிறதா என்று தேடுகின்றன. புத்தியின் பெருக்கமே ஓர் ஆச்சரியம்தான். ஆனால் புத்தியின் பரப்பையும் பெருக்கத்தையும் மட்டுமே ஆச்சரியமாக மதிக்கும் மனப் பக்குவம் வேக மயமான இந்த நூற்றாண்டில் எத்தனை இளம் பிள்ளைகளுக்கு இருக்க முடியும்? இருந்தால்தான் நாட்டின் சூழ்நிலை மிகவும் நன்றாகி விடுமே?

பள்ளிப் படிப்பைவிட வேறு ஞாபகங்கள் அதிகமாகச் சூழ்ந்துள்ள இந்தக் காலத்தில் பொது வாழ்வில் கல்விக் கூடங்களின் எல்லையில் வகுப்பு வேளைகளில் மட்டும்தான் ஓரளவுக்கு இன்றைய மாணவரால் ஆசிரியனையும் வியக்க முடிகிறது. எஞ்சிய பெரும் போதெல்லாம் அவர்கள் வியப்பதற்கு வேறு பல பெருமைகள் அவர்களைச் சூழ்ந்து கொள்கின்றன. எனவே பழைய காலத்துக் குரு பக்தியைப் போலக் கட்டை விரலை அரிந்து தருகிற தீர மாணவர்களை இன்று காண முடியாது. ஒரு வேளை வாத்தியாருக்குக் கட்டை விரல் நஷ்டத்தை உண்டாக்குகிற புதுவிதமான தீர மாணவர்கள் வேண்டுமானால் இந்த நாளில் கிடைக்கலாம். கல்விக் கூடங்களில் ஒழுக்கமும், கட்டுப்பாடும் பண்பும் கற்பித்து மாணவர்களை உருவாக்குவதில் கவனம் குன்றி வெறும் பரீட்சைக்கு உருவாக்குவதில்மட்டும் கவனம் பெருகியுள்ள காலம் இது. பரீட்சை எழுத உருவாக்கப் படுகிற மாணவர்களுக்கு அதற்கான தயாரிப்புக்களைத் தவிர வேறு எதுவும் கற்பிக்க நேரமும் அவகாசமும் இல்லை எனலாம். ஒழுக்கத்தையும், பண்பாட்டையும் கோட்டை விட்டு விட்டுக் கணக்கையும், விஞ்ஞானத்தையும் மட்டுமே வளைத்து வளைத்துக் கற்பித்துக் கொண்டிருப்பதில் என்ன பயன்? விதை நெல்லை அவித்துச் சோறாக்கினால் எதிர்கால விளைவுகளைப் பற்றி என்ன சொல்வது?

எல்லாக் கட்டிடத்துக்கும் அடிப்படை அவசியம். எந்த விதமான கல்வியை வேண்டுமானாலும் கற்பியுங்கள். ஆனால் அதற்கு அடிப்படையாக ஒழுக்கமும், பண்பாடும் அமைந்திருக்க வேண்டும் என்பதை மட்டும் கண்டிப்பாக நினைவு கொள்ள வேண்டும். ஆகவே இன்றைய ஆசிரியர்களுக்குச் சமூகத்தின் மதிப்பீடு போதவில்லை. இன்றைய கல்விக்கு ஒழுக்கமும் பண்பாடும் போதவில்லை. கற்பிப்பவர்க்கும் குறை. கற்பிப்பதற்கும் குறை. தீர்வதானால் இரண்டு குறையும் அல்லவா ஒருங்கு தீர வேண்டும்? ஆசிரியர்களை மட்டும் குறை சொல்லிப் பயனில்லை. சமுதாய வாழ்வில் தங்களுடைய மதிப்பு இன்னும் பெருகவேண்டுமென்று அவர்கள் எதிர்பார்ப்பது நியாயமான கோரிக்கையே. எழுத்தறிவித்தவனை இறைவனாக வணங்க முடியாவிட்டாலும் போகிறது. ஆனால் தயவுசெய்து மனிதனாகவாவது மதியுங்கள்! இன்று உருவாகிற புதிய பாரதத்தில் பள்ளிக்கூடங்கள் நாற்றங்கால்களைப் போன்றவை. நாற்றங்காலிலேயே கெட்டுப் போகிற பயிர் நடுகைக்குப் பயன்படுமா? நாற்றங்காலையும் பயிரையும் சேர்த்தே பேணவேண்டுமல்லவா?

# ஓடும் ரயிலில்



"நீ என்ன இந்த 'லைனு'க்குப் புதுசா அப்பா?" என்று கேட்டாள் அந்த அம்மாள். உண்மையில் அந்த 'விருதுநகர் — திருநெல்வேலி' லைனுக்கு நான் புதிதுதான். பத்து நாட்களுக்கு முன்பு வரை கடந்த ஐந்தாண்டுகளுக்கும் மேலாகச் சென்னைக்கு வடக்கேயே ஓடிக் கொண்டிருந்தவனை இப்போதுதான் தமிழ் நாட்டு மண்ணை மிதிக்க அனுமதித்திருந்தது நிர்வாகம்.

"புதுசுதான்!" என்றேன்.

"அதுதானே என்னடா என்று பார்த்தேன்!" என்ற அந்த அம்மாள் ஒரு காலை மடித்துக் கம்பீரமாக உட்கார்ந்துகொண்டு என்னைப் பார்த்த பொழுது எனக்கு ஒரு சந்தேகம் தட்டியது. ஒரு வேளை 'பாஸ்' வைத்திருப்பவளாக இந்த அம்மாள் இருப்பாளோ? என்ற எண்ணம் எழுந்தது.

"பாஸா?" என்று கேட்டேன்.

"பாஸா?" என்று கேட்டுவிட்டுச் சிரித்த அந்த அம்மாள் "பாஸுமில்லே, காசுமில்லே! ஒக!" என்றுளே பார்ப்போம்!

என்ன தைரியம் அந்த அம்மாளுக்கு. ஒரு டி. டி. ஆர் முன்பு எத்தனை தைரியமாகத் தன்னை 'வித்தவுட் டிக்கட்' என்று சொல்லிக் கொள்கிறாள்? இந்த ரயில் என்ன இவள் பாட்டன் வீட்டு ரயிலா ?

ரசீதுப் புத்தகத்தை எடுத்து 'கார்பன்' பேப்பரைச் சொருகியபடியே நான், "எங்கிருந்து வருகிறீர்கள்?" என்று அந்த அம்மாளைக் கேட்டேன்.

மீண்டும் சிரித்தாள் அந்த அம்மாள். "இதுவரையில் என்னை ஒருத்தரும் 'டிக்கட்டு'ன்னு கேட்டதில்லையப்பா! என்னைப் பார்த்ததுமே டிக்கட் கேட்காமல் போய் விடுவார்கள் !" என்று கூறினாள்.

"நான் போகப் போவதில்லை. என் கடமை ரயிலில் பிரயாணம் செய்கிறவர்களெல்லாம் பிரயாணம் செய்ய டிக்கட் வைத்திருக்கிறார்களா என்று பார்ப்பதுதான். இல்லாதவர்களிடமிருந்து டிக்கட்டுக்குரிய கட்டணத்தை வசூலிப்பதுதான் எனக்கிட்டிருக்கும் வேலை. நான் பெறும் ஊதியத்துக்கு நான் அதைச் செய்தாக வேண்டும்" என்றேன் கண்டிப்புத் தோரணையில்.

அந்த அம்மாள் இப்போது நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டு என்னை ஒரு முறை மேலும் கீழும் பார்த்தாள். என் குரலில் ஒலித்த கண்டிப்பும் கறாரும் அவளிடமிருந்து டிக்கெட்டுக்குரிய பணத்தை வசூலித்து விடுவேன் என்ற அச்சத்தை அவளுக்கு உண்டு பண்ணியதோ என்னவோ? அவளுடைய முகத்தில் பழைய அலட்சியமும் கலகலப்பும் குறைந்து விட்டன.

"இந்தப் பெண்ணைப் பாரப்பா!" என்றாள் அவள்.

அந்த அம்மாள் காட்டிய பெண்ணைப் பார்த்தேன். என் கண்களில் கண்ணீர் வராத குறைதான். அழிக்கும் சக்தி விதிக்கு மட்டும் இல்லை, வறுமைக்கும் உண்டு என்பதைப் பறைசாற்றிக் கொண்டிருந்தது அந்தப் பெண்ணின் தோற்றம். அவளுக்குப் பதினெட்டு அல்லது இருபது வயது இருக்கலாம். 'மத மத' என்று விழுந்து குண்டு குண்டாய்ப் பூத்துக் குலுங்கும் மலர்க் கொடியைப் போல் மத மத வென்று இருக்கவேண்டிய வயது. வாழ வேண்டிய பருவம். ஆசை ஆசையாக நாட்களை இன்பக் கனவுகளில் கழிக்கவேண்டியதிருக்க வறுமையில் வாடிக் கொண்டிருந்தாள் அவள். குனிந்த தலையில் கேசம் அடர்ந்திருந்தாலும் எண்ணெய் காணாது தலை செம்பட்டையாகவே காட்சியளித்தது. சாதாரண வாயில் புடவை—எட்டு ரூபாய் இருக்குமோ பத்து ரூபாய் இருக்குமோ—அதை உடுத்தியிருந்தாள். அழி




திட்டுத் திட்டாய் அழுக்கேறிக் கிடந்தது. கையில் டஜன் ஆறணா விற்கும் கண்ணாடி வளையல்கள் பெயருக்கு இரண்டு மூன்று காட்சி யளித்தன. சீட்டி ரவிக்கை அணிந்திருந்தாள். காதும் மூக்கும் மூளியாயிருந்தன. முகத் தைச் சரியாகப் பார்க்க முடியவில்லை. ஆனா லும் பார்த்த மாத்திரத்திலேயே 'ஐயோ, பாவம்' என்ற ஓர் இரக்கத்தைப் பார்ப்பவர் களது மனத்திலே உண்டுபண்ணிவிடக் கூடிய தோற்றத்துடன் குனிந்த தலை நிமிராது உட் கார்ந்திருந்தாள் அவள்.

"தெருவிலே அனாதையாகப் பத்து வரு ஷங்களுக்கு முன்னால் கண்ணைக் கசக்கிக் கொண்டு நின்றது இந்தப் பெண்!" என்றாள் அந்த அம்மாள்.

கதை ஒன்று ஆரம்பமாகப் போகிறது என்றே என்னவோ எதிர்ப் பெஞ்சில் உட் கார்ந்திருந்த இரண்டு மூன்று பிரயாணிகள் அந்த அம்மாள் சொன்னதைக் கேட்டதும் பெண்ணைப் பரிதாபமாகப் பார்த்தனர்.

பளபளக்கும் என் கறுப்பு கால் பூட்சுகளை யும், நீண்டு தொங்கும் வெள்ளை வெளேர் என்ற என் நீண்ட கால் சட்டையின் கஞ்சி



''இந்தப் போட்டோ யாருது சார்?''
''அது எனக்கு மனைவி ஆக இருக்க வேண்டிய பெண்..... பாருங்க சார்! ஒரு நாள் நான் என் மாமா ரொம்பப் பணக்காரர் என்று அசட்டுத்தனமா அவளிடம் சொல்லி விட்டேன்....''
''அப்புறம் என்ன ஆச்சு?''
''என்ன ஆச்சு! அப்புறம் அவள் என் மாமியாக மாறி விட்டாள்!''

போட்டு மடிக்கப்பட்ட மடிப்பையும் அந்தப் பெண் பார்த்துக் கொண்டிருப்பது அவளுடைய தலை அசைவிலிருந்து தெரிந்தது.

''அப்பா, அம்மா ஒருத்தரும் இல்லே. நடுத் தெருவிலே கதியற்றுப் பரிதவித்து நின்னு கொண்டிருந்தாள் இந்தப் பெண். ஒருத்தர் 'ஏன்' என்று கேட்கணுமே? ஒருத்தர் 'அநாதேயம்மா'ன்னு சொல்லணுமே! கண்ணெடுத்துக்கூட யாரும் பார்க்கலே! உடுத்திக்கொள்ள நல்ல பாவாடை கிடையாது! சாப்பிட ஒரு வாய்ச் சாதம் கிடையாது இந்தப் பெண்ணுக்கு!''

தன்னுடைய கஷ்டத்தை, தான் பரிதவித்து நின்ற அவலத்தை நான்கு பேர் முன்னிலையில் அவளை வைத்துக் கொண்டு அந்த அம்மாள் கூறுவது அந்தப் பெண்ணுக்கு வெட்கத்தையும் வேதனையையும் தந்திருக்க வேண்டும். தலைப்பை இழுத்து உடம்பை மூடிக் கொள்கிற சாக்கில் முந்தானையில் தன் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

''நான்தான் அழைத்துக் கொண்டு வந்தேன். என்ன செய்வது? பெண் ஜன்மமாய்ப் பிறந்து தொலைத்து விட்டேனே நான்! ஆண்டவன் உலகத்திலே இருக்கிற கருணையையும் அப்படியே வழித்தெடுத்துப் பெண்களோட இருதயத்திலே அல்லவா வைத்து விட்டான்!'' என்று கூறியபோது, அந்த அம்மாள் என்னை இரக்கமில்லாத அரக்கனே என்று குற்றம் சாட்டுவது போலிருந்தது.

''அப்புறம்....?'' என்றார் ஒரு பிரயாணி சுவாரசியமாய்.

''ஒரு பெண்ணைப் பெற்று வளர்த்துப் பதினெட்டு வயசு மனுஷியாக்கி அவளை ஒரே நாளிலே பறி கொடுத்தேன். இலேசிலே ஆறுகிற துக்கமா அது? இந்தப் பெண்ணைக் கண்டதும் அந்தத் துக்கத்தைக் கொஞ்சம் கொஞ்சமாக மறக்கலாம் என்று தோன்றியது. கூடவே அழைத்துக் கொண்டு வந்து விட்டேன். எனக்கு மட்டும் சொத்தும் சுகமும் கொட்டிக் கிடக்கிறதா என்ன? ஒரு பெண்ணை வளர்த்து ஆளாக்குகிறது என்கிறது சாமானியமான காரியமா என்ன? நானு வீட்டிலே வேலே செய்வேன். சமையல் செய்வேன். அப்பளாம் இடுவேன். வீடு வீடாய் ஜலம் இறைத்துக் கொட்டுவேன். தோசைக்கு அரைத்துக் கொடுப்பேன். இட்டிலி போட்டு விற்பேன்.....''

அந்தப் பெண்ணை வளர்க்கத் தான் பட்ட கஷ்டங்களை அந்த அம்மாள் விவரிக்க விவரிக்க உடனிருந்த சகப் பிரயாணிகளின் நெஞ்சிலெல்லாம் இரக்கம் பீறிட்டுப் பொங்கி வழிந்தது. ஒருவரையொருவர் பார்த்துத் தங்கள் முகத்தைச் சோகமாக வைத்துக் கொண்டார்கள். சிலர் 'த்சொ, த்சொ' என்று கூறித் தங்களது அனுதாபத்தைத் தெரிவித்துக் கொண்டார்கள்.

''என் சொந்தக்காரர்கள் எல்லாம், 'நீயே கஷ்டப்படுகிறாயே விசாலம், இந்தப் 'பெண்ணை வேறே ஏண்டி இப்படி உடம்பைப் போட்டு ஓடாய்த் தேய்க்கக் காப்பாற்றுகிறாய்?' என்று கேட்பார்கள். அது என்ன தெரியுமோ?''

அவிழ்க்க முடியாத புதிருக்கு விடை காண முடியாதது போன்ற ஒரு தவிப்பு எல்லாப் பிரயாணிகளிடமும் உண்டாயிற்று.

என்னைப் பார்த்துக் கொண்டே அந்த அம்மாள் சொன்னாள். ''பிறருடைய கஷ்ட நஷ்டத்தைப் பார்த்து நாம் இரக்கப்பட வேண்டும்; துயரை அதிகரிக்கச் செய்ய அல்ல....!''

அதைக் கேட்டுச் சொல்லி வைத்தாற் போல் எல்லாப் பிரயாணிகளும் என்னையே பார்த்தபொழுது எனக்கு அந்த அம்மாளின் மீது ஆத்திரம் ஆத்திரமாய் வந்தது. ஆனால் அடுத்தகணமே அந்த ஆத்திரமெல்லாம் 'சட்' டென்று குறையும்படி அந்தப் பெண் அந்த அம்மாளைப் பார்த்தாள். 'ஒருவரது உள்ளம் நோகப் பேசுவதுகூடத் தப்பம்மா!' என்பது போலிருந்தது அவள் முக பாவத்தைக் கண்டதும். என் நினைவு என்னைப் பின்நோக்கி எங்கேயோ இழுத்துச் சென்றது.

அந்தப் பெண்ணையும் இந்த அம்மாளையும் நான் எப்பொழுதோ ஒரு முறை பார்த்திருக்கிறேன். நினைவைத் துருவினேன். ஆனால் எங்கே, எப்போது என்ற கேள்விக்கு விடை கிடைக்கவில்லை.

''எடுத்து வளர்த்தேன் இவளை முழுசாப் பன்னிரண்டு வருஷங்கள். இவளைப் பெரியவளாக்க நான் என்ன பாடுபட்டிருப்பேன், தெரியுமா? பெண் தங்கம் என்றால் தங்கம். பெயர் கூடத் தங்கம்தான். மனசும் தங்கம்தான். நான் கீறின கோட்டைத் தாண்ட மாட்டாள். 'அம்மா, அம்மா!' என்று உயிரை விடுவாள். என் உயிரைச் சிறுகச் சிறுகக் கொடுத்து அவள் உயிரை வளர்க்கிறேன். பெற்றவள் இருந்திருந்தால் அவளுக்குக்கூட இவளிடம் இவ்வளவு பாசம் ஏற்பட்டிருக்குமா என்பது சந்தேகம்தான். இவளை வளர்த்த பாசம் என் நெஞ்சில் ஒரு பெரிய ஆசையை உண்டுபண்ணி விட்டது! இவ்வளவு அரும்பாடு பட்டு வளர்த்த பெண்ணை

நீங்கள் பொலிவுடனிருக்க சார்மிஸ் உபயோகியுங்கள்!

புதுமை பெறுக...
இதம் பெறுக...
நளினமாய் இருங்கள்
நாள் முழுதும்!

இளமையையும், புத்துணர்ச்சியையும் அளிக்கும் சார்மிஸ் டால்கம் பவுடர் நீங்கள் நாள் முழுதும் நளினமாயிருக்க உதவுகிறது. உன்னத மனோரம்மிய மணம்கொண்ட சார்மிஸ் உங்களுக்கு சுகத்தையும் புத்துணர்ச்சியையும் அளித்து, உங்கள் அழகை நன்கு சோபிக்கச் செய்கிறது!

# சார்மிஸ்

உன்னத, மனோரம்மிய மணத்துடன் கூடிய டால்கம் பவுடர்



''நீங்கள் என்னைப் பெண் பார்க்க வந்திருந்தபோது கண்ணாடி போட்டுக் கொள்ளவில்லையே!''

''போட்டுக் கொண்டிருந்தால் உன்னைக் கல்யாணம் பண்ணிக் கொண்டிருக்க மாட்டேனே!''

ஒரு நல்ல இடமாகப் பார்த்துக் கொடுத்தால் தான் நாளைக்கு அவள் கண்ணைக் கசக்காமல் இருப்பாள்?''

அந்த அம்மாளின் கேள்வியை எல்லோரும் ஆமோதித்தார்கள்.

''நான் ஆண் பிள்ளையா ஓடியாடி நாலு காசு சம்பாதிக்க?'' என்று கேட்டபடி முதுகுப்புறம் வைத்திருந்த ஒரு குயர் நோட் புக்கை எடுத்துப் பிரித்துக் காட்டினாள் எல்லாரிடமும்.

அந்த நோட்புக்கைப் பார்த்ததும் ஒருவரது முகத்திலும் ஈயாடவில்லை.

''எல்லாரிடமும் இந்தப் பெண்ணின் கல்யாணத்துக்காக யாசகம் கேட்கிறேன். அஞ்சு, பத்து, ஒன்று, இரண்டு என்று தங்கள் தங்கள் சக்திக்கு உட்பட்டதைக் கொடுக்கிறார்கள்! நோட் புக்கைப் புரட்டிப் பாருங்கள். பெரிய பெரிய ஹைகோர்ட் ஜட்ஜுகள் என்ன, சர்க்கார் அதிகாரிகள் என்ன, தலைவர்கள் என்ன, டாக்டர்கள் என்ன எத்தனை பேர்கள் இரக்கப்பட்டு உதவுகிறார்கள் தெரியுமா? ஒரு பெண்ணுடைய— அநாதைப் பெண்ணுடைய — நல் வாழ்வுக்கு உதவுவது எவ்வளவு பெரிய புண்ணியம்! இதைத் தெரிந்து கொண்டவர்கள் உதவி செய்கிறார்கள். தெரியாதவர்கள் உதவி செய்யாவிட்டாலும் உபத்திரவமாவது செய்யாமல் இருக்கலாமல்லவா?'' என்றாள் அந்த அம்மாள் நேருக்கு நேர் என்னைப் பார்த்தபடியே.

''நான் என்ன செய்ய முடியும்? எனக்கிட்டிருக்கும் பணியை இரக்கத்தின் பேரால் நான் தட்டிக் கேட்க முடியுமா? டிக்கெட் இன்றிப் பிரயாணம் செய்கிறவர்கள் சட்டத்தை மீறிச் செல்லும்பொழுது அவர்களைப் பிடித்து அவர்களிடமிருந்து உரிய கட்டணத்தைப் பெறத்தானே நானும் என்னைப் போன்றோரும் நியமிக்கப்பட்டிருக்கிறோம்? இரக்கமும் கருணையும் என் நெஞ்சில் இல்லாமலில்லை. இளம் வயதில் நானும் கஷ்டப்பட்டவன்தான். வீடு வீடாய் 'வாரச் சாப்பாடு' சாப்பிட்டவன் தான். பிறர் போட்ட பழைய சட்டைகளை வாங்கி அணிந்து சுய முயற்சியால் உயர்ந்தவன் நான். இரக்கமும் கருணையும் என் கூடப் பிறந்தவையே. சட்டத்தை மீறி இரக்கத்தையும் கருணையையும் நான் டிக்கெட் இல்லாது வருகிற பிரயாணிகளிடம் காட்ட வேண்டுமானால் ஒன்று என் சம்பளத்தை நான் அவர்களுக்காக ஒதுக்கிவிட வேண்டும்; அல்லது இந்தத் தொழிலை விட்டுவிட வேண்டும்.''

அந்த அம்மாளின் கையில் இருந்த நோட் புக்கை வாங்கிப் பார்த்தேன். அந்த அம்மாள் சொன்னது வாஸ்தவம். பெரிய மனிதர்கள் அநேகம் பேர் இந்த ஏழைப் பெண் எதிர்கால வாழ்வுக்கு உதவியிருந்ததை அந்த நோட் புக் காட்டியது. பெயர் பிரபலமாகாதவர்களின் பட்டியலே பெரும்பாலும் அந்த நோட் புக்கை அடைத்துக் கொண்டிருந்தது.

அந்தப் பெண்ணைப் பார்த்தேன். மிகவும் பரிதாபமாகவும் இரக்கமாகவும் இருந்தது. அவளைப் பார்க்க, பணமும் அழகும் கொண்ட பெண்களை ஆயிரமாயிரம் இளைஞர்கள் போட்டி போட்டுக் கொண்டு 'நான், நீ' என்று வருவார்கள். ஆனால் வறுமையில் வாடும் இந்த ஏழைப் பெண்ணை மணக்க யார் முன் வருவார்கள்? இவள் ஏழைப் பெண்தான். நல்ல இடத்தில் வாழ்க்கைப்படக் கூடிய அளவுக்கு வசதி இல்லாதவள்தான். இதனாலெல்லாம் அவள் மனம் தான் காணும் இன்பக் கனவுகளைக் காணாதிருக்குமா? உள்ளமும் உணர்ச்சியும் இளம் வாலிபனைத்தானே கணவனாக எதிர்பார்த்து இன்பக் கோட்டைகளைக் கட்டியிருக்கும்? இந்த ஏழைப் பெண்ணுக்கு நான் வாழ்வளித்தால் என்ன?

''இது வரையில் எவ்வளவு சேர்ந்திருக்கும் பணம்?'' என்று கேட்டேன் நான்.

''ஏன் பாக்கிப் பணத்தைத் தரப் போகிறீரா?'' என்று கேலியாகக் கேட்டாள் அந்த அம்மாள்.

''பாக்கியைத் தருகிறேன்! இல்லை, இவளை நானே கலியாணம் செய்து கொள்கிறேன். சொல்லுங்கள்!'' என்றேன்.

'சட்'டென்று நிமிர்ந்து என்னைப் பார்த்தாள் அந்தப் பெண். முகத்தில் ஆனந்தம் களை கட்டியது. கண்களில் ஆனந்தக் கண்ணீர் பளபளத்தது. காய்ந்து போன உதடுகள் 'நிஜமாகவா? நிஜமாகவா? என்னைக் கலியாணம் செய்து கொள்கிறீர்களா?' என்று கேட்பது போல் துடித்தன.

''என்ன சொல்கிறே நீ?'' என்று அந்த அம்மாள் திகைப்பிலிருந்து மீளாதவளாகக் கேட்டாள்.

''நான் இந்தப் பெண்ணைக் கலியாணம் செய்து கொள்கிறேன்!'' என்றேன் விடாமல்.

இப்போது அந்தப் பெண்ணின் கண்களில் திரண்டிருந்த ஆனந்தக் கண்ணீர் அவளுடைய மூக்கின் இருபுறமும் ஓடியது. கைகள் என்னை நோக்கி வணங்கின.

அந்த அம்மாள் பிரமித்துப் போய் உட்கார்ந்திருந்தாள்.

''நீங்கள் இப்படி இந்தப் பெண்ணை ஊர் ஊராய் அழைத்துக் கொண்டு போய்க் கண்ட கண்ட பேர்களிடம் காட்டிப் பணம் சம்பாதித்து அவள் கலியாணத்தை முடிப்பதைவிட என்னைப் போன்று சர்க்கார் உத்தியோகம் பார்ப்பவனுக்குக் கொடுக்கலாமில்லையா?''

''தம்பி சொல்றது சரிதான்!'' என்றார் ஒரு பிரயாணி. அந்த அம்மாள் யாசகம் கேட்டு அவரிடம் நோட் புக்கை நீட்ட மாட்டாளல்லவா?

''நல்ல உத்தியோகம்! நல்ல சம்பளம்!'' என்றார் இன்னொருவர்.

''நீங்களும் ராஜா மாதிரி சிவப்பா நல்லா இருக்கீங்க!'' என்றார் ஒரு வயதானவர்.

அப்போது என்னைத் தலையிலிருந்து கால் வரையில் ஒரு முறை பார்த்த அந்தப் பெண் நான் அவளைப் பார்த்ததும் தன் தலையைக் குனிந்து கொண்டாள்.

''நீ யாரோ, உன் அப்பா அம்மா யாரோ?'' என்றாள் அந்த அம்மாள் அகவாரசியமாய்.

''எனக்கு யாருமில்லே. இந்தப் பெண் மாதிரிதான் நானும்!'' என்றேன்.

''அனாதை!'' என்றார் ஒரு 'கொட்டாவி'.

''அப்படிச் சொல்லாதீர்கள். ஆண்டவன் இருக்கிறவரையில் யாருமே அனாதையில்லே!'' என்று நான் கூறியதும் அந்தப் பெண் என்னை நம்பிக்கையுடன் பார்த்தாள்.

''நீ இண்டரா, பி. ஏ.யா?''

''பி. ஏ.!'' என்றேன் விடாமல்.

'' அப்போது ஐயாயிரம், பத்தாயிரம் கொடுத்து அழகழகான பெண்களை உனக்குக் கொடுக்க 'ரெடி'யா இருப்பார்களே எல்லாரும்'' என்றாள் அந்த அம்மாள்.

'' நீங்கள் கொடுக்கிறீர்களா, அதைச் சொல்லுங்கள் முதலில்!''

''இலட்சியவாதியா?'' என்றாள்.

''அப்படியே வைத்துக் கொள்ளுங்கள்!''

'' உன் விலாசத்தைக் கொடு, பார்க்கலாம்!'' என்றாள் அந்த அம்மாள் எங்கோ வெளியில் பார்த்தபடியே.

''நானே கலியாணச் செலவு எல்லாவற்றையும் ஏற்றுக் கொள்கிறேன்!'' என்றேன்.

பிடி கொடாமல் பேசினாள் அந்த அம்மாள். ''சட்டுப் புட்டுனு பேசி முடித்துவிடக் கூடிய காரியமா இது! விலாசத்தைக் கொடு, பார்க்கலாம்!'' என்றாள்.

அந்த அம்மாளின் பேச்சில் கருதி குறையக் குறைய அந்தப் பெண்ணின் முகம் ஏனோ வாட்டமடைந்தது. ''நீங்கள் இந்தப் பெண்ணின் கலியாணத்துக்காகச் சேர்த்து வைத்திருக்கும் பணத்திலிருந்து ஒரு நயாபைசா கூடச் செலவழிக்க வேண்டியதில்லே!''

அந்த அம்மாள் முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டாள்.

''இவளை ஆளாக்க நீங்கள் பட்ட சிரமத்துக்காக வேண்டுமானால் ஐந்நூறோ ஆயிரமோ கொடுத்து விடுகிறேன்!''

அந்த அம்மாள் முகம் கொடுத்துப் பேசினாளா ?

நான் சிரித்துக் கொண்டேன்.

''டிக்கெட்டுக்கு என்ன சொல்கிறீர்கள்?''

''செப்பால் அடித்த ஒரு நயாபைசாவானு ஒரு நயா பைசா கிடையாது! அடுத்த ஸ்டேஷன் கோவில்பட்டிதானே? அங்கே இறக்கி விடுவதானால் இறக்கி விட்டுவிடு !''

அந்த அம்மாள் மட்டும் தனியாக டிக்கட் இல்லாது பிரயாணம் செய்கிறவளாக இருந்தால் தயவில்லாது ஒரு காட்டில் அவளை இறக்கி விட்டிருப்பேன். ஒரு பாவமும் அறியாத அந்த ஏழைப் பெண்ணும் அல்லவா என் செய்கையால் பாதிக்கப்படுவாள்.

கையிலிருந்த ரசீதுப் புஸ்தகத்தில் 'கார்பன்' பேப்பரை வைத்து அவர்களிடமிருந்து வசூலிக்க வேண்டிய கட்டணத்தைத் திருநெல்வேலி வரை செல்ல எழுதி ரசீதைக் கிழித்து அந்த அம்மாளிடம் கொடுத்தேன்.

"என்னிடம் பணமில்லே!" என்றாள் அந்த அம்மாள் தீர்மானமாய்.

"வேண்டாம்! நானே என் கையிலிருந்து போட்டுக் கொள்கிறேன்!" என்று கூறி விட்டு அடுத்த பெட்டிக்குத் தாவினேன்.



"ஏண்டாப்பா! யாரோ எழுதின கடுதாசைப் படித்துக்கொண்டே அடிக்கடி எழுந்து எழுந்து மரியாதையா ஏன் நிற்கிறாய்?"

"பெரியவர் ஒருவர் கடிதம் எழுதி யிருக்கிறார். ஒவ்வொரு விஷயம் முடியும் போதும் நிற்க, நிற்க என்று எழுதியிருக்கிறார்!"

மூன்று நாட்களுக்குப் பிறகு.

மணியாச்சி ஸ்டேஷனில் கடக் கடப் பத்தியும் காப்பியும் சாப்பிட்டு விட்டு என் பணியைத் தொடங்க நான் புறப்பட்ட வேளையில்—

"ஸார்!" என்ற குரல் கேட்டது. திரும்பிப் பார்த்தேன். தங்கம்!

"தங்கமா?" என்றேன்.

தங்கம் புன்முறுவலித்தபடி தலையைக் குனிந்து கொண்டாள்.

"நீ மட்டுமா தனியாக வந்திருக்கிறாய்? உன் வளர்ப்புத் தாயார் எங்கே?"

"அதோ!" என்று வலது புறத்தில் சுட்டிக் காட்டினாள் தங்கம்.

தூத்துக்குடிக்குச் செல்லத் தயாராக இருந்த ரயிலில் அந்த அம்மாள் ஒரு வயது வந்த பெண்ணுடன் ஏறிக் கொண்டிருந்தாள்.

கையில் அந்த ஒரு ரூபாய் நோட்டுக் வைத்திருந்தாள்:

"அந்த அம்மாள் என்னை வியாபாரப் பொருளாக வைத்து வாழ்க்கை நடத்துபவள். என்னை எடுத்து வளர்க்கவுமில்லே, ஆளாக்கவுமில்லே அவள். என்னையும் என் கலியாணத்தையும் காட்டி அவள் பணம் சம்பாதித்தாள். என்னைப் பார்ப்பவர்களது மனத்தில் என்னைக் கண்டதும் இரக்க உணர்ச்சி உண்டாக வேண்டு மென்பதற்காக எனக்கு அரை வயிறு சோறு போட்டு முதல் காரியமாக என் உடல் வளர்ச்சியைக் குறைத்தாள். கிழிந்த ஆடைகள்தான் நான் உடுக்கக் கொடுப்பாள். நான்கு ஆண்டு காலமாக என் கலியாணத்தைக்கூறி, அதற்காக அழகாய்க் கதை ஜோடித்துச் சம்பாதிக்கிறாளே தவிர என் மனத்திலும் ஒருவரைக் கலியாணம் செய்து கொண்டு வாழ வேண்டும் என்கிற ஆசை இருக்கும் என்பதை அவள் உணரவில்லே. நீங்கள் என்னை மணப்பதாகக் கூறியதும் அந்தப் பேறு கிடைக்க நான் எவ்வளவு பாக்கியம் செய்திருக்க வேண்டும்? ஆனால் அந்த அம்மாளோ என்னை வைத்து மேலும் மேலும் பணம் சம்பாதிக்கத்தான் விரும்பினாள்..... நீங்கள் பேசிய பேச்சில் நான் கொண்ட நம்பிக்கை அவளை உதறி விட்டு உங்களைத் தேடி வரும்படி செய்து விட்டது. மூன்று நாட்களாக ஒவ்வொரு ரயிலிலும் உங்களைத் தேடுகிறேன்......" என்றாள் தங்கம்.

தங்கத்தின் தளிர்க் கரங்களைப் பற்றினேன்; ஏழைப் பெண் ஒருத்திக்கு வாழ்வளிக்கப் போகும் பெருமையில் அவளைப் பார்த்துச் சிரித்தேன். அந்தச் சிரிப்புக்கு நாலு ரூபாய் 'டானிக்'களுக்கு உள்ளதைவிட அதிகமான வலிமை இருந்திருக்க வேண்டும். இல்லாவிட்டால் தங்கத்தின் கன்னங்கள் ஏன் அப்படிக் குங்குமத்தைக் கொட்டின மாதிரி சிவக்கிறது!



# வட்ட மேஜை

## வரிக் கொடுமை

ஜூலை 15-ந் தேதி கல்கி இதழில் 'ஓவர் லோட் கூடாது' என்ற யோசனையைப் பாராட்டுகிறேன்.

இன்று ஆட்சியாளரின் பணத் தேவைக் கேற்பப் போடப்படும் திடீர் வரிகளால் (நேர் முக, மறைமுக) அவதியுறும் மக்கள் கணக்கி லடங்கா. இந்த நிலையில் சென்னை அரசாங்கம் சமீபத்தில் விதித்துள்ள பல புதிய வரிகளைக் கண்டால் உள்ளம் குமுறுகிறது. மத்தியதர வகுப்பினர்களைக் கசக்கிப் பிழிந்து விடுவது என்றே கங்கணம் கட்டிக் கொண்டு விட்டாரா காங்கிரஸ்காரர்கள் என்ற கேள்வியே எழுகிறது!

கிராமத்தில் சிறிது நிலத்தை வைத்திருப்பவனுக்கு அதில் கிடைக்கும் பெரும் பகுதி இனி வரியாகக் கொடுக்க வேண்டி வரும். அவன் நிலத்தை மிகக் குறைந்த விலைக்காவது விற்று விட்டு நகர்ப் புறத்தில் ஏதேனும் மனை வாங்கலாம் என்றால்கூட அதுவும் முடியாத காரியம். ஏனெனில் நகரிலும் வரிக் கொடுமை. பஸ் போக்குவரத்தில் அதிகச் செலவு ஏற்படும் வகையில் புது வரிகள். ரயில் கட்டணம் உயர்ந்திருப்பதும் தெரிந்ததே. எந்தப் பொருளைப் பார்த்தாலும் விலை உயர்வு !

வாழ்க்கைத்தரம் எந்த விதத்திலும் உயராதபோது வரிச்சுமை இதே ரீதியில் உயர்ந்து கொண்டே போனால் எந்த அளவுக்கு மக்களால் தாங்க முடியும் என்றுதான் புரியவில்லை.

குடி வெறியில் உள்ள ஒருவனிடம் கார் ஓட்டும் பொறுப்பை ஒப்படைத்து விட்டு அந்தக் காரில் சவாரி செய்பவரின் நிலையில் தான் இன்று நாட்டு மக்கள் இருக்கின்றனர்.

பம்பாய்
14-7-62

கல்யாணபுரம் அமுதன்

## பாதை வசதி

நெல்லை மாவட்டம் தாழையூத்து நாரணம்மாள்புரம் பஞ்சாயத்துப் போர்டைச் சார்ந்த 'சத்திரம்' என்ற ஆதிதிராவிட மக்கள் வசிக்கும் சிறு கிராமத்துக்குப் போக்கு வரத்து வசதிக் குறைவின் காரணத்தால் நாரணம்மாள்புரம் பஞ்சாயத்துப் போர்டுக்கும் நெல்லை மாவட்ட ஆட்சித் தலைவருக்கும் ஐந்து ஆண்டுகள் பல மனுக்கள் எழுதியும் இது நாள் வரை எந்த நடவடிக்கையும் எடுத்துக் கொள்ளவில்லை. ஒரு பகுதியில் இந்தியா சிமெண்ட் சாக்கடை நீரும் மழை வந்தால் மற்றப் பகுதியில் மழைத் தண்ணீரும் தேங்கி நிற்பதால் இந்தக் கிராமத்துக்குச் செல்ல வசதியான பாதைகள் கிடையாது. எனவே எங்களுக்குப் பாதை அமைத்துத் தரச் சர்க்கார் முன்வர வேண்டும்.

சத்திரம்
12-7-62

டி. வி. நடராசா

## இந்தித் திணிப்பு அவசியமா ?

மூன்றாவது வகுப்பு டிக்கட்டுகளின் மீது இந்த ஆண்டு இறுதியோடு ஆங்கிலத்துக்குப் பதிலாக இந்திய அரசாங்கம் இந்தியைத் திணிக்கப் போவதாகத் தெரிகிறது. ஏற்கெனவே 'மணியார்டர் கூப்பன்களிலும் மற்றும் கார்டு, கவர் இவைகளிலும் இந்தியைப் புகுத்தியபோது தென்னாட்டு மக்கள் மனம் கொதித்தனர். அந்தக் கொதிப்பே இன்னும் தீர்ந்தபாடில்லை; அதற்குள் வேறொரு வழியாக இந்தியைத் திணிக்கப் பார்ப்பது விவேகமற்ற செய்கையாகும்.

இதனால் பிரயாணிகளுக்கு ஏற்படும் அசௌகரியங்களையும் கஷ்டங்களையும் சிறிதேனும் அரசாங்கம் உணரவில்லை. இந்தியும் பிரதேச மொழியும், தெரியாதவர்களுக்கு, இதனால் எத்தனை சங்கடங்கள் ஏற்படும்?

ஆங்கிலம் கடந்த நானூறு வருடங்களாக ஆலவிருக்ஷம் போல் வளர்ந்துள்ளது. அதன் இடத்தில் ஒரு சிறு செடியைக் கொண்டு வந்து நட்டு அதனால் ஆல விருக்ஷம் போல் நிழல் தர முடியுமா?

கல்பாத்தி
14-7-62

ஹரிஹரன்

# மீண்டும் இந்தி வேதாளம்

எஸ். கிருஷ்ணசாமி பாரதி எம்.ஏ., பி.எல்.

விக்கிரமாதித்தன் கதையில் வரும் வேதாளம் மீண்டும் மீண்டும் முருங்கை மரத்தில் ஏறிக் கொள்ளும்! அது வேதாளத்தின் இயல்பு.

இந்தி மொழியின் போக்கும் இந்த வேதாளத்தைப் போலவே யிருக்கிறது. அண்மையில் மத்திய அரசின் அங்கமான ரயில்வே போர்டார் ஒரு விசித்திரமான காரியத்தில் இறங்கப் போவதாக அறிக்கை விடுத்துள்ளார்கள். ரயில்வே மூன்றாவது வகுப்புப் பயணச் சீட்டுக்களில் உள்ள ஊர்ப் பெயர்கள் ஆங்கிலத்துக்கு மாற்றாக **இந்தியிலே** பொறிக்கப் போகிறார்களாம். இந்த விபரீத மொழி மாற்றத்துக்கு இப்பொழுது ஏற்பட்டுள்ள அவசியம் என்ன? அவசரம்தான் என்னவோ? ரயில்கள் நாள் தோறும் மணிக்கணக்கில் காலம் தாழ்த்தி வரும் காட்சியை மக்கள் கண்குளிரக் கண்டு மனமகிழ்ந்து ரயில்வே போர்டின் இவ்வரிய பெரிய நிருவாகத் திறமையைப் பாராட்டிய வண்ணம் இருக்கிறார்கள். அது போதாதென்று மென்மேலும் பாராட்டுதல் பெறுவதற்காக இந்தி மொழியைப் புகுத்தும் இம்மொழி மாற்றக் காரியத்தில் இரயில்வே போர்டு இறங்கி உள்ளது போலும்! போர்டு வாழ்க!

முதலாவதாக, இந்த யோசனை, 1965-க்குப் பின்னரும் கூட மத்திய அரசின் கூட்டு மொழியாகச் செயல்படும் என்ற மத்திய அரசின் உறுதி மொழிக்கு ஊறு செய்யும் மாறுன காரியமாகும். முதலமைச்சர் நேரு அவர்களின் உறுதிமொழியை ஆடிக் காற்றில் பறக்க விடும் துணிகரச் செயலாகும்!

இரண்டாவதாக இந்த யோசனை அரசியல் சட்டத்தின் விதிகளுக்கு ஊறு செய்து அதை மீறுவதாகும்! எனவே பட்டவர்த்தனமான சட்ட விரோதச் செயலாகும். அரசியல் சட்டத்தின் 17-வது பாகம் நிருவாக மொழியை (Official Language) பற்றியது. சட்டத்தின் 343 விதியில் (1) (2) உட்பிரிவுகள் ஈண்டு குறிக்கற் பாலன. அவை வருமாறு:—

343 (1) இணைப்பு அரசின் (Union) அரசியல் நிருவாக மொழி (Official Language) தேவநாகரி எழுத்திலான இந்தியாகும்.

(2) முதல் உட்பிரிவில் எது கூறப்பட்டிருந்தாலும், அரசியல் ஆரம்பத்தில் இருந்து பதினைந்து ஆண்டுக் காலம் வரை, இந்த ஆரம்பத்துக்கு முன் உபயோகப் படுத்தப்பட்டு வந்த துறைகள் எல்லாவற்றிலும், யூனியன் அரசின் காரியங்கள் அனைத்திலும் ஆங்கில மொழி தொடர்ந்து உபயோகப் படுத்தப்பட வேண்டும்—''

(குறிப்பு: எண்களின் வடிவத்தைப் பற்றிய சொற்களை நீக்கி இவ்விதியை எழுதி உள்ளேன்.)

இந்த 2-வது உட்பிரிவுக்கு ஒரு மாற்றுப் பிரிவு (Proviso) உளது. அதைக் கருத்து ஊன்றிப் படிக்க வேண்டும். அம் மாற்றுப் பிரிவு வருமாறு:

''ஆனால், இந்தக் காலத்தில் (15 ஆண்டு) யூனியனின் நிருவாகக் காரியங்கள் எவற்றுக்கேனும், ஆங்கில மொழியோடு கூட இந்தி மொழியையும் சேர்த்து உபயோகிக்கலாம், என்று ஜனாதிபதி, உத்தரவு மூலம், அதிகாரம் வழங்கலாம்.''—

எனவே, 15 ஆண்டுகள் வரை (1949 நவம்பர் 26 முதல் 1964 நவம்பர் 25 வரை) ஆங்கிலமே யூனியன் அரசின் அரசியல் நிருவாக மொழி. ஆனால் இக் காலத்தில், ஜனாதிபதி அவர்கள், குறிப்பிட்டுள்ள துறைக்கு ஆங்கிலத்தோடு இந்தியையும் சேர்த்து உபயோகித்துக் கொள்ள உத்தரவு போடலாம். ஆனால் எந்தத் துறையிலும், ஆங்கிலத்தை அறவே நீக்கி, இந்தியை மட்டும் தனிக் கோலோச்சும்படி செய்ய ஜனாதிபதிக்குச் சட்டபூர்வமான அதிகாரம் கிடையாது. இது அரசியல் சட்டம் தெளிவுறக் கூறும் கருத்து. அரசியல் நிர்ணய சபை உறுப்பினராகச் செயலாற்றிய காலத்தில், எங்கள் காங்கிரஸ் கட்சிக் கூட்டத்தில் இது சம்பந்தமாக நடந்த நிகழ்ச்சிகள் இன்றும் என் நினைவில் உள்ளன.

ரயில்வே பயணச் சீட்டு மொழி மாற்று சம்பந்தமாக ஜனாதிபதி அவர்கள் ஏதாவது உத்தரவு பிறப்பித்துள்ளார்களா என்பது அறிகிற்றிலேன். அது எவ்வாறு இருப்பினும், ஆங்கிலத்தை அறவே நீக்கி, இந்தியை மட்டும் புகுத்துமாறு அவ்வுரிமை அதிகாரம் அளிப்பதாக இருக்குமாயின், அது அரசியல் சட்ட விரோதம் என்பது எனது பணிந்த, ஆனால், துணிந்த, சிந்தைக் கருத்து.

சட்ட விரோதம் ஒருபுறம் இருக்க, இத்தகைய காரியங்கள் தேசிய ஒருமைப்பாட்டு உணர்ச்சிக்கு ஊறு செய்யும் மாறுபாடான செயல்கள் என்பதும் என் கருத்து.

மேலும், மத்திய அரசின் பெரிய போட்டித் தேர்வுகளில் (ஐ. ஏ. எஸ். போன்ற தேர்வுகளில்) இந்தி மொழியை ஒரு விருப்பப் பாடமாக எடுத்துத் தேர்வு எழுதலாம். ஆனால் வேறு எந்தப் பிராந்திய மொழியையும் ஒரு விருப்பப் பாடமாக எடுத்துக் கொள்ள முடியாது. இது, இந்தியக் குடியரசில், இந்தி மொழியார்களுக்கு மட்டும் காட்டப்படும் தனிச் சலுகை அல்லவா? இது தவறு: முறையல்ல; நீதியல்ல; நியாயமல்ல; ஒன்று, இந்தியை விருப்பப் பாடப் பட்டியலில் இருந்து எடுக்க வேண்டும்; அல்லது எல்லா மொழிகளும் விருப்பப்பாடப் பட்டியலில் இடம் பெற வேண்டும்—இதுவே முறை: நியாயம்.

எனவே, ரயில்வே போர்டார், இந்தி மொழியை மட்டும் புகுத்தும் தங்கள் விபரீத யோசனையைக் கைவிடுமாறு மத்திய அரசினர் உடனே கட்டளை பிறப்பிக்க வேண்டும்.

அறிஞர் செவி சாய்க்காது, சட்ட விரோதமான செயலில் இறங்க டில்லியே போர்க்கு முற்படுவார்களானால், சட்ட விரோதத்தைத் தடுக்க நீதி மன்றங்களின் உதவி நாட நேரிடும்.

அரசியல் மொழி விஷயத்தில் இராஜாஜி அவர்கள் கூறிக் கொண்டு வருவது எவ்வளவு நியாயம் வாய்ந்தது, தீர்க்கதரிசனம் உடையது என்பதை இத்தகைய நிகழ்ச்சிகள் நமக்கு எடுத்துக்காட்டி வருகின்றன.

சமீப காலம் வரை, தேசிய காங்கிரசு மகா சபையின் தலைவராக இருந்த ஆந்திர முதல் மந்திரி திரு சஞ்சீவி ரெட்டியவர் ஆங்கிலமும் இந்தியும் இரண்டுமே அகில இந்திய மொழியாக இருத்தல் வேண்டும் என்று நானது ஜூலை 17-ம் நாள் ஹைதராபாத்தில் பேசி உள்ளார். இப்பேச்சு, இந்தி மொழியைப் போதனை மொழியாகக் கொண்ட இந்தி கலைக் கல்லூரிக் கட்டிட அஸ்திவாரக் கல் நாட்டு விழாவின் போது நிகழ்த்தப்பட்டது என்பது கவனிக்கற்பாலது. இப்பேச்சு மத்திய அரசாங்க உறுதி மொழியேதான். எனவே, பாராட்டுதற்குரிய புதுமை யாதும் இல்லாவிடினும், பெருந்தலைவர்கள் இதனை அடிக்கடி வலியுறுத்தி வருவதற்கு அவசியம் இருந்தே வருகிறது. தலைவர்கள் பேச்செல்லாம் சரிதான். ஆனால் காரியம் வரும்போது, வாய்ப் பேச்சு வீரர்களாகக் காட்சி தருவதுதான் பரிதாபகரமானது.

அரசியல் அறிவு படைத்த அறிஞர் பலர் விழித்திருக்கவும், அரசாங்கமே, இவ்வாறான அரசியல் சட்ட விரோதமான செயலில் இறங்க முற்படுவதை விந்தை என்பதா? விபரீதம் என்பதா? துணிவுடைமை என்பதா? அறியாமை என்பதா?

வேலியே பயிரை மேய்ந்தால், விளைவைக் கேட்க வேண்டுமோ?

# படித்துப் பாருங்கள்

## நளவெண்பா

மக்கள் பதிப்பாக வெளிவந்துள்ள இந்தப் புத்தகம் புலியூர்க் கேசிகன் அவர்களின் தயாரிப்பு. 'வெண்பாவிற் புகழேந்தி'— எனப் பெயர் பெற்ற புலவரின் படைப்பாகிய இந்தக் காவியம் இப்புத்தக வடிவில் உரையும், பாடல்களுக்குத் தனித் தனித் தலைப்பும் கொடுக்கப் பெற்று நன்கு வெளியிடப்பட்டுள்ளது. பாடல்களின் அடியில் பதசாரமாகத் திரட்டிக் கொடுக்கப்பட்டிருக்கும் பொழிப்புரை மூலத்தைக் கற்பவர்களுக்குத் துணை புரியும்.

வெளியீடு: அருணா பப்ளிகேஷன்ஸ், தியாகராயநகர், சென்னை—17. விலை: ரூ. 1.30.

## பாரதி யுகம்

பொருத்தமும், கம்பீரமும் நிறைந்த தலைப்புடனே கூடிய இந்தச் சிறிய புத்தகம் பயன்களால் பெரியது. தமிழ் மறுமலர்ச்சிக் கவிதையுலகில் பாரதியின் அவசியமும், இன்றியமையாமையும் தெரியும்படி புத்தகத்தின் பெயர் அமைந்ததற்காகவே இதன் ஆசிரியரை எத்தனை முறை பாராட்டினாலும் தகும். இந்த நூற்றாண்டின் தமிழ் இலக்கிய ஆசிரியர்கள் எதற்காகவாவது நிச்சயமாகப் பெருமைப்பட முடியுமானால் அது 'பாரதி யுகத்தில்' வாழ்வதற்காகத்தான். இப்போது நிகழ்ந்து கொண்டிருக்கிற இலக்கிய யுகமும் 'பாரதி யுகம்' தான். பாரதிக்குப் பின்பு வளர்ந்து கொண்டிருக்கிற இலக்கியப் பரம்பரையையும் இதே பெயரால் குறிப்பிடலாமாயினும் ஆசிரியர் பாரதியின் வாழ்க்கை, கவிதை ஆகியவற்றையே இந்நூலில் மிக அழகாகவும், தெளிவாகவும் கூறியுள்ளார். பாராட்டத் தக்க படைப்பு.

ஆசிரியர்: ப. கோதண்டராமன்; வெளியீடு: இமயப் பதிப்பகம், நாகப்பட்டினம். விலை: ரூ. 1.50.

## டாக்டர் சேதுப்பிள்ளை

சென்னை பல்கலைக் கழகத்தின் தமிழ்த் துறைப் பேராசிரியராக இருந்து சமீபத்தில் காலஞ்சென்ற டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள், தமது இனிய தமிழ்ச் சொற்பொழிவுகள் மூலம் தமிழ் கூறும் நல்லுலகமெங்கும் பெரும் புகழ் ஈட்டியவர். அவர் பேசுகிறார் என்றால் பாமரரும் பண்டிதரும் அங்கிருந்து கேட்டு மகிழ்ந்ததைத் தமிழ் மக்கள் அதற்குள் மறந்து விடவில்லை.

இப்படிப்பட்ட தமிழ்ப் பெரியார், வக்கீல் தொழிலுக்குப் படித்து, தமிழ்ப் பணிக்கே வாழ்க்கையை அர்ப்பணித்தார். அவருடைய வாழ்க்கை வரலாற்றைப் படிக்கும்போது வியப்பும் மகிழ்ச்சியும் கலந்து கலந்து எழுகின்றன. கம்பர் பெருமையைத் தமிழகத்தில் பரப்பிய பெரிய இலக்கியச் சான்றோரில் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்களும் ஒருவர். அவர்கள் இளமைப் பருவத்தே பல காலம் கம்பராமாயணம் படிக்காமலே யிருந்தார் என்பது வியப்பாக இருக்கிறதல்லவா? அதை விட, மறைமலை அடிகளாரும், மற்றும் சில சைவப் பெரியார்களும் சேதுப்பிள்ளை அவர்களைத் தமது கம்பன் பணியைக் கைவிடுமாறு கேட்டுக் கொண்ட போது, அவர் உறுதியாக நின்று தமது கடைசி மூச்சு இருந்த வரையில் கம்பன் பணி செய்து வந்ததை நினைக்கவும் வியப்பாக இருக்கிறதல்லவா?

இப்படி அவரது வாழ்க்கையில் பல ரசமான சம்பவங்கள் காணக் கிடக்கின்றன. இனிய ஆற்றொழுக்கான சுவைமிக்க நடையில் பேசியும் எழுதியும் வந்த ஓர் பேராசிரியரின் வரலாறு, இன்னும் சற்றுச் சுவைபட எழுதப் பட்டிருக்கலாம் என்று தோன்றுகிறது.

ஆசிரியர்: திரு அ. க. நவநீத கிருட்டிணன்; வெளியீடு: திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், திருநெல்வேலி—6; சென்னை — 1. விலை: ரூ. 4.00.

'ஸேப்டி டிரைவ்'
கொண்டு
அபாயமின்றி
ஓட்டுங்கள்



சியெட் டயர்களின் பிரத்தியேகமான மெத்தை போல இயங்கும் தன்மை மோட்டார் ஓட்டுவதை அதிக சுகமாகவும் அபாயமின்றியும் செய்கிறது



"ஸைப்ஸ்"—டிரெட்டில் காணப்படும் சிறிய வட்டமான குழிகள்—மிக நன்கு ரோடைப் பிடித்துக் கொள்வதால் அதிகப்படியான பாதுகாப்பை அளிக்கின்றன. இந்தப் "பாதுகாப்பு வளையங்கள்" சியெட்டின் தனிப்பட்ட ஆழ்ந்த டிரெட் அமைப்புடன் இணைந்து பரிபூரணமாய் ஓட்டுவதற்கான தன்னம்பிக்கையைத் தருகின்றன.

# சியெட் டயர்ஸ்

## ஆப் இந்தியா லிட்.




### அத்தியாயம் 31

## நன்றிக் கடன்

**வி**ருட்டென்று எழுந்து போய்ச் சலசலப்புக் கேட்ட இடத்தில் நாணல் புதர்களை விலக்கிக் கொண்டு ஆராய்ந்தான் வடிவேலு. யாரையும் காணோம். ஆனால் புதர்களை மிதித்துத் துவைத்துக் கொண்டு ஒரு மனிதன் நடந்திருப்பது ஊகிக்கக் கூடியதாய் இருந்தது. சேற்றிலே தன் காலடிகளைப் பதித்திருந்தான் அவன். அப்படிப் பாதம் அழுந்திய இடங்களில் நாணல் கீற்றுக்கள் சிலவற்றைப் பூமியினுள் புதைத்தும் இருந்தான்.

'யாராக இருக்கும்? எவனாக இருந்தால்தான் என்ன? எதற்காக இப்படிப் பயந்து ஓடுகிறான்? நாங்களென்ன சிங்கமா, புலியா? காணக் கூடாதெனத் தடை விதிக்கப்பட்டிருக்கும் ஏதோ ஒரு மர்மமான விஷயம் தவறுதலாகக் கண்களில் பட்டு விடப் பீதியடைந்தது போல் யாருமறியாத வண்ணம் இப்படி நழுவினால் அதற்கு என்ன அர்த்தம்? நேருக்கு நேராக வந்து தான் யார் என்பதைப் புலப்படுத்திப் பேசித் தொலைத்துவிட்டுப் போவதுதானே?| சே! அநாகரிகமான ஜனங்கள்! சுத்த மோசம்!' என்று சபித்துக் கொண்டே மெல்லத் தாரா கவலையோடு காத்திருந்த பக்கமாய்த் திரும்பினான் வடிவேலு.

'உண்மையை அறிந்தால் அவள் மனம் படாத பாடு படுமே?' வந்தவன் நம்மைப் பற்றித் தவறான கருத்தை உருவாக்கிக் கொண்டதால்தானே பேச்சுமூச்சின்றிப் பதுங்கிச் சென்றுவிட்டான்!' என்று எண்ணிப் பதறுவாளே? அபவாதத்துக்கு அஞ்சி நடுங்குவாளே?'

கலவரத்துடன் தன்னை ஏறிட்டு நோக்கியவளிடம், ''ஒன்றுமில்லை, நரியோ கீரிப் பிள்ளையோ ஓடியிருக்கிறது. அவ்வளவுதான்'' என்றான் வடிவேலு.

''நல்ல வேளை!'' என்று நீண்ட பெருமூச்செறிந்தாள் தாரா. ''இதற்காகத்தான் அப்போதே கிளம்பலாம் என்று எழுந்தேன். நீங்கள் தடுத்து விட்டீர்கள்'' என்றாள். ''இருட்டிக் கொண்டு வருகிறது, பாருங்கள்! விளக்கு

வைக்கிற நேரத்தில் இந்த அமானுஷ்யமான இடத்தில் நம்மை யாராவது சந்தித்தால் என்ன நினைத்துக்கொள்வார்கள்?'' பரபரப்புடன் மோகனைத் தூக்கிக் கொண்டு புறப்பட்டாள் தாரா.

''உங்களைப் பற்றி உண்மைக்குப் புறம்பாக எவனாவது உளற் முற்பட்டால்...'' என்று பற்களை நறநறவென்று கடித்தான் வடிவேலு.... ''அடுத்த கணமே கொலை விழுந்து விடும்!''

வேகமாய் நடந்து கொண்டே, ''தாறுமாறாக எதையாவது பேசாதீர்கள். இந்தத் தேனூர் கிராமத்துக்கும் அதன் மக்களுக்கும் நான் ரொம்பவும் கடமைப்பட்டிருக்கிறேன்'' என்றாள் தாரா. ''கிராமத்துக்குப் புதியவளாக இருந்தும் அவர்கள் எல்லோருமே எவ்வளவோ அன்பு காட்டி வந்திருக்கிறார்கள் என்னிடம். வீணாகப் போகவிருந்த என் வாழ்க்கையைப் பயனுள்ளதாகச் செய்திருக்கிறது அவர்கள் என்னிடத்தில் கொண்டுள்ள அபிமானம். இந்த நிலை மாறுவதற்கு லவலேசமும் இடம் கொடுக்காத வகையில் நான் நடந்துகொள்ள வேண்டும், இல்லையா? சர்வ ஜாக்கிரதையாக அவர்கள் என்னிடம் வைத்துள்ள மரியாதையைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும் நான். அசிரத்தையாக இருந்து விட்டால் என் தலையில் நானே மண்ணை அள்ளிப் போட்டுக் கொண்டதாக ஆகிவிடும். இவ்வளவு சிரமப்பட்டு நான் அமைத்த பள்ளிக்கூடம் நொடியில் பாழாகிப் போகும்!''

வடிவேலுவுக்கு அவள் தன்னிடம் பேசுவதாகவே தோன்றவில்லை. 'தனக்குத்தானே அவள் அறிவுரைகளை வழங்கிக் கொள்கிறாளா?' என்று சந்தேகித்தான். 'நல்ல வார்த்தைகள் சொல்லி, கட்டுப்படுத்த வேண்டிய அளவுக்குஅவள் மனம் ஆட்டம் கண்டு விட்டதா?' அவனால் நிச்சயமான ஒரு முடிவுக்கு வர முடியவில்லைதான். என்றாலும் இதை ஒரு நல்ல சூசகமாகவே எடுத்துக் கொண்டு மகிழ்ந்தது அவன் மனம். ''ஏதோ கப்பல் கவிழ்ந்து விட்டது போல் பயப்படுகிறீர்களே?'' என்றான் அவன் மெல்லச் சிரித்தபடியே.

''கப்பல் கவிழ்ந்த பிறகு தலையில் போட்டுக் கொள்வதை விடக் கவிழலாம் என்று முன்னெச்சரிக்கையுடன் இருப்பது நல்லது'' என்றாள் தாரா. சட்டென்று அவனுக்கு முன்னால் பாய்ந்து சென்று நின்று வழிமறித்து, ''எப்போது பார்த்தாலும் உங்களுக்கு ஊர் ஜனங்களைப்பற்றிய விசாரம் தானா?'' என்று கேட்டான் அவன், 'என்னைப் பற்றி அக்கறையே இல்லையா' என்பது போல.

''என்னை மன்னித்துக் கொள்ளுங்கள்'' என்றாள் தாரா. மோகனைக் கீழே இறக்கி விட்டு விட்டு, அந்தக் கொன்றை மரத்தில் அவள் சாய்ந்த போது பொலபொலவென்று அவள் மீது மஞ்சள் நிற மலர்கள் சொரிந்தன. 'மங்களகரமாக' என்று எண்ணிக் கொண்டான் வடிவேலு.

''காந்தி பாடசாலையை எனக்காக ஆரம்பித்துக் கொடுத்த தேனூர் வாசிகளுக்கு நான் கடன்பட்டிருப்பது போல் என்னை இங்கே வரவழைத்து ஆதரவு தந்ததற்காக உங்கள் குடும்பத்துக்கும் எல்லாருக்கும் மேலாக உங்களுக்கும் நான் இதயபூர்வமாக நன்றி செலுத்துகிறேன். ஏற்றுக் கொள்ளுங்கள்'' என்றாள். பின்னர், ''இதை நான் முன்பே சொல்லியிருக்கவில்லையாதலால் அதற்காக மிகவும் வருத்தப்படுகிறேன்'' என்றாள்.

''அப்படி யொன்றும் துக்கப்பட வேண்டிய அவசியமில்லை. 'நன்றி, நன்றி' என்று இதுவரை நூறாயிரம் தடவைகளில் கூறியாயிற்று. உங்கள் நன்றிப் பெருக்கில் மூழ்கித் தத்தளிக்கும் நான் தப்பித்துக் கரை சேருவதற்குள் போதும் போதும் என்றாகி விடும்! பார்க்கப் போனால் நான்தான் உங்களிடம் இன்னும் அதிகமாக நன்றியறிதலைக் காண்பித்துக் கொள்ள வேண்டும் என்று கூட நீங்கள் எதிர்பார்க்கலாம்!''

''எதற்காக?'' என்றாள் தாரா வியப்புடன். ''செல்லத்தைக் கல்யாணம்



செய்து கொள்ள வேண்டும் என்று உங்களை வற்புறுத்தாமல் விட்டேனே, அதற்காகவா? அதுவானால் அவசரப் பட்டு ஆனந்தமடையாதீர்கள்! சுலபத் தில் தீர்ந்து போகிற சமாசாரமாகத் தென்படவில்லை அது. நேற்றுக் கூடப் பொன்னம்பலம் என்னிடம் வந்து அழுத்தமாகச் சொல்லி விட்டுப் போயிருக்கிறார். என் கையில்தான் எல் லாம் இருக்கிறதாம்; நான் மனம் வைத் தால் போதுமாம்; கல்யாணம் கன ஜோராக நடந்து விடுமாம்! நான் அவ ருக்கு என்ன பதில் கூறட்டும்?''

''கிளியை வளர்த்துக் கடுவன் பூனை யிடம் கொடுப்பது போல், செல்லப் பெண்ணாகிய உங்கள் செல்லத்தை அந்த முரடனுக்குத் தராதீர்கள். வேறு நல்ல இடமாகப் பாருங்கள் என்று சொல்லி விடுங்களேன்!''

''பார்த்தீர்களா, இது தானே வேண்டாமென்கிறது! பொய்யா பேசச் சொல்கிறீர்கள்?''

''அந்த மட்டும் பரவாயில்லை; கடுவன் பூனையென்றும் முரடனென்றும் என்னை நீங்கள் கருதாத வரையில் சந் தோஷம்தான்!''

''உங்கள் தங்கையிடமும் கேட்டு விட்டேன்; அவள் சொல்வதைப் பார்த் தால் வீட்டில் எல்லாருக்குமே சம்மத மாகத்தான் இருக்குமென்று படுகிறது. நீங்கள் 'சரி' என்று ஒரு வார்த்தை கூறினால் போதும். அதை உங்கள் வாயி லிருந்து வரவழைக்கும் வரையில் நானும் சளைக்கப் போவதில்லை! கடைசியில் என் தொந்தரவைத் தாள முடியாமலே நீங்கள் தலையாட்டி விடுவீர்கள்!''

''என் பொறுமையை நீங்கள் ரொம் பவும் சோதித்தால் கடைசியாக ஓர் அஸ்திரம் வைத்திருக்கிறேன். பட்டாளத் தில் சேர்ந்துவிடுவதாகப் பயமுறுத்தினால் பின்னர் நீங்கள் மட்டுமல்ல; பொன்னம் பலமே பின்வாங்கி விடுவார்!''

''ராணுவத்தில் சேருவதில்லை என்று தான் நீங்கள் முன்கூட்டியே என்னிடம் கையடித்துச் சத்தியம் செய்து தந்து விடுவீர்களே! பிறகுதான் கலியாணம்!''

''முடியாது, தாரா! என்ன பாடுபட் டாலும் அந்த வாக்குறுதியை நீங்கள் என்னிடமிருந்து பெறவே முடியாது!''

'' 'தான் பிடித்த முயலுக்கு மூன்றே கால்' என்று சாதிக்கிறவரிடம் வாதா டிப் பயனென்ன?'' என்ற தாரா, நெடு மூச்சுடன் நிமிர்ந்தாள். அந்த நெட் டுயிர்ப்பு வடிவேலு செல்லத்தை மணம் புரிந்துகொள்ள மாட்டான் என்பது உறுதியாகி விட்டதால் ஏற்பட்ட வருத் தம் காரணமாக எழுந்ததா, அல்லது அவனுடைய அந்த முடிவு நிம்மதிப் பெருமூச்சைப் பிறக்கச் செய்ததா?' அச்சம் நீங்கப் பெற்ற அமைதிப் பெரு மூச்சாகத்தான் கருதினான் வடிவேலு.

''தாரா! நடத்தை கெட்டவன் என்று பெயர் பெற்றிருந்த இந்த வடி வேலுவுக்குப் பொன்னம்பலம் பெண் கொடுக்க முன் வந்தாரானால் அதற்குக் காரணம் யார் தெரியுமா? நீங்கள் தான்! உங்கள் வருகையால் எங்கள் குடும்ப கௌரவம் ஒரேயடியாக உயர்ந்து விட்டிருக்கிறது, தாரா! இந்தக் கிராமத்தில் நாங்கள் இழந்து விட் டிருந்த அந்தஸ்தை நீங்கள்தான் மீட்டுத் தந்திருக்கிறீர்கள். எங்கள் வீட்டு வாசற்படியை மிதிக்க நேற்று வரை கூசியவர்கள் இன்று என் தகப்ப னாரை வளைய வளைய வருகிறார்கள். ஏதோ ஒரு மந்திர ஜாலம் போல் இந்த மாறுதல் உண்டாகியிருக்கிறது. இங்கு வந்த ஒரு சில நாட்களுக்குள்ளாகவே இந்தக் குக்கிராமத்தில் எல்லாருடைய மனத்தையும் நீங்கள், உங்களுடைய இனிய சுபாவத்தினாலும், அறிவுத் திற மையினாலும் கவர்ந்து விட்டீர்கள். சுபாஷ் போஸுடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ள தேசத் தலைவி யாக உங்களைக் கருதுகிறார்கள். தேனூரில் நீங்கள் அடியெடுத்து வைத் ததே பெரிய பாக்கியமாக எண்ணு கிறார்கள். அப்படிப்பட்டவர் எங்கள் வீட்டிலே விருந்தினராய்த் தங்கி யிருந் தால் எங்களுடைய பெருமைக்குக் கேட் கவா வேண்டும்?''

''அப்பாவி ஜனங்கள்!'' என்றாள் தாரா.

''பாவிகளோ, அப்பாவிகளோ எங் களையும் ஒரு பொருட்டாக அவர்கள் மதிக்குமாறு நீங்கள்தான் செய்திருக்கி றீர்கள் என்பதைக் கூற வந்தேன். உங் களுக்கு நான் நன்றி செலுத்த வேண் டியது எதற்காக என்று புரிகிறதா? ஆனால் நான் அந்தக் கடனைத் தீர்க்கப் போவதில்லை. மாறாக இந்த நல்ல காரியத்தை நீங்கள் புரிந்ததற்காக உங் களிடம் கோபப்பட்டுச் சண்டை பிடிக் கத்தான் போகிறேன்!''

''ஏன் என்று நான் கேட்கவில்லை.''

''கேட்டுத்தானாக வேண்டும், தாரா! போர்முனைக்கு நான் போக விரும்பிய தன் முக்கியமான நோக்கம் என்னவென் பது தெரியுமா உங்களுக்கு? என்னால் குடும்பத்துக்கு விளைந்த கேட்டை நானே சீர்ப்படுத்த வேண்டும் என்பதற்காகத் தான்! வீராதி வீரன் என்று பெரும் புகழும் பெற்றுத் திரும்ப வேண்டும்; என்னைப் பாராட்டிக் கொடுக்கப்பட்ட பதக்கங்களை வரிசையாக மார்பை மறைத்து அணிந்து வர வேண்டும்.

---

**இந்த இதழில் வரும் ஒரு காட்சியைத்தான் இவ்விதம் மூவர்ண அட்டைச் சித்திரமாக வழங்கியிருக்கிறார் ஓவியர் மணியம்.**

அப்போது என்னைப் பார்க்கிறவர்கள், 'அதோ! முத்தையாவுடைய மகன் போகிறான், பார்! அசகாய சூரன்!' என் பார்கள். என் அப்பாவைத் தூரத்தில் கண்டால், 'அது யார் தெரியுமா? வீரன் வடிவேலுவுடைய அப்பா!' என்று குறிப் பிடுவார்கள். 'அப்படி ஒரு பிள்ளையைப் பெறக் கொடுத்து வைத்திருக்க வேண் டாமா?' என்று உள்ள நிறைவோடு கூறுவார்கள். புதிதாக ஏற்படும் இந்த நல்லெண்ணத்தினால் இடையில் நிகழ்ந்த சில சம்பவங்களை எல்லாரும் அடியோடு மறந்து போய் விடுவார்கள். பழங் காலத்தைப் போல் முத்தையாவுடைய குடும்பத்தைப் போற்றிக் கொண்டாடு வார்கள்..... இவை யெல்லாம் நான் கட்டியிருந்த ஆகாயக் கோட்டைகள், தாரா! ஆனால் இந்தப் பகற் கனவுக ளெல்லாம் நினைவாகும் முன்னரே, அவை நினைவாக வேண்டிய அவசியமே யில்லாதபடி நீங்கள் எங்களுடைய குடும்பக் கௌரவத்தை மீட்டுத் தரும் கைங்கரியத்தைப் புரிந்திருக்கிறீர்கள்... நான் என் கடமை என்று கருதியிருந் ததை நீங்களே பூர்த்தி செய்து வைத்து விட்டீர்கள். இதனால் உங்கள் மீது எனக்கு வருத்தம்தான்!''

''உங்கள் கடமையில் குறுக்கிட்ட தாகத்தானே குற்றச்சாட்டு?''

''ஆமாம்!''

''அப்படியானால் முத்தையா அவர் களுடைய குடும்ப நலனில் அவர் மகன் வடிவேலுவுக்கு இருக்க வேண்டிய பொறுப்பும் அக்கறையும் எங்கிருந்தோ வந்த தாராவுக்கும் ஏற்படக் காரணம் இல்லை என்கிறது. சரி, இனி ஒதுங் கிக் கொள்கிறேன். ஆனால் தயவுசெய்து இதை மட்டும் சொல்லுங்கள். என்று முதல் நான் உங்கள் கண்களுக்கு வேற்று மனுஷியாகத் தென்பட்டு வருகிறேன்?''

வடிவேலுவின் மெய் சிலிர்த்தது.

''தாரா! பண்புடன் பழகத் தெரி யாத இந்தப் பட்டிக்காட்டானை மன் னித்து விடுங்கள்'' என்று அவன் கேட் டுக் கொண்டான்.

## அத்தியாயம் 32

# அவதூறு

தாராவும் வடிவேலுவும் அங்கே புதுப் புது உணர்வுகளைப் பகிர்ந்து கொண்டு அவை அடுத்தடுத்து அளித்த இனிய அதிர்ச்சிகளையும் உவகையுடன் கூடிய வியப்புக்களையும் அனுபவித்துக் கொண்டிருக்கையில் இப்பால் பொன் னம்பலத்தின் வீட்டு வாசல் கதவைப் படபடவென்று தட்டினார் சிமாச்சு.

''செல்லம்! ராத்திரிப் பொழுதிலே எவனோ கழுத்தறுக்கிறானே. யாருன்னு பாரு!'' என்று மகளுக்கு உத்தரவிட்ட பொன்னம்பலம், அதிகமாகச் சத்தப் படுத்துகிற அந்த நபர் மீது சட்டென்று கோபம் அடைந்தவராக, ''யாருடா அவன்!'' என்று இரைந்தார். மகளை உள்ளே போகுமாறு ஜாடை காண் பித்து அனுப்பி விட்டுத் தாமே ஊஞ்சலி லிருந்து எழுந்து வந்து கதவைத் திறந்தார்.

சிமாச்சுவைக் கண்டதும் அவர் கோபம் முன்னிலும் அதிகமாயிற்று. 'பொன்னம்பலத்திடம் மரியாதைக் குறைவாக நடந்து கொள்ளுமளவுக்கு இவனுக்குக் கூடத் துணிச்சல் பிறந்து விட்டதா என்ன?'

''ஓய்!'' என்று நாய் குரைப்பது போலச் 'சள்'ளென்று விழுந்தார் அவர். ''எதற்கு இப்படி ஆகாத்தியம் பண்ணு கிறாய்....?'' என்றார் பொன்னம்பலம்.

''உஷ்! உள்ளே வாங்கோ. சொல் றேன்!'' மூன்று வார்த்தைகளைக் கூறி முடிப்பதற்குள் சிமாச்சு மூன்று முறை தலையைத் திருப்பித் தெற்கு வடக்காக ஓடிய தெருவின் இரண்டு திசைகளையும் மாறி மாறிப் பார்த்தார். யாரேனும் தன்னைப் பின்தொடர்ந்து வந்து விடு வாரோ? தான் கண்டுவந்த சிதம்பர ரகசியத்தைச் சாறு பிழிந்து சர்க்கரை சேர்த்துச் சுவைபடக் கூறி முடிப்பதற்கு முன்னால் தம்மை யாரேனும் தடை செய்து நிறுத்தி விடுவார்களோ என்ற பயம் அவர் மனத்தில் நிலவியதாய்த் தோன்றியது.

''விதி முனையிலே ஹிட்லரையே பார்த்து விட்டவன் போல மிரளு கிறாயே கிடந்து'' என்ற பொன்னம் பலம் வழிமறித்து நின்றார். சிமாச் சுவை உள்ளே வர அனுமதிக்கவில்லை அவர். ''நாளைக்குப் பேசிக்கிடுவோம். எனக்கு இப்போது சாப்பாட்டு நேரம். பசி எடுக்குது. சீக்கிரமா பூஜையை முடிச் சுக்கிட்டு இலையிலே உட்காரணும்.''

''பொன்னம்பலம்! உங்களுக்கு ஒண் ணும் தெரியாது. தெரிஞ்சால் இவ்வளவு அலட்சியமாய் இருக்க மாட்டேள்.''

''என்ன ஓய், தெரியாது?'' அறைவது போலக் கேட்டார் பொன்னம்பலம்.

''என் மனசு படுகிற பாடு உங்களுக்குத் தெரியாது!''

''ஏன், உன் மனசுக்கு என்ன கேடு காலம் வந்துடுச்சு, இப்போ?''

''ஊரிலே நடக்கிறதையெல்லாம் பார்த்துட்டுத் துடிக்கிறது என் மனசு. உங்களுக்கு விளையாட்டா இருக்கு.''

''உம், நீதான் கண்ணிலே விளக்கெண்ணெயை ஊத்திக்கிட்டுக் காத்திருப்பியே! சரி, விஷயத்துக்கு வா. புதுசா என்ன நடந்து போயிடுச்சு தேனூரிலே?''

''பொன்னம்பலம்! என்ன நடந்துதுன்னு கேட்கறேள்? நன்னா கேளுங்கோ! காதல் நாடகம் நடக்கிறது சுவாமி! காதல் நாடகம் நடக்கிறது!''

''அட, சீ!'' என்று முகத்தைக் கசந்து வழிவது போல் வைத்துக் கொண்டு எரிந்து விழுந்தார் பொன்னம்பலம்.

திடுக்கிட்டுப் பின்னால் நகர, படிகளில் உருண்டு விழவிருந்த சீமாச்சு, தூணைப் பற்றிக் கொண்டு சமாளித்தார். இரண்டு இடங்களில் விட்டுப் போய் நூல் சுற்றி ஒட்டுப் போட்டு வைத்திருந்த தமது மூக்குக் கண்ணாடி கீழே விழாதவாறு தட்டுத் தடுமாறி எப்படியோ கரங்களில் ஏந்திக் கொண்டார். திகைப்புடன் பொன்னம்பலத்தை ஏறிட்டு நோக்கினார்.

''உன் ஒட்டை வாயைத் திறந்து என்றைக்காச்சும் ஒருநாள் யாரைப் பற்றியாவது ஒரு நல்ல வார்த்தை சொல்லியிருக்கிறாயா நீ? உன் காமாலைக் கண்ணிலே நல்ல காட்சியா எதனுச்சும் ஒண்ணு தென்படுதா? யாருமே சுகமா வாழக் கூடாது உனக்கு! எவனாவது சந்தோஷப்பட்டால் உனக்குக் கண்ணில் ஜலம் வந்துடுது. இவன் பெரிய மன்மத வில்லே! காதல் நாடகத்தைப் பற்றிச் சொல்ல வந்துட்டான்! போமையா, வேலையைப் பார்த்துக்கிட்டு!''

''பொன்னம்பலம்! இன்றைக்கு என்னைத் துரத்தி அடிச்சுப்புடுவேள்; நானும் போயிடுவேன். ஆனால் நாளைக்கு வருத்தப்படப் போறது நீங்கதானே?''

''பட்டால் பட்டுட்டுப் போகிறேன். அவனவன் தலையெழுத்துப் பிரகாரம் தானே எல்லாம் நடக்கும்?''—கதவைத் தாளிட முற்பட்டார் பொன்னம்பலம்.

''என்னவோ உங்க பொண்ணோட ஜாதகம் இப்படி ஆயிடும்னு நான் சொப்பனத்திலேகூட நினைக்கலே.''

மூடிய கதவு 'குபு'க்கென்று திறந்து கொண்டது. மகளைப் பற்றிய விவகாரம் என்றதும் பொன்னம்பலத்தின் மனம் பொறுக்கவில்லை. திண்ணைப் பக்கம் வந்து. ''சொல்லித் தொலே!'' என்றார் வேண்டா வெறுப்பாக.

''அடடா! எனக்கெதுக்கு வம்பு? இத்தனை நாள் பழகியும் நீங்களே என்னைச் சரியாப் புரிஞ்சுக்கலே. அப்படி இருக்கிறப்போ ஊரிலே நாலும் பேசுவா. கோழி மூட்டுகிறவன் என்கிற பேரு எனக்கு வேண்டாம்!'' சீமாச்சு படிகளில் இறங்கினார்.

''அடே! சீமாச்சு! வாப்பா இங்கே! ஆனாலும் இவ்வளவு ரோசம் உதவாது உனக்கு. இப்படி உட்கார். பசி வேளை பாரு; படபடப்பாகப் பேசியிருப்பேன். அதைப் பெரிதுபடுத்திக்கிடாதே!''

சீமாச்சு இன்னும் கொஞ்சம் பிகு பண்ணிக்கொள்ள, பொன்னம்பலம் இன்னும் சற்றுத்



தணிந்து போகப் பிறகு முன்னவர் தமது மூட்டையை அவிழ்த்தார்.

"கலியாணத்துக்கு வடிவேலு சம்மதிச்சுட்டானா?"

"நாசமாய்ப் போச்சு! இதைக் கேட்கவா இவ்வளவு ஆர்ப்பாட்டம்?"

"பதிலைக் காணுமே?"

"இன்னும் இல்லை. ஏன்?"

"அதுதானே கேட்டேன்! பொன்னம்பலம்! உங்க பெண்ணை அவனுக்குக் கொடுக்கிறதுங்கிறதை மறந்துடுங்கோ!" எதையோ அப்பால் ஒதுக்குவது போல் சீமாச்சு விரல்களை வீசினார்.

"செல்லத்தை வடிவேலுவுக்குக் கொடுக்கணும் என்கிற ஆசையை என்னிடம் வளர்த்ததே நீதான். இப்போ நீயே இப்படிப் பேசினால் என்ன அர்த்தம்?" என்றார் பொன்னம்பலம்.

"அனர்த்தமில்லை. காரண காரியத்தோடுதான் இந்தச் சீமாச்சு எப்பவும் பேசுவான்!"

"வடிவேலுவைப் பற்றிப் பழைய குப்பையையெல்லாம் கிளறாதே! அதெல்லாம் முடிஞ்சு போன சமாசாரம்னு நீயே சொல்லியிருக்கியே!"

"என்னை என்ன பழைய சோற்றுப் பேர்வழின்னு நினைச்சேளா? நாளைக்கு ஒரு தினுசுப் பலகாரம் நம்ப வீட்டிலே! பொன்னம்பலம்! வடிவேலுவை வழிக்குக் கொண்டு வர யாரை ஏவினேள்?"

"தாராவைத்தான் நம்பிக்கிட்டிருக்கிறேன். உற்சாகமாக இருந்தாங்களே, காரியத்தை முடிக்கத் தருவதிலே?"

சீமாச்சு, 'ஹெஹெஹெஹெ' என்று கெக்கலித்தார். வீதியை இன்னும் இருமுறை இப்படியும் அப்படியுமாய்த் தலையை ஒடித்து நோக்கினார். யாரும் இல்லை என்பது உறுதியானதும் திண்ணையில் ஏறி உட்கார்ந்து நன்றாய் அசைந்து கொடுத்துத் தம்மைச் சௌகரியப் படுத்திக் கொண்டார். பின்னர், "உற்











சாகமாக இருந்தானா? காரியத்தை முடிக்கிறதிலேயா?'' என்றவர் கண் சிமிட்டிக் கையசைத்துப் பொன்னம்பலத்தை அருகில் அழைத்தார். ''இட்டத்தில் வாருங்கோ, சொல்கிறேன்!'' அவர் தலை தம் பக்கமாய்ச் சாய்ந்ததும், ''தன் காரியத்தை முடிச்சுண்டுட்டான் அவன்!'' என்று கூறி விட்டுப் பீறிக்கொண்டு வந்த சிரிப்பை அடக்க மாட்டாது அண்ணாந்து நோக்கிக் கொக்கரித்தார் சீமாச்சு.

பொன்னம்பலத்துக்கு எல்லாம் புரிந்து விட்டது போலும் இருந்தது, ஒன்றுமே புரியாதது போலும் இருந்தது. ''சீமாச்சு! யாரைப் பற்றி என்ன பேசுகிறோம் என்கிறதை அளந்துக்கிட்டு வாயைத் திறக்கணும்'' என்று கடுகடுத்தார் அவர். ''நிதானம் இழந்து எதையும் பிதற்றி விடாதே. வேண்டாம்!'' என்றபோது அவர் குரலில் இலேசான நடுக்கம் இருந்தது.

''உங்களைப் போன்ற ஒரு பிரகிருதியை நான் கண்டதேயில்லை'' என்றார் சீமாச்சு சிறிதுகூடக் கவலையின்றி. ''ஆற்றங்கரையிலே நாணல் புதர்கள் மண்டிக் கிடக்கிற பக்கமாகச் சாயங்கால வேளையிலே போய்ப் பார்த்தால் அந்தச் சூர்ப்பனகையோட லீலைகள் தெரிய வரும். தண்ணியை அவள் காலாலே அளையறதும் இவன் அவள் கையைப் பிடிச்சு இழுக்கிறதும் ... வெட்கக் கேடு!''

''டேய்!'' என்று ஓர் அதட்டல் போட்டார் பொன்னம்பலம், பண்ணையாள் ஒருவனை அதிகாரம் பண்ணுவது போல. அவருடைய கர்ஜனையைக் கேட்டு ஒருகணம் கதிகலங்கித்தான் விட்டார் சீமாச்சு. துணுக்குற்றிருக்கும் அவரைத் தொடர்ந்து மிரட்டத் தீர்மானித்தவராக, ''எழுந்திருடா!'' என்று கட்டளையிட்டார் பொன்னம்பலம், திண்ணையில் தாம் அமர்ந்திருந்தவாறே.

சட்டென்று தோளில் இருந்த துண்டை எடுத்துக் கையில் சுருட்டியவாறே அலறிப் புடைத்துக் கொண்டு கீழே இறங்கி ஒடுங்கி நின்றார் சீமாச்சு.

''டேய்! நான் இப்போ சொல்றதை நல்லாக் கேட்டு மனசிலே பதிய வைச்சுக்கிடு. தாரா இருக்காங்களே, அவுங்க இந்தக் கலியுகத்திலே கண்கண்ட தெய்வம்! இந்தக் கிராமத்திலே பச்சைக் குழந்தை முதல் தொண்டு கிழவன்வரை அப்படித்தான் நினைச்சுக்கிட்டிருக்காங்க. உன்னுடைய ஊத்த வாயாலே அவங்களைப் பத்தி அவதூறு ஒரு வார்த்தை இனிமேல் சொன்னியோ, தோல் உரிஞ்சிடும்! ஜாக்கிரதை! புளிய மரத்

திலே கட்டி வைச்சு விளாசச் சொல்லி நாலு ஆளுங்க கையிலே கருவேல மரத்துக் கிளைங்களை ஒடிச்சுக் கொடுத்துடுவேன், பத்திரம்!

''தாராவைப் பற்றி அவங்க தேனூருக்கு வந்த புதுசிலே என்னண்டை வானளாவப் புகழ்ந்த அதே நாக்குத் தானே இன்னைக்கு நரம்பில்லாமல் தூஷிக்குது? அறுத்து எறிஞ்சுப் போடுவேன் அதை, என் கையாலேயே! அற்பப் பயலே! ஓடு, இங்கேயிருந்து!''

பொன்னம்பலம் பணக்காரர், செல்வாக்குடையவர், பெரிய மனிதர் என்பதோடு பொல்லாதவரும் கூட. தீர்மானமாக நினைத்ததை நிச்சயமாக நிறைவேற்றியும் வைக்கக் கூடியவர். இதை நன்கு அறிந்தவர்தான் சிமாச்சு. ஆகவே பிள்ளையார் பிடிக்கப் போய்க் குரங்காய் முடிந்ததே என்று பதறியவராக அங்கிருந்து நழுவி விரைந்தார். தமது வீட்டை நெருங்குகையில் தாம் குரங்கைப் பிடிக்கப் போய் நல்ல காலமாக அது பிள்ளையாராகவே முடிந்து விட்டதாகக் கூடத் தோன்றியது அவருக்கு.

ஆனால் பொன்னம்பலம் அந்த நிகழ்ச்சிக்கு இன்னும் முற்றுப் புள்ளி வைக்க வில்லையே. பிள்ளையார் சுழி தானே போட்டிருந்தார்!

வாலைச் சுருட்டிக் கொண்டு சிமாச்சு போன பிறகு, நீண்ட நேரம் அதே இடத்தில் சிலையாக அமர்ந்து சிந்தித்தார் பொன்னம்பலம்.

'சாந்தமே உருவாக விளங்கித் தன்னலமற்ற சேவையினால் சாது ஜனங்களையும் சாமர்த்தியசாலிகளையும் ஒருங்கே தன்னிடம் கவர்ந்த தாராவின் மீதா பழி சுமத்தத் துணிந்தான் சிமாச்சு? கல்வி கற்பித்தவள் தெய்வம் என்பார்களே! சரஸ்வதி தேவியே மனித உருவிலே வந்து போதிப்பது போல ஊரில் உள்ள குழந்தைகளை யெல்லாம் அன்போடு அழைத்து வைத்துக் கொண்டு அறிவு புகட்டும் அந்தப் பெண்ணரசிக்கா அவப்பெயர்? கருணையே வடிவாகக் காட்சியளித்து ஏற்றத் தாழ்வுகள் ஏதும் பாராமல் எல்லாருக்கும் தன்னுலான உதவிகளை யெல்லாம் செய்து பொன்னனவள் என்று போற்றப்படுகிற அவளையா ஏசினன் அந்தக் கிராதகன்? தாய்நாட்டுக்காகப் பிராணத் தியாகம் செய்த உமாகாந்தின் மனைவியையா? சுபாஷ் போலுடைய அந்தரங்க அபிமானத்துக்கும் மதிப்புக்கும் பாத்திரமான அவளையா?'

''அப்பா! சாப்பிட வாங்க! எல்லாம் ஆறிப் போகிறது!'' என்று மகள் நிலைப்படியருகில் நின்று அழைத்தாள்.

''எனக்குப் பசி இல்லை, செல்லம்! நீ சாப்பிட்டு விட்டுப் படு!'' என்றார் பொன்னம்பலம். பிறகு, ''ஆணியிலே என் சட்டையை மாட்டியிருக்கிறேன். எடுத்துக்கிட்டு வர்றியா?'' என்று கேட்டார்.

சட்டையைக் கொண்டு வந்து அவர் பக்கமாய் நீட்டியபோதுதான் தகப்பனுரின் கண்களில் நீர் தளும்பி யிருப்பதைக் கவனித்தாள் செல்லம். ''என்னப்பா இது?'' என்று வியந்தாள்.

''கழிக் காற்று அடிக்கதில்லே, தூசு விழுந்துடுச்சு. நான் கொஞ்சம் காலாற நடந்துட்டு வர்றேன்; கதவைச் சாத்திக்கிட்டு இரு'' என்றார் பொன்னம்பலம், சட்டையை மாட்டிக் கொண்டு.

''மழை வரும் போல் இருக்கிறது. அப்பா! குடையை எடுத்துப் போங்கள்'' என்றாள் மகள்.

அதையும் பெற்றுக் கொண்டு கிளம்பிய பொன்னம்பலம், 'ஊருக்குப் பெரிய மனுஷனு' இருப்பதைப் போலப் பாவம் வேறே கிடையாது!' என்று எண்ணலானார். அவர் கால்கள் அவரைக் காந்திப் பாடசாலைக்கு இட்டுச் சென்றன.

(தொடரும்)

"வீக்...க்...விக்...க்...ற்...க்..."

ராஜத்தின் நெஞ்சு பதைத்த பதைப்பை அவளைப் போன்ற ஒரு தாயால்தான் உணர முடியும். கையில் இருந்த கரண்டியைக் கூடக் கீழே போட மறந்தவளாய்க் கூடத்தை நோக்கி விரைந்தாள். அவள் விரைவுக்குப் பத்துப் பங்கு விரைவாய்ப் பாபு வாசலை நோக்கி ஓடினான்.

''கடன்காரன்... கடன்காரன்... இந்தக் குழந்தையிடம் என்ன வன்மமோ அவனுக்கு'' என்று பாபுவைச் சபித்துக் கொண்டே, தூளியில் துடித்த குழந்தையை வெளியே எடுத்துத் தன் நெஞ்சோடு சேர்த்து அணைத்துக் கொண்டாள்.

கழுக்கு மொழுக்கு என்றிருந்த கண்ணனின் கன்னம் கன்றிச் சிவந்திருந்தது. அக் கன்னக் கதுப்பில் பாபுவின் விரல் நகங்களின் பதிப்பு பளீரெனத் தெரிந்தது. பிராண்டலின் வேதனையைத் தாங்கும் வலுவற்ற குழந்தை துடியாய்த் துடித்துக் கொண்டிருந்தது. தாயின் அணைப்பிலும்



# அனுபவந்தான்

அவ்ன்பட்டு விரல்களின் பதவிசுத் தடவல்களி லும் வலி குறைந்ததாகத் தெரியவில்லே. 'க்வீக்.... ற்....க்....' அப்படியோர் அலறல். கேட்போரின் குடலெல்லாம் சுருண்டு நடுக்க மூறுகிற அளவுக்குக் கத்தல்; கதறல்!

ராஜத்துக்கு வந்த கோபம் அப்படி இப்படி யென்றில்லே. வீரிட்டழும் குழந்தையின் வேதனையைத் தணிக்க முடியாமல் ஏதோ வெறி கொண்டவளேப் போல் வாசல் பக்கம் விரைந்தாள். குழந்தையின் பட்டுக் கன்னத்தைப் பாழும் விரல்களால் புலியாய்ப் பிராண்டிப் பிடுங்கி விட்டிருந்த பாபு மட்டும் அவள் கையில் அகப்பட்டால்...?

எல்லாருக்கும் இருக்கும் இயல்புதான். அவரவர்களுக்குக் காரியத்தைவிட வீரியமே பெரிசல்லவா ?

''கடன்காரப் பாவி... இதனிடம் அவனுக்கு என் இத்தனே புகைச்சல்...? கிரித்துக் கண்ணேப் பிடுங்குகிருனே பாவி...'' எனத் திட்டியவள், ''அப்பா, அப்பா! வாண்டாண்டா, கண்ணு! அழாதே, அழாதே!'' என்று குழந்தையைத் தேற்றினுள்.

குழந்தையின் அழுகுரலேக் கேட்டுப் பக்கத்து விட்டு அம்மாள் பதறி ஓடி வந்தாள். குழந்தைக்கு என்னவோ ஏதோவென்று உள் வயிற்றில் உதைப்பு. ''என்ன ராஜம்! குழந்தைக்கு என்ன?'' உண்மையின் துடிப்பே அலாதிதான். அந்த அம்மாளிடம் அதைக் கண்டாள் ராஜம்.

இனி என்ன நடக்க வேண்டும்? இந்தத் துக்கிரிப் பயல் ஊரைக் கூட்டி விட்டான். இவள் வீட்டில் பிள்ளே அழுதால் அக்கம் பக்கம் கூடுமளவுக்கு அத்தனே பெரிசாகப் போய் விட்டது. இப்படியொரு நிலேமையை ஏற்படுத்திய பாபுவை நினேக்கும்போது....

பாபுவுக்கு ஆயுசு கெட்டி!

குழந்தையின் ரோஜாக் கன்னத்தில் இழைந்த இளஞ் சிவப்பில் கூர் நகத்தின் கொடுமை பதிந்து பட்டை பட்டையாய் மூன்று சிவப்புமேடு படமெடுத்து நேரத்துக்கு நேரம் அதன் வேகம் அதிகமாகிக் கன்னமே வீங்கிவிட்ட நிலேயில், தேங்காய் எண்ணெயை இலேசாகத் தடவி விட்டு ஒரு கையால் அவனே மார்போடு அணேத்துக் கொண்டு தலேயைக் கோதியவண்ணம் விசிறினுள்.

எல்லேமீறிய வலிதந்த வேதனேயின் மயக்கமோ, தாயின் அன்பு ஸ்பரிசத்தின் இறக்கமோ, கண்ணன் அப்படியே உறங்கத் தொடங்கிவிட்டான்.

''எமனுவ்ப் போகிறவன்....!''

''குழந்தையைத் திட்டாதே, ராஜம்! பாவம் பிஞ்சு மனசு. என்னவோ விளேயாட்டுப் போக்கில் தம்பியின் கன்னத்தைப் பதம் பார்த்து விட்டான்....''

''இதுவா விளேயாட்டு? இன்னைக்கில்லா விட்டால் என்னுவது அவனே இவனுக்கு எமனுக வாய்த்து விடுவான். ஊரில் உலகத்தில் பிள்ளேகள் இல்லே? தம்பிப் பாப்பா, தங்கச்சிப் பாப்பா என்று அன்பாய்ச் சுற்றிச் சுற்றி வருமே தவிர, இவனேப் போல் யாரையுமே நான் கண்டதில்லேயம்மா!'' என்று அங்கலாய்த்தாள் ராஜம்.

''பாவம்..பாபு எங்கே காணும் ராஜம்?''

''கழிசடை.. ஒழியட்டும், எங்கேயாவது. செய்யறதையும் செய்து விட்டு எங்கேயாவதும் மூலேயிலே அவன் அப்பா வருகிற வரைக்கும் முடங்கிக் கிடப்பான்.''

''குழந்தை தூங்கட்டும். நான் அப்புறமா வரேன்...''

வந்தவள் போய் விட்டாள். வீட்டில் நடக்கும் சிறு சிறு விஷயங்களேயும் வீதிக்கு அறிவித்து விடுகின்ற — அப்படி நடந்து கொள்கின்ற பாபு மட்டும், தீயாய்த் தகித்துக் கொண்டிருக்கிற ராஜத்தின் முன் வந்தால்....

பாபுவுக்கு ஆயுசு கெட்டி!

ஃ ஃ ஃ

**வா**சல் திண்ணேயின் வளேவுக்கடியில் ஒளிந்து கொண்டிருந்த பாபு, தம்பியின் குரல் அடங்கி விட்டதைக் கேட்டுத் திருப்திப் பெருமூச்செறிந்து எழுந்து நின்றுன். கண்ணனேத் தூளியில் தூங்கப் பண்ணி விட்டு



# அறிவு

எஸ்.பெருமாள்

திமிர்ந்த ராஜத்தைப் பார்த்ததும் தலையைப் பின்னுக்கிழுத்துக் கொண்டான். மீண்டும் திண்ணை வளைவையே தற்காப்புக்காகத் தஞ்சமடைந்த போது, வாசற்கதவு படீரெனச் சாத்தப்படுவது கேட்டது. ராஜத்தின் கோபச் சொற்களும் தொடர்ந்தன.

''வீட்டுக்குள் வரட்டும் சொல்றேன். இவனை ஏன் இப்படிக் கறித்துக் தொலைக்கிறான்? தம்பியிடம் இப்போதே பிடித்து மல்லுக்கு நிற்கிறானே...''

''ஹுக்கும்! சொல்லிண்டு போறதைப் பார், போறதை. தம்பி...தம்பி.....தம்பி... சதா அவனைத் தூக்கிவைச்சுண்டு கொஞ்சுவா. என்னைக் கொஞ்சமானும் சீண்டினாத்தானே? நானும்தான் எத்தனை நாள் பொறுத்துப் பொறுத்துப் பார்ப்பேன். இன்னிக்கு எனக்கே பொறுக்கலே. அதுதான் அவனைப் பிராண்டி விட்டுட்டேன்....''

வாய்க்குள் முணுமுணுத்துக் கொண்டிருந்த பாபுவுக்குத் தாயின் போக்குப் புரியவில்லை. எத்தனையோ வயதைக் கடந்தவர்களும் வாழ்வில் பலவற்றையும் பார்த்தவர்களும்கூட இன்னமும் பிறர் மனத்தைப் புரிந்து கொள்ளும் ஆற்றலற்றவர்களாக இருக்கும் போது மூன்று வயதுகூட நிரம்பாத அவன் எம்மாத்திரம்?

தாயன்பு முழுதும் தனக்கு மட்டுமே வர்ஷிக்கப்பட வேண்டுமென்று விரும்பும் அப் பிஞ்சு மனம், அதற்குப் போட்டியாக வந்து விட்ட அம்பிப் பாப்பாவைக் காணும் போது ஆத்திரம் கொள்ளுவதில் ஆச்சரியமென்ன இருக்கிறது?

இன்று காலை முதல் ஒவ்வொரு விநாடியையும் உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டே வந்திருந்த பாபு தனிமையும் சந்தர்ப்பமும் கிடைத்தபோது சரியாக வஞ்சம் தீர்த்துக் கொண்டு விட்டான்.

தாயன்பின் பூரணத்துவத்தைப் பெற முடியாத பாபு, தந்தையின் அன்பையாவது முற்றிலும் கவர்ந்திழுக்க வேண்டும், அதில் தம்பியும் பாகத்துக்கு வந்துவிடக் கூடாது என்று துடித்தவனுக்கு வாய்ப்புக் கிடைத்தால் தானே? தந்தையைக் காணும் நேரமே கண நேரம்தான். அந்நேரத்திலும் முழுமையாகப் பேச முடியாது. காலைப் பரபரப்பில் குழந்தையோடு கொஞ்சிக் கொண்டிருக்க ஏது நேரம்? ஒன்பதரை மணிக்கு ஆபீஸ் செல்லுபவன் மாலை ஏழு மணிக்குத் திரும்பும்போது, தூக்க தேவதையின் கரங்களில் துவண்டு கொண்டிருக்கும் பாபுவைத்தான் காண முடியும். பேசவும் விளையாடவும் நேரம் ஏது? ஆனால் பாபு இதை உணரவில்லை.

'அப்பாதான் நல்ல அப்பா. அப்பாவுக்கு என்னையும் பிடிக்கும்; தம்பியையும் பிடிக்கும். அப்படியும் சொல்றதுக்கில்லே. என்னையும் பிடிக்காது; தம்பியையும் பிடிக்காது. இப்படியும் சொல்றதுக்கில்லே. இப்படிப் பட்டும் படாமலும் போறதனாலேதான் அவராலே அப்பாவா இருக்க முடியறதோ? ஆனால் இந்த அம்மாவுக்கு எப்பவுமே தம்பின்னா ஒஸ்தி. அவனைத் தூக்கி வைச்சுண்டு கொஞ்சத் தெரியும். அப்பா யாருடைய பக்கமுமில்லே. அம்மா தம்பி பக்கம். நான்தான் தனி.'

இந்த எண்ணம் இதயத்தில் இடம் பிடிக்கத் தொடங்கியவுடன் அழுகையும் அணை கட்டித் தேங்கியது.

''இந்தத் தம்பிப் பயல் பிறக்கறதுக்கு முன்னாலே அம்மா எங்கிட்டே நன்னாத்தானே இருந்தா? இவன் பொறந்தப்புறம்தான் அவனையே பார்த்துக்கிறா... சீ... இவன் ஏன் பொறந்தான்....? இவன்தான் அம்மாவையே மாத்திப்பிட்டான்....''

தன் மீது மட்டுமே தனித்து அளிக்கப்பட்ட தாயன்பின் பெரும் பகுதியை — ஏன் பாபுவின் எண்ணப்படி முழுமையுமே — தட்டிப் பறித்துக் கொண்டு விட்ட தம்பியைக் கண்டால் அவனுக்குக் கோபம் கோபமாக வந்தது.

ராஜம் இரண்டாவது முறை 'உண்டாகி' யிருந்த தொடக்கத்திலேயே பாபுவைத் தன்னருகே நெருங்க விடவில்லை.

''அம்மா, அம்மா!'' என்று தாயின் நிழலிலேயே தவழ்ந்து வளர்ந்து விட்ட பாபு சட்டென்று எப்படி விலகிப் போய் நிற்பான்? அவனால் விலக முடியவில்லை; ஆகவே விலக்கப்பட்டான்! பாபுவால் பழங் கதையை நினைத்துப் பொருமத்தான் முடிந்தது.

'சீ, அம்மாவாம், அம்மா! தம்பித் தடியன்! இன்னிக்குக் காலேலே பாருங்கோ,— இன்னிக்கு என்ன ரொம்ப நாட்களாகவே இப்படித்தான். அம்மா என்ன செஞ்சா தெரியுமா?''

காலையில் நடந்தவையெல்லாம் அவன் கண் முன்னே மின்னின!

ஆறு மாதங்களாகவே தானாகக் குளிக்கும் பழக்கம்தான். இருந்தாலும் அவனுக்கு என்னவோ ஓர் ஆசை.

''அம்மா, குளிப்பாட்டி விடும்மா...வெந்நீர் ஆறிப் போகிறது....''

''ஐயோ, கரிசனமே! போய்க் குளியேன். வயசாகலே.''

'அம்மாவுக்கு ரொம்பத்தான் 'இது'. இப்ப மட்டும் வயசாகலியோன்னு கேப்பா.... வேறே ஏதானுமானால், 'உனக்கு என்னடா தெரியும்? சின்னப் பின்னே'ன்னு வெரட்டுவா. பெரியவங்கள்ளாமே இப்படித்தான்.'

பாபு சிந்தித்துக் கொண்டே சிலையாக நின்று கொண்டிருந்தான்.

''ஏன் மரமாட்டம் நிக்கறே? குளிச்சிப்பிட்டு வாயேன்....''

இப்படிச் சொன்ன ராஜம் சும்மா இருந்தால் தேவலே. கண்ணனைக் குளிப்பாட்ட எடுத்து வந்தாள்.

தம்பியைக் குளிப்பாட்டும்போது பாபு வைத்த கண் வாங்காது பார்ப்பது வழக்கம். இன்று காலையில்கூட அவன் ஒருவித கோபத்துடனும் ஏமாற்றத்துடனும் பார்த்துக் கொண்டிருந்தான்.

குழந்தையைக் குளிப்பாட்டியதும் அவனை மெல்லத் தூளியில் விட்டு விட்டுத் திரும்பிய ராஜம், அதுவரையில் குளிக்காமல் நின்று கொண்டிருந்த பாபுவைக் கண்டாள்.

''இன்னும் குளிக்கல்லியாடா நீ?''

''இல்லே. நீ குளிப்பாட்டி விடும்மா.....''

''எனக்குக் கொள்ளை வேலே. உன்னோடே விளையாட யாருக்குப் பொழுது இருக்கு?''

''தம்பியைமட்டும் குளிப்பாட்டினியே...''

# பர்னல் உங்களுக்கு உதவியாயிருக்கும்பொழுது

சமையல் வேலையை நிறுத்த வேண்டாம். பர்னல் தடவுங்கள். அது உடனே நிவாரண மளித்து, புண்ணை சீக்கிரத்தில் ஆற்றுகிறது. வெட்டுக்காயங்கள், சுட்ட புண்கள், பூச்சி கடிகள் மற்றும் சிராய்ப்பு போன்றவைகளுக்கு நிவாரண மளிக்கக்கூடிய ஒரு ஆன்டி ஸெப்டிக் மருந்து பர்னல். எதிர்பாராத விபத்துக்களுக்கு ஒரு பர்னல் ட்யூப்பை உங்கள் கைவசம் வைத்திருங்கள் – உங்களுக்கு உபயோகப்படும்.




# பர்னல்

சிறந்த ஆன்டிஸெப்டிக் ஆயின்ட்மெண்ட் — 20 வருஷங்களுக்கு மேலாக பெயர் பெற்றது.

பிரூக்ஸ் மற்றும் க்ரைமிக்ஸ் தயாரிப்பாளர்களான பூட்ஸ் Boots கம்பெனியாரின் ஓர் சிறந்த தயாரிப்பு.

**இனாம்** நீங்கள் வாங்கும் ஒவ்வொரு பர்னல் ட்யூப்புடனும் ஒரு அழகான புட்-ரூல் கிடைக்கும்.

NATIONAL SS-341



செங்கற்பட்டு மாவட்டப் பத்திரிகை நிருபர்கள், எழுத்தாளர்கள் ஜூலை 1-ந் தேதியன்று காஞ்சீபுரத்தில் சென்னை முதலமைச்சர் திரு காமராஜ் அவர்களின் தலைமையில் முதலாண்டு விழாவை விமரிசையாகக் கொண்டாடினர். விழாவில் திரு நா. பார்த்தசாரதி அவர்களும் திரு சோ. சிவபாதசுந்தரம் அவர்களும் சிறப்புரையாற்றினர்.

''அட கழுதை! ஆறு மாசக் குழந்தை உனக்குப் போட்டியா.... ஏன், எதுக்கானும் அவனை இழுக்கறே? எல்லாம் நீயும் அவனை மாதிரி இருந்தப்போ தான் செய்யாமல் வேறே யாரு செஞ்சா?''

சிறு குழந்தைக்கு வயதைப் பற்றிச் சொன்னால் தெரியுமா? வழக்கத்தைச் சொன்னால் தான் புரியுமா?

பாபு அடமாக நின்றான். உள்ளே இரும்பியவனின் முன்றானையைப் பிடித்து இழுக்கவே, வேகத்தில் தடுமாறிக் கீழே விழ இருந்தவள் சமாளித்துத் தூணைப் பிடித்துக் கொண்டாள். கனல் தெறிக்கும் விழிகளுடன் பாபுவை ஒரு முறை முறைத்தாள்.

சர்வாங்கமும் ஒடுங்க, பாபு அடுத்த அறைக்குள் நுழைந்து ஒளிந்து கொண்டான்.

''தம்பி....தம்பின்னு எந்நேரமும் என்னை கரிப்போ.... மூதேவி ஜன்மம்....'' என்று திட்டிய ராஜம் சமையல் அறைக்குள் நுழைந்தாள்.

அறைக்குள் பதுங்கி நின்று கொண்டிருந்த பாபு மெதுவாக வெளியில் வந்தான். தூளியில் நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்த கண்ணனை முறைத்துப் பார்த்தான். அவனுக்குக் கிடைக்கின்ற அன்பும், சலுகையும் தனக்குக் கிடைக்கவில்லையே என உள்ளூறப் புழுங்கினான். தனக்கும் இத்தனையும் இரண்டாண்டுகளுக்கு முன்னர் நடந்திருந்தால் என்ன? இன்று நினைவு தெரிகிறபோல் ஒன்றையும் செய்யவில்லையே அம்மா.

வேதாந்தமும் விளக்கமும் பேசும் எத்தனையோ பெரியவர்கள் இன்னமும் 'அவனுக்கு—எனக்கு' எனத் தராதரம் பிரித்து வேறுபாடு காணும்போது பாபுவின் பிஞ்சு நெஞ்சம் எத்தனை தூரம் பேதலிக்கும்?

அந்தப் பேதலிப்பின் பிரதிபலிப்புத்தான் கண்ணனின் கதறல்!

''பாவம், கண்ணனின் கன்னம் எப்படி இருக்கும் இப்போது? சீ... ரொம்பக் கோவம் தான் எனக்கும். அம்மா தானே மாட்டேன்னு சொன்னு? அவனென்ன பிராண்டியிருக்கணும்? தம்பியைப் பிராண்டி விட்டுட்டேனே......!

'ம்.... தம்பி இருக்கிறதாலேதானே அம்மா என்னைப் பார்க்கவே மாட்டேங்கிறு? அவன் வந்ததுக்கப்புறம்தான் அம்மா என்னை வரவிட மாட்டேங்கிறுள்! அதுக்கு முன்னாலே என்னை மடிமேலே வைச்சுப்பா. பாட்டெல்லாம் பாடுவா. எங்க அம்மா நன்னாப் பாடுவா. அதெல்லாம் நன்னு நினைப்பிருக்கே. இப்போத்தான் தம்பியைத் தூக்கி வைச்சுக்கிறு... என்னைக் கிட்டேகூட வரவிட மாட்டேங்கிறு. எல்லாம் தம்பியாலே வந்ததுதானே? அவனைப் பிராண்டினதிலே என்ன தப்பு இருக்கு?'

இப்படித் தனக்குத் தானே ஆட்சேப சமாதானங்கள் சொல்லிக் கொண்ட பாபு தம்பியைப் பார்த்துப் பொருமுவதும், பிறகு அவனுக்கு இரக்கப்படுவதுமாக மாறி மாறி எண்ணினான். ஆனால் ராஜத்தைப் பார்க்கும் போதெல்லாம் ஒரே மூச்சாய் உள்ளுக்குள் திட்டுவதுமாக வளர்ந்தான்.

ஃ ஃ ஃ

தலை கொள்ளாத அளவுக்குப் பெரிய நீல நிற நைலான் ரிப்பனைக் கையகலப் பூபோல் அழகாக முடி போட்டு விட்டுக் குழந்தையின் முகத்தை நிமிர்த்தினுள் ராஜம். கன்னங்களில் பட்டையாய்ப் படர்ந்திறங்கிப் பின் மீண்டும் தலைக்குச் சென்று பூவாய்ப் பூத்திருக்கும் அழகை ரசித்த ராஜம், வலக் கண்ணுக்குச் சற்றே நேர்இறக்கமாய்க் குழி விழும் கன்னக் கதுப்பில் திருஷ்டிப்பொட்டை இட்டு விட்டாள். ''சமர்த்துக் கட்டி, தூங்கப் போடி, ராஜாத்தி!'' என்று சொல்லி நெற்றியில் முத்தமிட்டுத் தூளியை நெருங்கியவள், தூளியின் கயிற்றைப் பிடித்துக் கொண்டு பக்கத்தில் நின்ற கண்ணனை நோக்கினுள்.

''அம்மா....'' என ஏதோ சொல்ல வாயெடுத்தவன், ராஜத்தின் கடுமை நிறைந்த முகத்தைக் கண்டு தயங்கி நின்றான்.

''ஒத்திப் போயேண்டா.... ராதா தூங்க வேண்டாம்? போ, அந்தப் பக்கம்.....''

தூளியைத் தன் இரு கைகளுக்குள்ளாகச் சுற்றிக் கொண்டு ''ஊஹூம். மாட்டேன். இது என்னுடைய தொட்டில். பாப்பாவைத் தூக்கி வெளியிலே போட்டுடு. அவ வேண்டாம்'' என்று கூறினான்.

''என்ன சொன்னே? என்னடா சொன்னே? நீ ஒழியேன். கரிச்சுக் கரிச்சுக் கண்ணைப் போடாதே பாவி. தள்ளு!'' என மூர்க்கத்தனமாக ஒதுக்கித் தள்ளி விட்டு ராதாவைத் தூளியில் விட்டாள்.

''ஏன் வெறிக்கப் பார்க்கிறே குழந்தையை? அவள் தூங்கட்டும். ஏதாவது விஷமம் பண்ணினியோ உரிச்சுடுவேன், உரிச்சு.''

எதையோ கேட்க விரும்பும் எண்ணத்துடன் கண்ணன் அங்கேயே நின்றான்.

''சாப்பிட்டியா, இல்லையா? எடுத்து வைச்சேனே! என்ன பண்ணினே?''

''ம்... இன்னும் சாப்பிடலே. நீ ஊட்டி விடுவாயாக்கும்னு....''

''ஊட்டி விடறதுக்கு வயசைப் பாரு! ராதாவை ஒண்ணும் பண்ணிப்பிடாதே....'' என்று எச்சரித்த ராஜம் சமையலறைக்குள் நுழைந்தாள். பிறகு ஒரு விநாடி தயங்கியவள் திரும்பிப் பார்த்தாள். கண்ணன் தூளியை விலக்கிக் கொண்டு பாப்பாவைப் பார்ப்பதைக் கண்டாள்.

''டேய்...!''

தாயின் உறுமலைக் கேட்டு வெலவெலத்துப் போனவன் ஒரே ஓட்டமாக ஓடினான் வாசல் பக்கம். மூன்று வயதுப் பையனுக்குத்தான் எத்தனை வேகம்?

ராஜம் தன் காரியத்தில் கவனமானாள்.

ஃ ஃ ஃ

''**பா**பு அண்ணா!....''

அறைக் கதவருகில் தயங்கித் தயங்கி நின்று கொண்டிருந்த தம்பி கண்ணனை ஏறிட்டு நோக்கினான் பாபு.

''பாபண்ணா.''

''வாயேண்டா, உள்ளே. என்ன வேணும் கண்ணனுக்கு?'' பாபுவின் குரலிலே சகோதர பாசத்தின் முத்திரை ஆழப் பதிந்திருந்தது. கண்ணன் உள்ளே வந்தான். அவனுக்கு மூன்று வயது; பாபுவுக்கு ஐந்தரை. தன்னை விடச் சற்றே பெரியவனானாலும் அண்ணன் என்ற மதிப்பும் பயிசும் கொடுப்பவன் கண்ணன். தம்பி மேல் அழியா அன்பு பாபுவுக்கு. அவனது கண்கலங்காமல் பார்த்துக் கொள்வதே பாபுவின் முக்கிய வேலை. அவனுக்கு மிகவும் பிடித்தமானதும்கூட.

தம்பி எதையோ எதிர்பார்த்திருந்து, அந்த ஏமாற்றத்தின் சுமை தாங்காமல், தன்னிடம் வருகிறான் என்பதை ஒரு நொடியில் உணர்ந்து கொண்ட பாபு, ''உள்ளே வாடா, கண்ணா!'' என்று தானே எழுந்து போய் அவனை அழைத்து வந்தான்.

''என்ன வேணும், கண்ணா? சாப்பிட்டியோ?'' என்றான் பாபு.

''சாப்பிட்டாச்சு....''

''அப்போ அண்ணா மடிமேலே தாச்சிக்கோ. பாபண்ணா கதை சொல்லுவானாம். கண்ணன் தூங்கிப் போவானாம். வாடா கண்ணா!''

''பாபு அண்ணா, அம்மா என்னை மடிமேலே தாச்சிக்க விடமாட்டேன்னு சொல்றா.''

''நான்தான் இருக்கேனே, கண்ணா! அம்மா எதுக்கு.....?''

''பாப்பாவை மட்டும் இன்னிக்குக் குளிப்பாட்டினா. பௌடர் போட்டுட்டா, மைகூடப் போட்டா. அப்புறம் அவ மடிமேலே போட்டுண்டு பாடினா. என்னைப் போட்டுக்க மாட்டேங்கிறாளே.''

கூடத்திலிருந்து விரைந்த கண்ணன் பாபுவின் அறைக்குள் நுழைவதைக் கண்ட ராஜம், ''ஹூம், முன்னே கண்ணனைப் பார்த்துப் பொருமினான் பாபு. இப்போ அவனையும் கூட்டுச் சேர்த்துண்டு ராதாவைக் கரிக்கிறானோ....?'' எனக் கூறிக்கொண்டே வாசல் பக்கமாக வந்தாள்.

பாபு அண்ணாவின் பேச்சைச் செவிமடுத்த வண்ணம் அவன் மடியில் தலையை வைத்து அவனது முகத்தையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான் கண்ணன். அறையினுள் எட்டிப் பார்த்த ராஜம், ஒரு கணம் அக்காட்சியின் இனிமையில் கண்ணிமைக்க மறந்து விட்டாள்....அவர்கள் என்ன பேசிக் கொள்கிறார்கள் என்பதை அறிய வெளியிலேயே மறைந்து நின்றாள்.

''நீ சின்னக் குழந்தையா இருந்தப்போ அம்மா செஞ்சாளே....''

''இப்போ இல்லியே. எல்லாவானாலும் பாப்பாதான் பெரிசு அம்மாவுக்கு.''—கண்ணனின் குற்றச்சாட்டு இது.

''ஐயய்ய... , பாப்பாதான் ரொம்பச் சின்னவ. அதனாலேதான் அவளுக்கு எல்லாம் அம்மாவே செய்யணும். நீயும் நானும் பெரிய வன்களாயிட்டோமோல்லியோ. ரொம்பச் சமர்த்தா நடந்துக்கணும். கண்ணா, நான்கூட உன்னை மாதிரித்தான் இருந்திருக்கேன்.... அம்மா உனக்கு ஊட்டி விடற போதும் குளிப்பாட்டி விடறபோதும் இப்ப நீ நினைக்கிறியே, அது மாதிரித்தான் அம்மாவைத் திட்டுவேன். உன்னைக் கூடத் திட்டுவேன். இப்பத்தான் அது தப்புன்னு படறது....''

ஏதோ ஞானோபதேசத்தைச் செவிமடுப்பது போல் கவனமாகக் கேட்டான் கண்ணன்.

''கண்ணா, ராதா சின்னப் பாப்பா. அவ அழுதழுது ஒவ்வொண்ணுத்துக்கும் அம்மாவையே கூப்பிட்டு அவளுக்குத் தொந்தரவு கொடுப்பா. அம்மாவைப் படுத்தறவா எல்லாரும் அசடு. நீ சமர்த்தா அசடா..?''

''பாபு அண்ணாவைப் போலச் சமர்த்து'' என்று கைகளை உயரத் தூக்கிப் பாபுவின் கழுத்தை வளைத்துத் தன் முகத்துக்கு நேரே கொணர்ந்தான் கண்ணன்.

''சமர்த்துக் கண்ணா !'' என்றபடியே அவனது ரோஜா இதழ்க் கன்னத்தில் அன்பு முத்தமொன்றைப் பதித்தான் பாபு.

அறைக்கு வெளியே நின்ற ராஜத்தின் உள்ளம் உவகையால் நிரம்பி உதடுகள் அசைந்தன:

''அனுபவம்தான் ஒருவனை அறிஞனாகவோ அறிவிலியாகவோ ஆக்குகிறது. பாபுவின் அனுபவம் அவனை அறிஞனாக்கி விட்டது!''

# ஆயிரக் கணக்கானவர் அடுத்தடுத்து...





தவணை முறையில் டிக்கட் வழங்கும் திட்டம்



கூடுதலான செலவு ஏதுமின்றி ஆங்காங்கு தங்கலாம்

தவணை முறைப்படி டிக்கட் வழங்கும் பி.ஓ.ஏ.ஸி. திட்டத்தைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள். பயணம் முந்தி-பணம் பிந்தி. உங்கள் பி.ஓ.ஏ.ஸி. ட்ராவல் ஏஜெண்டையோ, உலகெங்கிலுமுள்ள பி. ஓ. ஏ. ஸி. அலுவலகங்களையோ அணுகுங்கள் அவர்கள் சேவை உங்களுக்கு எப்பொழுதுமுண்டு.

உலக முழுவதும் **B·O·A·C** உங்களை பேணுகிறது

ஏயர் இந்தியா மற்றும் கான்டாஸ் அவர்களோடு கூட்ட

## மனிதன் கற்றுக் கொண்டான்



உங்களிடம் காமிரா இருக்கிறதா? நீங்கள் எப்போதாவது புகைப் படம் எடுத்ததுண்டா? புகைப்படக் கலையில் முதன் முதலாகக் கவனிக்க வேண்டிய விஷயம் உருவத்தின் மண்டல மையத்தைக் (போகஸ்) கண்டு பிடிப்பதுதான். போட்டோ பிடித்துக்கொள்ள நீ உட்கார்ந்ததும் படம் பிடிப்பவர் கருப்புத் துணிக்குள் புகுந்து கொள்ளுவது எதற்காகத் தெரியுமா? காமிராவின் கண்ணான லென்ஸின் மூலம் வரும் ஒளியின் அளவைச் சீராக்கி உருவத்தின் பிம்பம் துல்லியமாகத் தெரியும்படி செய்வதற்காகத்தான். இதற்கு லென்ஸில் ஒளி விழும் பகுதியைச் சிறிதாகவும் பெரிதாகவும் ஆக்கிக்கொள்வார். நமது கண் இம்மாதிரியான காரியத்தை எவ்விதத் தூண்டுதலும் இன்றித் தானே செய்கிறது. இப்படித் தானாக இயங்கிக் கொள்ளும் ஆடோமாடிக் காமிராவை இப்போது மனிதன் கண்டுபிடித்திருக்கிறான்.

இப்படி ஒரு வழிமுறையை வகுக்க மனிதனுக்குத் தூண்டுகோலாக இருந்தது மிருகங்கள்தான். பூனைகளின் கண் கரு விழி பகலில் சிறியதாகவும் இரவில் பெரியதாகவும் இருப்பதாகப் படித்திருப்பாய். இதோ மேலே உள்ளது தேவாங்கு. இதன் கருவிழி பகலில் ஒரு புள்ளியாகவும் இரவில் விரிந்து பெரிதாகவும் இருக்கும். பெரிய விழி உடையவனே ஆந்தைக் கண்ணன் என்று சொல்லுவோமே. ஆந்தைகளுக்குக் கண் பெரிதானாலும் பகலில் கருவிழி சிறுத்தும் இரவில் அகலமாகவும் இருக்கும். இதெல்லாம் எதனால்? பகலில் அதிக வெளிச்சம் இவைகளின் பார்வையைக் கூச வைக்கும். ஆகவே இயற்கையாக விழியில் அமைந்துள்ள ஒரு மெல்லிய தோல் கருவிழியின் அகலத்தை மூடிக்கொண்டு குறைவான வெளிச்சமே உட்புக வழி செய்கிறது. இரவிலோ இருள் அதிகமாக இருப்பதால் மிக நுண்ணிய ஒளியையும் கிரகித்துக் கொள்ளக் கருவிழி அகலத் திறந்து கொள்கிறது. இந்த ஜீவராசிகளின் கருவிழி மாற்றத்திலிருந்தே மனிதன் காமிராவில் ஒளியை ஒழுங்காக்கும் போகஸின் முறையை அமைத்தான் என்றால் வியப்பாக இருக்கிறதல்லவா?



## பழம் விழுங்கும் பாட்டிலாசுரன்!

ஒரு பாட்டில், வாழைப் பழத்தின் தோலை உரித்துத் தானாக விழுங்கும் அதிசயத்தைப் பார்த்திருக்கிறீர்களா? பாட்டிலாவது பழத்தைச் சாப்பிடுவதாவது என்றுதானே யோசிக்கிறீர்கள். நான் சொல்கிறபடி செய்து பார். நன்றாகப் பழுத்த ஒரு வாழைப்பழத்தை எடுத்துக் கொள். பச்சை நிறத்தோடு நீளமாக ஒரு பழம் இருக்குமே அது இருந்தால் ரொம்ப விசேஷம். அதன் நுனியில் கொஞ்சம் தோலை உரித்துக் கொள். நீ எடுத்துக் கொண்டுள்ள வாழைப் பழத்தின் கனோ உள்ளே நுழையும் அளவுக்கு வாயையுடைய ஒரு கண்ணாடி பாட்டிலை எடுத்துக் கொள். அதில் ஸ்டவ் பற்ற வைக்க உபயோகிக்கும் ஸ்பிரிட்டில் ஒரு டீஸ்பூன் அளவு ஊற்று. சட்டென்று நெருப்புக் குச்சியைக் கிழித்துப் பாட்டிலுக்குள் போட்டு அந்த ஸ்பிரிட்டைப் பற்ற வை. உடனே வாழைப்பழத்தின் தோல் சற்றே நீக்கிய முனையை அந்தப் பாட்டிலின் வாயில், இடைவெளி இல்லாமல் பொருத்தி வை. பாட்டிலின் வெளிப் பக்கத்தில் தோல் தொங்கிக் கொண்டிருக்கும் இல்லையா?



நீ பார்த்துக் கொண்டிருக்கும் போதே பாட்டிலாசுரன் வாழைப்பழத்தை ஒருவித ஓசையுடன் மெள்ள மெள்ள உள்ளுக்கு இழுத்து விழுங்க ஆரம்பிப்பான்! இது மந்திரமல்ல தந்திரமல்ல. பாட்டிலுக்குள்ளிருக்கும் பிராண வாயுவைக் கொண்டு ஸ்பிரிட் எரிகிறது. ஆகவே காற்றின் அழுத்தம் பாட்டிலுக்குள் வெளியிலிருப்பதை விடக் குறைகிறது. காலியான இடத்தை நிரப்புவதற்கு வெளியிலுள்ள காற்று உள்ளே புக முயற்சி செய்கிறது. அப்போது அதற்குத் தடையாக உள்ள வாழைப்பழத்தை அழுத்துகிறது. பழுத்த பழத்தின் தோல் காற்றின் அழுத்தத்தினால் மெள்ளமெள்ள உரிய பழம் பாட்டிலுக்குள் போகிறது. இதுதான் விந்தை. காற்றின் அழுத்தும் சக்திக்கு இது ஓர் உதாரணம். பாட்டிலாசுரன் பழத்தை விழுங்கச் சிரமப்பட்டு இந்தச் சோதனை சரியாக வராவிடில், பழத்தின் நீளவாட்டில் ஊசியால் இரண்டு மூன்று கோடுகள் கிழித்து விட்டுப் பழத்தை அவன் வாயில் வையுங்கள். இப்போது பழம் சுலபமாகத் தானாக உள்ளே போகும் அதிசயத்தைக் காணலாம்.

**படங்கள் சொல்லும் கதைப் போட்டிக்குக் கதைகள் அனுப்ப வேண்டிய கடைசித் தேதி 15—8—62 நினைவிருக்கிறதா?**

## ஆரஞ்சு



ஆரஞ்சுப் பழத்தைப் பற்றி நான் சொல்லப் போகும் இதெல்லாம் உனக்குத் தெரியுமா?—உலகத்தின் மொத்த ஆரஞ்சு உற்பத்தியில் பெரும் பகுதி ஐக்கிய அமெரிக்காவின் தென் பகுதியில் தான். இதையடுத்து ஆரஞ்சு உற்பத்தியில் முன்னிற்கும் நாடுகள், ஸ்பெயின், இத்தாலி, பிரேஸில், அர்ஜன்டைனு, பராகுவே, மெக்ஸிகோ, ஜப்பான், அல்ஜீரியா, எகிப்து, இஸ்ரேல். இப்படி இருந்தும் ஆரஞ்சு பிறந்த நாடு எது தெரியுமா? பாரதம்தான்! இந்தியாவில் ஆரஞ்சு மரம் ஒரு காட்டுச் செடி. ஆதியில் சைனுவின் தென் பகுதியிலிருந்து இந்தியாவுக்கு இந்த இனம் வந்தாலும் மேலே நாடுகளுக்கு இது இந்தியாவிலிருந்துதான் போயிற்று. அராபியரால் ஒன்பதாம்நூற்றுண்டில் இந்தப் பழ மரம் கொண்டு செல்லப்பட்டது. ஆதி ஆரஞ்சுகள் எல்லாமே புளிக்கும் இனத்தைச் சேர்ந்தவைதான்.

ஆரஞ்சு மரங்கள் முப்பதடி உயரம் வரை வளரக் கூடியது. நேராக நிமிர்ந்து வளரும். ஆரஞ்சு மரத்தின் வயது நூறு வருடங்கள். ஆனால் தோட்டங்களில் 30, 40 வயதுக்கு மேல் இதை விட்டு வைப்பதில்லை. 20 வயதிற்குமேல் தான் ஆரஞ்சு அமோகமாகக் காய்க்கும்.

ஆரஞ்சுப் பழத்தின் தோலைக் கசக்கிப் பிழிந்து எண்ணெய் எடுக்கிறார்கள். வாசனைப் பொருளாகப் பயன்படுகிறது இந்த ஆரஞ்சு எண்ணெய். ஆரஞ்சுப் பூவிலிருந்தும் கூட இந்த வாசனைத் திரவமான எண்ணெயை இறக்குகிறார்கள். ஆரஞ்சுப் பழத்தில் வைட்டமின் 'சி' பெருமளவில் இருக்கிறது. வேறு எந்தப் பழத்திலும் காய்கறிகளிலும் இந்த அளவு கிடையாது.



## மின்மினி மினுக்கிடுவது ஏன்?

மின்மினிப் பூச்சியைப் பார்த்திருக்கிறீர்களா? நாட்டுப் புறங்களில் இருள் கவிந்த நேரத்தில் பளிச்சென்று ஓர் ஒளி தோன்றும்; உடனே மறையும். மறுபடியும் தோன்றும், மறையும். இந்த மினுக்கட்டான் பூச்சிகளிடமிருந்து எப்படி இந்த ஒளி உண்டாகிறது? இதன் உடலில் இரண்டு விதமான வாயுக்கள் உற்பத்தியாகின்றன. இவற்றில் ஒன்றினுல் மட்டும் தனித்து ஒளி உண்டாக்க முடியாது. இந்த வாயுக்கள் காற்றில் கலக்கும் போது ஒருவித ஒளி உண்டாகிறது. இந்த ஒளி உஷ்ணம் கையைச் சுடாது. குழாய் விளக்கின் ஒளியைப் போல் இந்த ஒளி குளுமையானது.



தன்னுடைய துணைவிக்குத் தானிருக்குமிடத்தை அறிவித்து அவன் கவனத்தைக் கவருவதற்காகவே மின்மினி இப்படி ஒருவித ஒளியை உண்டாக்குவதாக விஞ்ஞானிகள் சொல்லுகிறார்கள். ஆனால் அதுவும் கூட முழுதும் உண்மையல்ல. சில வகைகளில், ஆண் பெண் இரண்டு பூச்சிகளிடமிருந்துமே இவ்வித ஒளி உண்டாகிறது. தாய்லாந்தில் காணப்படும் மின்மினிகளின் மர்மம் இன்னும் விந்தையானது. இவை ஒரு மரத்தில் ஏராளமாகக் கூடுகின்றன. குப்பென்று எல்லாப் பூச்சிகளும் ஒரே சமயத்தில் மினுக்குகின்றன. இங்கெல்லாம், கல்யாண வீட்டில் மரங்களை மின்சார பல்புகளால் அலங்கரிப்பது போல. அடுத்த விநாடி அத்தனை பூச்சிகளும் தங்கள் விளக்கை அணைத்து விடுகின்றன. இப்படி விட்டு விட்டு, ஒரே சமயத்தில்பல மரங்களில் மின்மினிப் பூச்சிக் கூட்டம் தங்கள் விளக்குகளை ஏற்றி அணைப்பது கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும். தன் விரோதிகளைப் பயமுறுத்தி விரட்டுவதற்காகவும் இந்த ஒளியை இவைகள் உண்டாக்கலாம். ஆனால் விந்தையிலும் விந்தை, மிருகங்களோ பறவைகளோ மின்மினிப் பூச்சிகளை நெருங்குவதே இல்லை. காரணம் அவைகளுக்கு அது ஒரு ருசியற்ற உணவு!

மினுக்கட்டான் பூச்சிகளைப் போலவே இன்னும் விசித்திரமான ஒரு புழு தென் அமெரிக்காவில் இருக்கிறது. இரவில் புகை வண்டித் தொடர் செல்லுவது போல இருக்கும் இந்தப் புழு ஊர்ந்து சென்றுல், பதினேரு ஜோடிப் பச்சை விளக்குகள் பக்க வாட்டில் ஒளிவிட, முன்னுல் ஒரு சிவப்பு விளக்கு ஜ்வலிக்க இந்தப் புழு பவனி வருமாம். எப்போதுமல்ல. நீ அதனிடம் சீண்டினுல்தான் இந்தச் சிவப்பு, பச்சை விளக்குகள் எரியும்.






காகிதமும் கத்திரிக்கோலும் - 5.

## தங்க மீன்

சென்ற வாரம் சொல்லித் தந்தபடி கடுவன் பூனையைச் செய்து தொங்கவிட்டிருப்பீர்களே? இப்போது உங்களுக்கு நான் கண்ணாடி ஜாடிக்குள் சுழன்றுடும் தங்க மீன் செய்யும் விதத்தைச் சொல்லித் தருகிறேன். இந்த மீனைப் பூனையார் சுற்றிச் சுற்றி வருவார். ஆனால் அவர் கைக்கு மீன் அகப்படாது. அப்படி ஒரு நிலையில் இரண்டையும் வைத்து உங்கள் நண்பர்களுக்குக் காட்டி மகிழலாம். இங்குள்ள மீன் ஜாடியையும் மீனின் பாகங்களையும் வழக்கமான முறைப்படி காப்பி செய்து கொள்ளுங்கள். தலையைக் கத்திரிக்க, தலைப்பகுதியின் நடுவிலுள்ள புள்ளிக்கோட்டில் காகிதத்தை மடித்துக் கொண்டு கத்திரிக்கவும். தலையைத் தனியாக வெட்டியானதும் பிரித்துக் கண்களையும் செவுள் பகுதியையும் கூரான பிளேடினால் வெட்டிக் கொள்ளவும். கருப்புக் காகிதத்தை வட்டமாகக் கத்திரித்து மீனின் விழிக்குப் பொருத்தமாக வைத்து ஒட்டிக் கொள். செவுள்களை வெளிப் பக்கமாகத் தூக்கி இருக்கும்படி மடித்து விடு. அடுத்துத் துடுப்பு, உடல், வால், பக்கத் துடுப்புகள் ஆகியவற்றைப் பழுப்புக் காகிதத்தில் வெட்டிக் கொள். பக்கத் துடுப்புக்களில் இரண்டு வெட்டிக் கொள். வால், துடுப்பு இவற்றில் புள்ளிக் கோடிட்ட பாகத்தில் கத்தியின் பின் பக்கத்தால் அழுத்திக் கோடு கிழித்துக்கொண்டு இலேசாக மடித்துவிடு. இனி உடல்—வால் பாகத்தைத் தலை பாகத்துக்குள் பாதி நுழையும்படி புகுத்தி ஒட்டிவிடு. இந்நிலையில் 'P' என்ற இடத்தில் (அது மீனின் நடு மையம் — சரிதானா என்பதைப் பரிசோதித்துக் கொண்டு) ஒரு நூலை உறுதியாக இணைத்துக் கொள். பக்கத் துடுப்பு இரண்டையும் 'A' என்ற இடத்தில் பசை தடவிமேல் செவுளின் அருகே ஒட்டி விடு. தங்க மீன் தயார்!

இனி கெட்டியான வெள்ளைக் காகிதத்தில் கண்ணாடி ஜாடி இரண்டு வெட்டி எடு. நமக்கு வேண்டியது ஜாடியல்ல, மற்ற பாகம்தான். ஒன்றின் மேல் பகுதியின் மையத்தில் 'B' என்ற இடத்திலும் மற்றதின் கீழ்ப் பகுதியின் மையத்தில் 'C' என்ற இடத்திலும் வெட்டு வாய்களை ஏற்படுத்திக் கொள். இரண்டு ஜாடிகளையும் வெட்டு வாய்களில் (குறுக்காக + ) பொருத்தி விடு. இப்போது 'B' என்ற வெட்டு வாயில் ஊசலாடும் மீனின் கயிற்றை, ஒரு சிறு காகிதத்தில் பசையைத் தடவி ஜாடியின் பக்கத்தோடு ஒட்டி விடு. ஜாடிக்குள் மீன் சுழன்றுடும் அழகை ரசிக்கலாம்.

இனி மீனைச் சுற்றிப் பூனையை ஓட விட்டு வேடிக்கை பார்க்கலாமா? ஒரு நீண்ட கம்பியை எடுத்து அதைச் சற்றே கோட் ஹாங்கர் போல வளைத்துக் கொள். இரண்டு முனைகளிலும் கொக்கி போல வளைத்துக் கொள். ஒரு முனையில் பூனையையும் மறுமுனையில் ஜாடியோடு கூடிய மீனையும் கட்டி விடு. இதை அப்படியே மேலே காட்டியுள்ளபடி காற்று வீசுமிடத்தில் கட்டித் தொங்கவிட்டால்....? தொங்க விட்டுப் பாரேன், வேடிக்கையை.



# மில்க் ஆப் மக்னீஷியா என்பது என்ன?

**இது மெக்னீஷியம் ஹைட்ராக்ஸைடின் எமல்ஷன். அமில நாசினியும் மலமிளக்கியுமான இது இரைப்பை சம்பந்தமான (அஜீரணக்) கோளாறுகளின் சிகிச்சையில் ஏராளமாக உபயோகப்படுத்தப்படுகிறது.**

மில்க் ஆப் மக்னீஷியாவிற்கு, மெக்னீஷியம் ஹைட்ராக்ஸைட் மிக்ஸ்சர் B.P., மெக்னீஷியா மாக்மா யு. எஸ். பி., க்ரீம் ஆப் மக்னீஷியா B. P. போன்ற பெயர்களும் உண்டு. எப்பெயரால் அழைக்கப்பட்டாலும் இதன் அடிப்படையான பொருள் ஒன்றே. மேலும் ஒரு அங்கீகரமான ஔஷதகரண விதியின் கண்டிதமான நியதிக்கும், பிரமாணத்திற்கும் தக்கபடி இது உற்பத்தி செய்யப்படுகிறது. இது எந்த வர்த்தகப் பெயரில் விற்பனை செய்யப்பட்டாலும் சரி அப்பெயர் தயாரிப்பாளரை சுட்டிக் காட்ட அனுகூலமாகுமே தவிர இதன் தரத்தை உயர்த்தவோ, தாழ்த்தவோ செய்யாது.

இருந்தபோதிலும், விற்பனைப் பெயர், வாடிக்கையாளரை பொறுத்தமட்டில் மிகவும் முக்கியம். ஏனென்றால் நன்கு தெரிந்த ஒரு பெயர் அவருக்கு தயாரிப்பாளரின் நம்பகத்தன்மையைப் பற்றி உறுதியளிக்கிறது. இக்காரணத்தினால் தான் கணக்கற்ற வாடிக்கையாளர்கள் அன்றாடம் 'மந்த்' (MandH) மில்க் ஆப் மக்னீஷியாவை வாங்குகிறார்கள். இது யுனைடெட் ஸ்டேட்ஸ் ஔஷதகரண விதிகளின்படி தயாரிக்கப்பட்டு குணத்திற்கும் தரத்திற்கும் நன்கு பரிசிலனை செய்யப்படுகிறது. ஆகையால் இதன் தரமும், தூய்மையும் கேள்விக்கு இடமற்றதாக விளங்குகிறது. எல்லாவற்றிற்கும் மேலாக, மற்ற எல்லா 'மந்த்' (MandH) தயாரிப்புகளைப் போலவே, மருந்துகள் தயாரிப்பதில் 50 வருடங்களுக்கு மேலாக உள்ள அனுபவத்தின் சிறப்பையும் பெற்றுள்ளது.

மார்டின் & ஹாரிஸ் (பிரை) லிட்., மெர்கண்டைல் பில்டிங்ஸ், லால்பஜார், கல்கத்தா-1

M/PIT TA



## 30. புகைப்படக் கண்கள்

'வில்வநாதனைப் போலீஸில் பிடித்துக் கொண்டு போய் விட்டார்கள்!' என்ற செய்தியைப் பட்டர் சொன்னதும் ஒரு விநாடி திகைத்தார் செந்தில்நாயகம். மறு விநாடி கேட்டார்:

''போலீஸிலா? உங்களுக்கு நன்றாகத் தெரியுமா, இந்தச் செய்தி?''

''தெரியும் வக்கீலையா! அதைக் கேட்டதும் எங்களு , நிலைகொள்ளவில்லை.! விழுந்தடித்து இங்கே வருகிறோம்!'' என்றார் பட்டர்.

''நீங்கள் கடைசியாக வில்வநாதனை எங்கே பார்த்தீர்கள்?'' என்று கேட்டார் வக்கீல்.

''நந்தவனத்தில் வைத்துத்தான்!'' என்றார் கம்பர்.

''நந்தவனத்திலா?''

''ஆமாம்! நாங்கள் நந்தவனத்தில் இருந்து போனபிறகு, வில்வநாதன் செண்பகசுந்தரியைத் தேடிக் கொண்டு குமுதவல்லியின் வீட்டுக்குப் போயிருக்கிறான். போன இடத்தில் போலீஸ்

காரர்கள் வந்து கைது செய்திருக்கிறார்கள்!'' என்றார் பட்டர்.

''போலீஸ்காரர்கள் அங்கே எப்படி வந்தார்கள்?'' என்று கேட்டார் திவான் பகதூர் செந்தில்நாயகம்.

''செண்பககசுந்தரியைக் காணவில்லை என்றும், இந்தப் பையன் வில்வநாதன் தான் அவளைக் கூட்டிக் கொண்டு போய்க் கொலை செய்து விட்டு நகைகளைக் கொண்டு போய் விட்டான் என்றும், குழுதவல்லி போலீஸுக்குத் தகவல் அனுப்பியிருக்கிறாள்!''

''அது சரி, இவள் தகவல் அனுப்பி விட்டால் மட்டும் போதுமா? உடனே போலீஸ்காரர்கள் வந்து வில்வநாதனைக் கைது செய்து விடுவார்களா என்ன?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டார் வக்கீல் செந்தில்நாயகம்.

''வல்லாளவேலர் தான் இதற்கெல்லாம் காரணபூதர்! அவர் கூடவே இருப்பதால்—'' என்று வார்த்தைகளை நீட்டினார் சுந்தரேசப் பட்டர்.

''அது சரி பட்டர்வாள்! வல்லாளவேலர் காரணபூதராக இருக்கட்டும், அல்லது வெறும் பூதராக இருக்கட்டும்! போலீஸில் அவ்வளவு தூரம் புலன் விசாரிக்காமல் ஒரு மனிதனைக் கைது செய்து கொண்டு போய்விடுவார்களா? நீங்கள் சொல்வது வேடிக்கையாக இருக்கிறதே!'' என்று சொல்லிச் சிரித்தார் வக்கீல்.

''வக்கீலையா! நீங்கள் சட்டப்படி பேசுகிறீர்கள். ஆனால் அந்த வல்லாளவேலர் உடன் இருக்கும் போது சட்டம் எல்லாம் தலைகீழாகப் போகும் வக்கீலையா! இப்பொழுது அப்படிப் போய்விட்டதே! வில்வநாதனைக் கொண்டு போய்விட்டார்களே! இனிமேல் அவன் நிரபராதி என்று நிரூபிக்க வேண்டியது யார்? அதைச் சொல்லுங்கள்!'' என்று பரிதாபமாகக் கேட்டார் பட்டர்.

''பட்டர்வாள்! உங்களுக்கு வில்வநாதனிடம் உள்ள அன்பினால், பாவம், ஆத்திரம் அடைகிறீர்கள். உண்மையில் வில்வநாதன் குற்றவாளி என்று நிரூபிக்க வேண்டிய பொறுப்பு குமுதவல்லிக்குத்தான்!''

திவான்பகதூர் இத்தனை சாவதானமாக விளக்கம் சொல்வதைக் கண்டதும், பட்டருக்கும் கம்பருக்கும் வேகம் வந்தது. ஆனாலும் வக்கீலிடம் என்ன பேசுவது! அப்படியே நின்றார்கள் உணர்ச்சிகளை அடக்கிக் கொண்டு! இதைக் கவனித்த திவான்பகதூர் சிரித்துக் கொண்டே சொன்னார்:

''சரி. அதையெல்லாம் பற்றி நீங்கள் இருவரும் ஏன் இப்படி மனசை அலட்டிக் கொள்ளுகிறீர்கள்? கவலைப்படாமல் ஊருக்குப் போய்ச் சேருங்கள். நாளைக் காலையில் நான் மேற்கொண்டு செய்ய வேண்டிய காரியங்களைக் கவனிக்கிறேன். வில்வநாதனைப் போலீஸ் ஸ்டேஷனில் பார்க்கிற வரை அவன் கைது செய்யப்பட்ட செய்தியை நம்பாதீர்கள்!''

''என்ன! என்ன!'' என்று பதறினார் சுந்தரேசப் பட்டர்.

''வில்வநாதனைப் போலீஸ்காரர்கள் பிடித்துக் கொண்டு போயிருப்பதாகக் கேள்விப்பட்டீர்கள். அவ்வளவுதானே? அவனைப் போலீஸ் ஸ்டேஷனில் நீங்கள் பார்க்கவில்லையே!''

''இல்லை! ஆனாலும் நேரிலே பார்த்தவர்கள் சொன்னார்கள்!'' என்றார் கம்பர்.

''அது சரி. கண்ணால் கண்டதும் பொய். காதால் கேட்டதும் பொய். தீர விசாரித்து அறிவதே மெய். ஆகையினால் நீங்கள் இரண்டு பேரும் நிம்மதியாகச் சென்று வாருங்கள். வில்வநாதனுக்கு ஒரு ஆபத்தும் வராது!''

இப்படிச் சொல்லிப் பட்டரையும், கம்பரையும் ஊருக்கு அனுப்பி விட்டு, மற்றக் கட்சிக்காரர்களையெல்லாம் மாடிக்கு அழைத்தார் திவான்பகதூர் செந்தில்நாயகம்!

கம்பரும் பட்டரும் வக்கீலிடம் விடை பெற்றுக் கொண்டு வெளியே வந்தபோது அவர்களுக்கு மிகவும் ஆச்சரியம் தந்த ஒரு நிகழ்ச்சி நடந்தது. வக்கீலையாவின் வீட்டுக் கீழறையிலே, குமாஸ்தா பஞ்சவர்ணத்திற்கு அருகிலே உட்கார்ந்து கொண்டு பேசிக் கொண்டிருந்தவர் யாரென்று ஒரே வியப்போடு பார்த்தார்கள் கம்பரும் பட்டரும்! சந்தேகமில்லை. அது வல்லாளவேலர் தான்! அவர்களுடைய திகைப்பு மேலும் பன்மடங்கு அதிகரித்ததற்குக் காரணம் என்னவென்றால், இவர்கள் இருவரும் மாடியிலிருந்து கீழே இறங்கியதைப் பார்த்ததும், வல்லாளவேலர் முகத்தை மறுபக்கம் திருப்பிக் கொண்டார்! வக்கீல் குமாஸ்தா பஞ்சவர்ணமும் எங்கோ பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருப்பவர் போல, வேறொரு பக்கம் திரும்பிக் கொண்டு விட்டார். இவர்கள் வாசலைக் கடந்து வெளியே போகிற வரை அந்த இருவரும் இவர்களைப் பார்க்க விரும்பாதவர்களைப் போல் முகத்தைத் திருப்பிக் கொண்டு இருந்து விட்டார்கள்!

''கம்பரையா! பார்த்தீர்களா? இந்த வல்லாளவேலருக்கு யார் பக்கபலமாக இருக்கிறார்கள் என்று இப்பொழுது தெரிகிறதா?''

இவ்வாறு கேட்டார் பட்டர், கம்பரைப் பார்த்து.

''ஆமாம். இனம் இனத்தோடு சேர்கிறது. இரண்டு பேரும் பெரிய பலுவன்கள்! இந்த வில்லாதி வில்லன்களிடம் போய் அந்தப் பையனுடைய சிண்டு அகப்பட்டுக் கொண்டிருக்கிறதே!'' என்று கவலையோடு கூறினார் கம்பர். பட்டர் சொன்னார்:

''அது சரி. ஆனால் இவர்கள் இருவருடைய சிண்டும் யார் கையில் மாட்டிக் கொண்டிருக்கிறது? அதை மறந்து விட்டீர்களே! வக்கீலையாதான் மிகவும் தெளிவாகச் சொல்லி விட்டார்களே! வில்வநாதனைப் போலீஸ் ''லாக் அப்'' பிலே பார்க்கிறவரையில் நாம் அந்தச் செய்தியை நம்ப வேண்டியதே இல்லை!''

''பட்டரையா! அப்படியானால் வில்வநாதன் இப்போது எங்கே போயிருப்பான்? அதை ஊகிக்க முடிகிறதா உங்களால்?''

''கம்பரையா! வல்லாள வேலரும் பஞ்சவர்ணமும் கூடிப் பேசி ஏதோ சூழ்ச்சி செய்திருக்கிறார்கள்! இந்தச் சூழ்ச்சிக்குக் குழுதவல்லியும் கூட்டுச் சேர்ந்திருக்கிறாள். ஆனால் திட்டப்படி அவர்களுடைய காரியம் நடந்திருக்காது. அதனால்தான் இந்த நேரத்தில் வல்லாளவேலர் இவ்வளவு அவசரமாக இங்கே ஓடி வந்திருக்கிறார்! வந்தவர் வக்கீலையாவைப் போய்ப் பார்க்காமல் இந்த ராட்சதனை வந்து காதைக் கடித்துக் கொண்டிருக்கிறாரே! இதிலிருந்தே தெரியவில்லையா!''

கம்பரும் பட்டரும் இவ்வாறு பல சர்ச்சைகள் செய்து கொண்டே ஊருக்கு வந்து சேர்ந்தார்கள்!

இந்த நிலையில், சிங்கம்புத்தூரிலே தாமரைச் செல்வியின் திருமணத்துக்கான ஏற்பாடுகள் மிகவும் கோலாகலமான முறையில் நடந்து கொண்டிருந்தன. சிங்கம்புத்தூர் ஜமீனின் ஏக புதல்வி, ஏலமலை இளைய ஜமீந்தாரைத் திருமணம் செய்து கொள்கிறாள் என்ற செய்தி அந்த மாவட்டம் முழுதும் ஒரு கலகலப்பைக் கொடுத்தது.

சிங்கம்புத்தூர் ஜமீந்தார் அனவரத புவனபதி பலரோடும் நன்கு பழகி நட்பு நிரம்பியவர். இதனால் இந்தக் கல்யாணத்துக்கு இம்மாநிலத்தின் பல பகுதிகளிலிருந்தும் மிட்டாதார்களும், பண்ணையார்களும், பெரிய பெரிய அதிகாரிகளும், ஜமீந்தார்களும், தலைவர்களும் வருவார்கள் என்று எதிர்பார்த்து ஏற்பாடுகள் மிகவும் விரிவான முறையிலே நடந்தன.

சிங்கம்புத்தூர் வீதிகளிலெல்லாம் பெரிய பந்தல் போட்டார்கள். எங்கு பார்த்தாலும் வாழைகளும், தோரணங்களும், அலங்கார வேலைப்பாடுகளும், சித்திர வளைவுகளுமாக அணி செய்தார்கள். ஒரு குடும்பத்தின் நிகழ்ச்சி என்றிராமல், அந்தத் திருமணம் ஊருக்கெல்லாம் பொதுவான ஒரு பெரிய பண்டிகைத் திருவிழாவைப் போல,

## கண் கவர் வெண்மை!

தூய சலவைக்கு ... துகிலின் வெண்மைக்கு ... மேட்டூர் கெமிகல்ஸின் நூதன தயாரிப்பு ஸில்வர் சிப்ஸ்! சிக்கனச் செலவு... சீரிய கண்பறிக்கும் வெண்மை! இன்றே வாங்குங்கள்.




# ஸில்வர் சிப்ஸ்

மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிமிடெட்

மேட்டூர் அணை R. S. சேலம் ஜில்லா

மானேஜிங் ஏஜெண்ட்ஸ்:

சேஷசாயி பிரதர்ஸ் பிரைவேட் லிமிடெட்

MC 6216

மக்கள் அனைவருடைய கவனத்தையும் கவர்ந்தது!

மாளிகைக்கு வெளியே இத்தனை ஆர்ப்பாட்டங்கள் நடந்து கொண்டிருந்த போது, சிங்கம்புத்தூர் மாளிகைக்குள்ளே தன்னந் தனியான அறையிலே ஒரே கவலையோடு உட்கார்ந்திருந்தாள் தாமரைச் செல்வி. அவளுக்கு எதிரே சோகமே உருவெடுத்தது போல் நின்று கொண்டிருந்தான் சுப்பையா.

செல்வி கேட்டாள்:

''சுப்பையா! நீயும் இந்தச் செய்தியை நம்புகிருயா? இப்படி ஒரு காரியத்தை நம்முடைய வில்வநாதன் செய்திருப்பார் என்று தோன்றுகிறதா உனக்கு?''

அதைக் கேட்டுச் சுப்பையா ஒரு துயரச் சிரிப்புச் சிரித்தான்.

''எனக்கு அந்த மாதிரி ஒரு சந்தேகமே கிடையாது அம்மா! வேறு எந்தக் காரியத்தில் எவ்வளவு தப்பாக நடந்து கொண்டாலும், வில்வநாதன் கொலை செய்யக் கூடிய மனிதன் இல்லை என்பதுதான் என்னுடைய தீர்மானம் அம்மா!'' என்றான் சுப்பையா.

''ரொம்ப சரி. நீ சொல்வது தான் சரி சுப்பையா! ஆனாலும் போலீஸில் பிடித்துக் கொண்டு போய் விட்டால், பிறகு வழக்கு எப்படியெல்லாம் போகும் என்று நாம் என்ன சொல்ல முடியும்? சூழ்ச்சி செய்கிறவர்கள் என்னென்ன சாட்சிகளை யெல்லாம் ஜோடனை செய்திருக்கிறார்களோ! நமக்கு என்ன தெரியும்!''

இவ்வாறு கவலையோடு பேசினாள் தாமரைச் செல்வி.

''அம்மா! நீங்கள் மிகவும் இரகசியமாக வைத்துக் கொள்வதாயிருந்தால் ஒரு செய்தியை உங்களுக்குச் சொல்கிறேன் —'' என்று தயங்கினான் சுப்பையா! செல்வி சிரித்துக் கொண்டே கேட்டாள்:

''நீ என்ன சொல்ல வருகிறாய் என்று எனக்குத் தெரியும். நம்முடைய வல்லாளவேலர் இதில் சம்பந்தப்பட்டிருக்கிறார் என்கிறாய். அப்படித்தானே?''

செல்வி இப்படிக் கேட்டதும் சுப்பையா தலையை ஆட்டினான், ஆமாம் என்று. அதற்கு மேல் பேசுவதற்குத் தயங்கினான்.

''மேலே சொல்லு சுப்பையா! வேறு ஏதோ என்னிடம் சொல்ல நினைக்கிறாய். சொல்லு!''

''அம்மா! வல்லாள வேலரோடு நம்முடைய ஏலமலை எசமானும் ரொம்ப நெருக்கமாக இருக்கிறார்கள் என்று கேள்வி! இதைச் சொல்லுவதற்கே பயமாக இருக்கிறது!'' என்று உடம்பெல்லாம் பதறி நின்றான் சுப்பையா.

''தெரியும் சுப்பையா! அந்த விவரம் எனக்குத் தெரியும். வல்லாள வேலர் வீட்டு அத்தை மிகவும் நல்ல குணம். கொஞ்சம் படபடப்பாகப் பேசுவாள். மற்றப்படி தங்கமான குணம். கள்ளம் கபடு இல்லாதவள். அவள் நேற்று என்னிடம் ஏதேதோ செய்திகள் சொன்னாள். அப்பாவிடம் கூட இதைப்பற்றி எச்சரிக்கை செய்ய வேண்டும். அதையெல்லாம் நான் அப்பாவிடம் சொல்லிக் கொள்கிறேன். நீ செய்ய வேண்டிய முக்கியமான வேலை ஒன்று இருக்கிறது. இனிமேல் அதை நீ கவனமாகச் செய்ய வேண்டும்!'' என்றாள் செல்வி.

''என்ன செய்ய வேணும்? சொல்லுங்கள் அம்மா!'' என்று கேட்டான் சுப்பையா.

''வல்லாள வேலர் எங்கெங்கு போகிறார் என்று அவருடைய நடவடிக்கைகளை



நீ ஆராய்ச்சி பண்ண வேண்டும். அவ்வப்போது என்னிடம் வந்து சொல்ல வேண்டும்! அப்பாவிடம் நான் சொல்லிக் கொள்கிறேன். முடியுமானால் வில்வநாதனைப் பற்றி மேற்கொண்டு ஏதாவது தகவல் தெரிகிறதா என்று முயன்று பார்!'' என்றாள் செல்வி.

இப்படிச் சொல்லிவிட்டு அங்கிருந்து செல்வி நேரே அப்பாவின் அறைக்கு வந்தாள். அனவரதர் அப்போது தீவிரமாக யோசனை செய்து கொண்டிருந்தார். அவருடைய கையில் ஏதோ ஒரு கடிதம் இருந்தது.

''அப்பா!'' என்று கூப்பிட்டாள் செல்வி. சிந்தனை கலைந்த ஜமீன்தார் கடிதத்தை மடித்துக்கொண்டே மகளைப் பக்கத்தில் உட்காரும்படி சொன்னார்.

''செல்வி! சுந்தரியைக் கொலைசெய்து விட்டதாக வில்வநாதனைப் பற்றி வழக்குத் தொடுத்திருக்கிறாள் குமுத

வல்லி! போலீஸ்காரர்கள் அவளுடைய வீட்டிலே புலன் விசாரிக்கப் போயிருக்கிறார்கள். ஆனால் அவர்கள் வருவதற்கு முன்னால் வேறு யாரோ இரண்டு போலீஸ்காரர்கள் குமுதவல்லி வீட்டுக்கே வந்து வில்வநாதனைக் கொண்டு போய் விட்டார்களாம்!''

இவ்வாறு சொன்னார் ஜமீந்தார்.

''அப்பா! என்ன சொல்லுகிறீர்கள்? வில்வநாதனைப் பிடித்துக் கொண்டு போனது யாரென்று தெரியவில்லையா போலீஸ்காரர்களுக்கு?'' என்று ஒரே வியப்போடு கேட்டாள் செல்வி.

''போலீஸ்காரர்களுக்கு அது தெரியவில்லை. குமுதவல்லிக்கும் தெரியாது. ஆனால் எனக்குத் தெரியும். இப்போது வந்த கடிதத்தில் அந்தச் செய்திதான் எழுதியிருக்கிறது! அதோடு நம்முடைய வல்லாளவேலனைப் பற்றியும் ஏதேதோ எழுதியிருக்கிறது. நீ இந்தக் கடிதத்தைத் தனியாகப் போய்ப் படித்துப் பார்த்து விட்டு, மறுபடியும் என்னிடம் கொண்டு வந்து கொடுத்து விடு. திவான் பகதூர் கையிலே கொண்டு கொடுக்க வேண்டிய முக்கியமான கடிதம் இது!''

இவ்வாறு சொல்லிக் கொண்டே கடிதத்தை மகளிடம் கொடுத்தார் ஜமீந்தார். அதை வாங்கிக் கொண்டே செல்வி சொன்னாள்:

''அப்பா! வல்லாளவேலரைப் பற்றி உங்களிடம் சொல்லலாம் என்றுதான் நான் இப்போது வந்தேன். ஆனால் அதற்கு அவசியம் இல்லாமல் செய்து விட்டது இந்தக் கடிதம்!'' என்று சொல்லி விட்டு அந்தக் கடிதத்தை எடுத்துக் கொண்டு வீட்டிற்குள்ளே சென்றாள் தாமரைச் செல்வி.

**வி**ல்வநாதன் எங்கே சென்றான், செண்பக சுந்தரி என்ன ஆனாள் என்ற செய்திகள் யாருக்கும் தெரியாமல் இரகசியமாக இருந்தன! இதற்கு மத்தியில் வல்லாளவேலர் ஜமீன் மாளிகைக்கு வந்து தலையைக் காட்டுவதும், உடனே எங்கோ அவசரமாக மறைவதுமாக மிகவும் சுருசுருப்பாக இருந்தார். அவருக்குத் தெரியாமல் அவருடைய நடமாட்டங்களை மிகவும் கூர்மையாகக் கவனித்து வந்தான் சுப்பையா! இத்தனை 'தில்லுமுல்லு'களுக்கும் இடையில் திருமண ஏற்பாடுகள் மிகவும் துரிதமாக நடந்து வந்தன!

திருமண விழாவுக்கு என்று தஞ்சையிலிருந்து பெரிய பெரிய நாகஸ்வர வித்துவான்கள் வந்தார்கள். பூம்பல்லக்கு அலங்கரிப்பதற்கு என்றே மதுரையிலிருந்து பல கலைஞர்கள் வந்தார்கள். வாண வேடிக்கைகள், பட்டணப்பிரவேசம் என்ற "ஊர்வல நிகழ்ச்சிக்கான யானைகள், குதிரைகள், ஆலிகள், விதம் விதமான வர்ண விளக்குகள் என்று சிங்கம்புத்தூர் ஒரே ஆர்ப்பாட்டமாக இருந்தது! மாளிகையிலும், அதைச் சுற்றி நின்ற எல்லா வீடுகளிலும், வெளியூர் விருந்தினர்கள் வந்து இறங்கிய வண்ணமாக இருந்தார்கள்!

திருமண விழாவுக்கு முதல் நாள் மணமகன் ஏலமலையிலிருந்து ஊர்வலமாக அழைத்து வரப் பட்டார்! இரண்டு பெரிய ஜமீன் வட்டத்து மக்களும் அந்த வைபவத்திலே ஒரே உற்சாகத்தோடு கலந்து கொண்டார்கள்.

விடியற்காலையிலே முகூர்த்தம். வழிபாட்டுக்கும், தெய்வ நம்பிக்கைக்கும் புகழ் பெற்ற அந்த ஜமீந்தார் குடும்பத்தில் வழி வழியாக நிலவி வந்த தொன்மையான முறைப்படி, கோவில்களில் எல்லாம் பூஜைகள் நடந்தன. மணமக்களுக்குப் பிரசாதங்கள் வழங்கப்பட்டன. திருமணப் பந்தலிலே அலங்காரமாக நின்ற மணவடையிலே வேள்வி நடந்தது. ஒரே மனிதக் கடலாக அலை வீசி நின்ற அந்த மாபெரும் மக்கள் கூட்டத்திலே, ஜரிகைத் தலைப்பாகைகளும்,

அடுத்த இதழில் ஆரம்பமாகிறது!

புதிய சித்திரத் தொடர்கதை

# ஓட்டப்பந்தயம்



ஸிம்ஸன் யூனியன்கள் தலைவர் திரு கே. குருமூர்த்தி அவர்களின் புதல்வி சௌ. ஜானகிக்கும் திரு எஸ். வெங்கடேசனுக்கும் திருமணம் சிறப்பாக நடந்தது.



நன்னிலம் நடராஜய்யர் அவர்களின் குமாரர் திரு பாலசுப்பிரமணியனுக்கும் சௌபாக்கியவதி லலிதாவுக்கும் மாயவரத்தில் விவாகம் சிறப்பாக நடந்தது.



திரு அகிலாண்டம் அய்யர் அவர்களின் புதல்வர் திரு ஏ. ராமநாதனுக்கும் சௌ. ஜெயலக்ஷ்மிக்கும் திருவானைக்கோவிலில் திருமணம் விமரிசையாக நடந்தேறியது.

பீதாம்பரங்களும், பொன்னுடைகளும், பூமாலைகளும், விதம் விதமான பரிசுப் பொருள்களும் நெரிந்தன! மேளம் கொட்டியது. பாண்ட் வாத்தியம் வேறு ஒரு கலக்குக் கலக்கிக் கொண்டிருந்தது. மங்களமான இசை ஒலியும், வாழ்த்துப் பாடல்களும், மக்களின் ஆரவாரமுமாக அந்தத் திருமண மண்டபம் விம்மியது! அந்த மாவட்டத்தில் அப்போது கலெக்டராக இருந்த ஆங்கிலேயத்துரை மகனுர், திருமண விழாவைக் காணுவதற்காகப் பந்தலிலே வந்து ஒரு பெரிய சோபாவிலே உட்கார்ந்திருந்த காரணத்தால், அவரைச் சுற்றி வலம் வந்து கொண்டே பல கறுப்புத் துரைமார்கள் கைகுலுக்கிய வண்ணம் அங்குமிங்கும் நகர்ந்து கொண்டிருந்தார்கள்! திவான் பகதூர் செந்தில்நாயகம் கலெக்டருக்குப் பக்கத்தில் உட்கார்ந்து திருமணச் சடங்குகளை ஆங்கிலத்திலே மொழி பெயர்த்துச்சொல்லிக்கொண்டிருந்தார்!

திருமணச் சடங்கு சிறப்பாக நிறைவெய்தியதும், பந்தலின் முகப்பிலே மணமகனையும் மணமகளையும் நிறுத்திப் புகைப்படம் எடுத்தார்கள்! பிறகு கலெக்டரையும் மற்றப் பெரிய மனிதர்களையும் அழைத்துப் பந்தலில் நிறுத்திப் படம் எடுத்தார்கள்! பந்தலைப் படம் எடுத்தார்கள். அலங்காரங்களை எடுத்தார்கள். மக்கள் கூட்டத்தை எல்லாம் படம் பிடித்தார்கள்! யார் யாரோ படம் எடுத்தார்கள். தெரிந்தவர்கள், தெரியாதவர்கள், விருந்தினர்கள், வேலைக்காரர்கள் எல்லாரும் ஆளுக்கொரு 'காமிரா'வைத் தொங்கவிட்டுக் கொண்டு படம் எடுத்தார்கள். அத்தனை கூட்டத்துக்கும் மத்தியில், ஒரே ஒரு புகைப்பட நிபுணர் மட்டும் மற்ற எல்லாரையும் விட்டு விட்டு வல்லாளவேலரையே பின் தொடர்ந்து, அவர் சென்ற திசையெல்லாம் காமிராவைத் திருப்பிக் கொண்டே இருந்தார்! திருமணத் தம்பதிகளை, திருமணக் கோலத்தில் ஒரே ஒரு படம் எடுத்தார். அதற்குப் பிறகு, அவருடைய காமிராவின் கண் வல்லாளவேலரையே பார்த்துப் பார்த்து இமைகளைக் கொட்டிக் கொண்டிருந்தது!

இதைக் கவனித்துவிட்ட வல்லாளர் தமது முகத்தைக் காமிராவுக்கு மறுபுறமாகத் திருப்பிக் கொண்டு கூட்டத்துக்குள்ளே நடக்க முயன்றார். விருந்தினர்களை உபசரிக்க முயன்றார். ஆனாலும் அந்தப் புகைப்பட நிபுணர் அவரை விடவில்லை! அவர் எந்தப் பக்கம் திரும்பி நடந்தாலும் அங்கெல்லாம் சென்று வளைத்தார் அவர்! (தொடரும்)



சீரான ஆகாரமில்லாததால்
நீங்கள்
மெலிந்திருக்கிறீர்களா ?

# ஆல்போஸாங்
## சாப்பிடுங்கள்

**மிகச் சிறந்தது**
**சாதாரண உணவுடன் சேர்ந்து**
**சிக்கனமான, விஞ்ஞான முறையில்**
**ஊட்டமளிப்பது**

தேநீர், காப்பி, பால், கஞ்சி, பழரசம் முதலியவைகளுடன் சேர்த்து அருந்தினால் மிக ருசியாக இருக்கும். சிறு குழந்தைகளுக்கும், வளரும் பிராயத்திலும், பிரசவகாலத்தில் தாய்மார்களுக்கும், சிந்திக்கும் தொழிலாளிகளுக்கும், முதியவர்களுக்கும், பலவீனம் இரத்தமின்மை மற்றும் நோயிலிருந்து தேறி வரும் போதும் ஆல்போ-ஸாங் சிறந்த டானிக் உணவாகிறது.




பௌடர் மற்றும் மாத்திரைகளாகவும் கிடைக்கிறது.

**ஜே. & ஜே. டீஷேன்,**
ஹைதராபாத்—டெக்கான்

# பம்பாய்த் திருடன்

காந்தன்

இளைஞன் கிஷோர் மிகவும் நல்லவன்; கிராமத்திலிருந்து பம்பாய்க்கு வருகிறான். நிரந்தரமான வேலை கிடைக்கா விட்டாலும் கிஷோருக்கு அழகி மாலாவின் அன்பு கிடைக்கிறது. இதற்குமேல் கதையாகச் சொல்ல ஒன்றும் இல்லை. தையல் கடையில் துண்டுவிழுந்த துணிகளையெல்லாம் சேர்த்து ஒட்டிச் சட்டை தைத்தாற்போல் ஒன்றோடு ஒன்று பொருந்தாத சம்பவங்கள்! தம்பிக்காரன் அண்ணனுக்காரன் எழுதிய உயிலைத் திருடி இன்னொருவனிடம் கொடுப்பதும், அவன் கொலை செய்யப்படுவதும் ஏன், எப்படி என்பவை விளங்காப் புதிராகவே இருக்கின்றன. திரையில் நடுநடுவே தலையைக் காட்டி மொட்டைத் தலையைத்தான்!) கண்ணைக் காட்டி மிரட்டும் தடியனின் கதி என்ன என்பதும் புதிரே!

கொலையும், களவும், பொய்யும், புனை சுருட்டும் கதையின் மையக் கருவாக இருந்தாலும் காதலுக்கும் கோணங்கி வேடிக்கைகளுக்கும் தான் படத்தில் நிறைய இடம் தரப்பட்டிருக்கிறது.

அமெரிக்க அழகிகளின் பனிச்சறுக்கு நடனம் வண்ணப் படமாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது. "Holiday on Ice" என்னும் அந்த அமெரிக்கப் படத்தைப் பார்ப்பதற்கே 'பம்பாய்த் திருட'னிடம் பலர் விரைந்தோடுவார்கள். இந்த நடனக் காட்சியும் திரைக் கதையும் மாறி மாறி வருவதைக் காணப் பிராணன் போய்ப் போய் வருவதுபோலிருக்கிறது.

தீக்கு இரையாகிவிட இருந்த உயிலை அசோக்கிடமிருந்து கிஷோர் குமார், மாலா சின்ஹா, ஹெனி இரானி ஆகியவர்கள் சேர்ந்து பல சாகசங்கள் புரிந்து கைப்பற்றுகின்றனர். அசோக்கையும் போலீஸார் கைப்பற்றுகின்றனர். இந்தக் காட்சிகள் நன்றாகப் படமாக்கப் பட்டிருக்கின்றன. மாலா சின்ஹா, கிஷோர் குமார் இருவரும் காதல் ஜோடி. கிஷோர் கோமாளிக் கூத்தடித்தே கதாநாயகராகி விடுகிறார். எடுப்பான எழிலே மாலா சின்ஹாவைக் கதாநாயகி ஸ்தானத்துக்கு உயர்த்தி விடுகிறது. இதில் யாருமே கண்ணீர் வடித்து, தெருவில் அலைந்து அவதிப்படவில்லை; சிரமப்பட்டு உருகி நடிக்கவும் இல்லை. அதற்கு அவசியமும் இல்லை.

மாலா சின்ஹாவும், கிஷோர் குமாரும் உல்லாசமாக டெலிபோன் மூலம் காதல் பாட்டுப் பாடுவது வினோதமாயிருக்கிறது. பாடல்கள் சில நன்றாகவும் இருக்கின்றன.

ஒட்டு மீசை பறந்து போவதிலிருந்து ஐஸ் கிரீம் முகத்தில் அடிப்பது வரை பல இடங்களில் ஆங்கிலப் படம் பார்ப்பது போலவே இருக்கிறது. கடைசிக் காட்சியில் கிஷோர் குமாரை டிரெயினின் பின்னே ஒட்டிக் கொல்ல முயலுவது பச்சையாக ஆங்கிலப் படத்திலிருந்து எடுத்ததுதான்.

பனிச்சறுக்கு நடனத்தை மட்டும் மேல் நாட்டாருக்கு எழுதிவைத்தவர்கள் மற்றக் காட்சிகளைத் தாங்களே சுவீகாரம் செய்து கொண்டது ஏனோ?

போயும் போயும் பிடித்தார்களே, பம்பாய்த் திருடனை; அவர்களைச் சொல்ல வேணும்.





"பாகப் பிரிவினை" போன்ற கதைதான். ஆனால் கதை ஆரம்பத்தில் குழம்ப வைக்கிறது. பாகப் பிரிவினையை வற்புறுத்தியவர் எம். ஆர். ராதா. தம் சகோதரியின் பிள்ளைகள் இருவருக்கும் தம் பெண்களை மணம் முடித்து விட்டால் அந்தக் குடும்பத்துச் சொத்தும் தம் கைக்கு வந்து விடும் என்று மனப் பால் குடிக்கிறார். அவரது சகோதரியின் மக்களான — அசோகன், ஜெமினி கணேசன் இருவரில் அசோகன் தந்தையின் விருப்பத்துக்கு மாறாக மாமா பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டு தந்தைக்கு எதிராக மாறுகிறார். மாமன் மகள், சித்திரா கணேசனைக் காதலிக்கிறாள். ஆனால் கணேசன் மாலதியைக் காதலிக்கிறார்.' மாலதி கல்லூரி மாணவி; அத்துடன் சிற்றன்னையின் அண்ணன் மகள்.

இரண்டு பிள்ளைகளுக்கும் தந்தையாக வந்து மைத்துனனின் சதியால் மனம் நொந்து மடியும் தந்தையாக எஸ். வி. சுப்பையா வருகிறார்; நடிப்பு உருக்கமாக இருக்கிறது.

சிற்றன்னையாக வந்து கொடுமைக்குப் பதிலாக அன்பையே மேற்கொண்டு அதன் காரணமாகத் தாமும் சிரமப்பட்டுப் பிறரையும் சிரமப்படுத்தும் திறமை எம். வி. ராஜம்மாவைத் தவிர வேறு யாருக்கு வரும்?

மாலதியாகச் சாவித்திரியும், சித்திராவாக விஜயகுமாரியும் வருகிறார்கள். நளினமும், சொகுசும், துடிப்பும், நொடிப்பும் கொண்டு இருவரும் இரு வேறு இயல்புகளைக் கொண்ட பாத்திரங்களை மிக நன்றாக ஏற்று நடித்திருக்கின்றனர். முதலில் உற்சாகத்தில் துள்ளித் திரிந்த விஜயகுமாரி அவ்வளவுக்கும் சேர்த்து வைத்துச் சோக வெள்ளத்தில் மிதந்து கடைசியில் தன் உயிரைக் காதலனின் பாத காணிக்கையாக்கிப் படத்தையும் ஒருவாறு முடித்து வைக்கிறார். சாவித்திரியினிடம் குறும்புத்தனத்தையும், சாந்தத்தையும், கண்ணீரையும், காதலையும் மாறி மாறிக் காண முடிகிறது.




திரைக் கதைக்குக் காலும் போய்த் தலையும் போய் அவதிப்படுவது போதாதென்று அசோகனுக்கு விபத்தில் ஒரு கால் போய் விடுகிறது! ஆனால் விபத்துக்குப் பிறகுதான் அவர் நடிப்பில் ஒரு தனித் தன்மை ஒளி விடுகிறது.

ஜெமினி கணேசன் தந்தை சொல்லை மதிப்பவராகவும் தாய் சொல் தவறாதவராகவும் இருப்பதால் அதிகச் சிரமம் இல்லாமலே அவர் காதல் நிறைவேறிக் கல்யாணமும் நடந்து விடுகிறது.

சந்திரபாபுவை நீண்ட காலத்துக்குப் பிறகு படத்தில் காண்கிறோம். அவர் குடுமியைக் கத்திரித்துக் கொண்டதுதான் மிச்சம்! ஆனால் அவர் திறமை முழுமையாக வெளிப்படவில்லை.

எம். ஆர். ராதாவின் கத்தல் மிகவும் அதிகமாகிப் பேச்சே விளங்காத நிலைமை ஏற்பட்டுவிட்டது.

வயசுக்கு மீறிய பேச்சுக்களைப் பேசும் சிறுவன் கமலஹாஸன் இறந்து போன தாத்தா திரும்பி வர மாட்டார் என்பதை அறிந்து கொள்ளாதவனாயிருப்பது விந்தையாயிருக்கிறது!

எப்படியோ ஆரம்பமான கதை எப்படியோ முடிந்து விடுகிறது. இந்த மட்டும் முடிந்து போகிறதே என்று சந்தோஷப்பட வேண்டியதுதான் என்றாலும் திரைக்கதை சம்பந்தம் இல்லாமல் தவிக்கும்போது வேதனையாயிருக்கிறது!

படத்தில் சிறப்பான அம்சமாகக் குறிப்பிடக் கூடியது ஒளிப் பதிவு ஒன்றுதான். விஜயகுமாரி காணும் அற்புதமான கனவுக் காட்சி ஒன்று போதும். ஒளிப்பதிவு டைரக்டர் தம்பு பாராட்டுக்குரியவர்.

"உனது மலர் கொடியிலே எனது மலர் மடியிலே" என்ற பாட்டு கருத்தில் சிறந்து மனத்தில் உறைந்து விடுகிறது.

"பாத காணிக்கை"யை உயர்ந்த படம் என்று பாராட்ட முடியாவிட்டாலும், சில நடிகர்களின் சிறந்த நடிப்பைக் கண்டு மகிழ முடிகிறது.

பண்டிட் P.S. ராமசர்மாவின்

# சக்தி சஞ்சீவி

குழந்தைகளின்

ஈரல். குலைக் கட்டிகளுக்கு.

எமது வைத்யரின் மாதாந்திர சுற்றுப் பிரயாண விவரம்
தங்கும் இடங்கள் வழக்கம்போல். மற்ற விவரங்களுக்கு எழுதவும்

| ஊர் | தேதி | நேரம் | ஊர் | தேதி | நேரம் |
|---|---|---|---|---|---|
| தாராபுரம் | 1 | காலை 8-30 to 9-30 | திருநெல்வேலி ஜங். | 12 | மாலை 3 to 5 |
| பழனி | 1 | காலை 10-30 to 11-30 | திருநெல்வேலி டவுன் | 12 | மாலை 5 to 6 |
| உடுமலைப்பேட்டை | 1 | மாலை 3 to 4 | அம்பாசமுத்திரம் | 13 | காலை 8 to 9-30 |
| பொள்ளாச்சி | 1 | மாலை 5 to 6 | தென்காசி | 13 | மாலை 3 to 5 |
| பாலக்காடு | 2 | காலை 9 to 11 | ராஜபாளையம் | 14 | காலை 9 to 10 |
| ,, | 2 | மாலை 3 to 5 | ஸ்ரீவில்லிபுத்தூர் | 14 | காலை 10-30 to 11-30 |
| கோயமுத்தூர் | 3 | காலை 9 to 11 | பெரியகுளம் | 14 | மாலை 3 to 4-30 |
| ,, | 3 | மாலை 2 to 4 | திண்டுக்கல் | 15 | காலை 8 to 9-30 |
| மேட்டுப்பாளையம் | 3 | மாலை 5 to 6 | நாமக்கல் | 15 | மாலை 3 to 4-30 |
| சத்தியமங்கலம் | 4 | காலை 8 to 9 | ராசிபுரம் | 15 | மாலை 5-30 to 6-30 |
| கோபி | 4 | காலை 10 to 11 | சேலம் | 16 | காலை 9 to 11 |
| பவானி | 4 | மாலை 2 to 3 | ,, | 16 | மாலை 3 to 5 |
| மேட்டூர் அணை | 4 | மாலை 4-30 to 5-30 | சேலம்: செவ்வாய்ப் பேட்டை | 16 | மாலை 1-30 to 2-30 |
| ஈரோடு | 5 | காலை 9 to 11 | தருமபுரி | 17 | காலை 9 to 10-30 |
| திருப்பூர் | 5 | மாலை 4 to 5-30 | கிருஷ்ணகிரி | 17 | மாலை 3-30 to 5 |
| திருச்சி | 6 | காலை 11 to மாலை 6 | திருப்பத்தூர் (N.A.) | 18 | காலை 8-30 to 10 |
| தஞ்சாவூர் | 7 | காலை 7 to 9 | குடியாத்தம் (N.A.) | 18 | மாலை 2 to 3-30 |
| கும்பகோணம் | 7,17,27 | காலை 10 to மாலை 5 | சித்தூர் (ஆந்திரா) | 18 | மாலை 5 to 6-30 |
| சீர்காழி | 8 | காலை 7 to 8-30 | வேலூர் (N.A.) | 19 | காலை 9 to 11 |
| மாயூரம் | 8 | காலை 9 to 11 | பெரிய காஞ்சிபுரம் | 19 | மாலை 3 to 5 |
| நன்னிலம் | 8 | மாலை 2 to 3 | சென்னை | 20 | காலை 9 to 11 |
| நாகப்பட்டினம் | 8 | மாலை 5 to 6-30 | ,, | 20 | மாலை 3 to 5 |
| திருவாரூர் | 9 | காலை 7-30 to 9-30 | செங்கற்பட்டு | 21 | காலை 9 to 10-30 |
| விஜயபுரம் | 9 | காலை 10 to 11 | திண்டிவனம் | 21 | மாலை 2-30 to 4 |
| திருத்துறைப்பூண்டி | 9 | மாலை 2 to 3-30 | விழுப்புரம் | 21 | மாலை 5 to 6 |
| பட்டுக்கோட்டை | 9 | மாலை 4-30 to 6-30 | திருவண்ணாமலை | 22 | காலை 8-30 to 10 |
| புதுக்கோட்டை | 10 | காலை 8 to 1 | திருக்கோவிலூர் | 22 | காலை 11 to 12 |
| பொன்னமராவதி | 10 | காலை 11-30 to 12-30 | கடலூர் (N.T.) | 22 | மாலை 4 to 5-30 |
| தேவகோட்டை | 10 | மாலை 2-30 to 3-30 | சிதம்பரம் | 23 | காலை 9 to 10-30 |
| காரைக்குடி | 10 | மாலை 4-30 to 6 | விருத்தாசலம் | 23 | மாலை 3-30 to 5 |
| பரமக்குடி | 11 | காலை 8 to 10 | கள்ளக்குறிச்சி | 24 | காலை 8-30 to 9-30 |
| ராமனாதபுரம் | 11 | மாலை 3-30 to 4-30 | ஆத்தூர் | 24 | காலை 11 to 12 |
| சிவகங்கை | 11 | காலை 8-30 to 10 | துறையூர் | 24 | மாலை 3-30 to 5 |
| மதுரை | 11 | காலை 11 to 12-30 | மல்லேஸ்வரம் பெங்களூர் - 3 | 26 | காலை 9 to 11 |
| ,, | 11 | மாலை 3 to 6 | | | மாலை 3 to 5 |
| கோவில்பட்டி | 12 | காலை 8 to 9 | | | |

## ஸ்ரீ சக்தி விலாஸ வைத்யசாலை H. O. கரூர்

கிளைகள் :
1. 94, டவுன் ஹைஸ்கூல் ரோடு, கும்பகோணம்
2. 2332, 5th கிராஸ், மல்லேஸ்வரம், பெங்களூர்-3

குறிப்பு: குழந்தைகளுக்குக் கட்டி வராமல் தடுக்கவும், கக்குவான் இருமலைக் குணப்படுத்துவதற்கும், தொண்டை சதை வளர்ச்சியை (TONSILS) ஆபரேஷன் இல்லாமல் குணப்படுத்துவதற்கும் எங்களிடம் நல்ல மருந்துகள் கிடைக்கும்.

# திருடன் தப்பினான்!

நள்ளிரவு. மையிருட்டு. சந்திரன் தோன்றவில்லை. மாடி ஜன்னல் கதவு திறந்திருக்கிறது, காற்றுக்காக. ஜன்னல் கம்பிகளில் இடைவெளி அதிகம். கம்பிகளும் மெல்லிய ரகம். பிரபல வியாபாரி கஜேந்திரன் நிம்மதியாக ரப்பர் மெத்தை போட்ட கட்டிலில் படுத்துக் குறட்டை விட்டுக் கொண்டிருக்கிறார்.

கஜேந்திரனின் மனைவி காமாட்சியம்மாள் சற்றுப் பழைய காலம். வழவழத்த சிமெண்டுத் தரையிலே ஒருபக்கமாக ஒரு தலையணையை மாத்திரம் வைத்துக் கொண்டு நித்திரையில் ஆழ்ந்திருக்கிறாள். கழுத்தில் கிடந்த எத்தனையோ வடம் தங்கச் சங்கிலிகள், தரையில் சரிந்து விழுந்து கிடக்கின்றன.

இருவருக்கும் காசு பணத்துக்குக் குறைவில்லை. அதுபோல் நல்ல தூக்கத்துக்கும் குறைவில்லை. 'கொடுத்து வைத்தவர்கள்' என்று எத்தனையோ பேர்கள் அவர்களைப் பார்த்துப் பெருமூச்சு விடுவதற்கும் குறைவில்லை.

எங்கோ ஹாலிலுள்ள கடிகாரம் ஒரு தடவை மாத்திரம் அடித்து நிற்கிறது. மணி பன்னிரண்டரையாக இருக்கலாம்; எங்கும் ஒரே அமைதி. அதைக் கலைக்கின்றது எங்கோ தெருவில் எழுந்த நாய்க் குரைப்பு. அதுவும் சீக்கிரமே ஓய்ந்து விடுகிறது. கஜேந்திரனோ காமாட்சியோ அசைந்துகூடப் படுக்கவில்லை.

ஜன்னல் கம்பிகளுக்கு வெளியே ஒரு கருப்பு உருவம். உள்ளே உற்றுப் பார்க்கிறது. அந்த உருவத்தின் விழிகளில்தான் எத்தனை பயங்கரம்?

அடேயப்பா! என்ன லாகவம்! கம்பிகள் வளைகின்றனவா? அப்படியே இருக்கின்றனவா? இமைகொட்டும் நேரத்தில் அவ்வுருவம் அறைக்குள் நுழைகிறது.

கஜேந்திரனின் தலைமாட்டின் பக்கத்திலே போய் நிற்கிறது. தலையணைக் கடியில் தான் அவர் இரும்புப் பெட்டிச் சாவியை வைத்திருக்கிறார் என்று அதற்கு ஒருவேளை தெரியுமோ? அந்த வேளையிலா கஜேந்திரன் புரண்டு படுக்க வேண்டும்? கருப்பு உருவம் சட்டென்று பின்வாங்கிக் கட்டிலின் கீழே பதுங்குகிறது.

கைக்கு எட்டும் தூரத்தில் காமாட்சியம்மாளின் ஐம்பது சவரன் நகைகள் இருக்கின்றன. மார்க்கெட் ரேட்டுக்கு அவை ஐயாயிரம் பெறும்!

கருப்பு உருவம் காமாட்சியம்மாளை நெருங்குகிறது. ஆனால் அதற்கு ஏதோ யோசனை! விழித்துப் பார்த்துக் கொண்டே நிற்கிறது. காமாட்சியம்மாள் நன்றாகத் தூங்கிக் கொண்டுதான் இருக்கிறாள்.

காமாட்சியம்மாள் தூக்கத்தில் ஏதாவது பிச்சைக்காரியைப் 'போ! போ!' என்று விரட்டுவதாகச் சொப்பனம் கண்டாளா, என்ன? அவள் கை அசைகிறது. பக்கத்தில் நின்றிருந்த உருவத்தின் காலில் அவள் கை விரல்கள் படுகின்றன.

''ஐயோ திருடன்!'' என்று அலறி எழுந்திருக்கிறாள் காமாட்சியம்மாள்.

அதே கணத்தில் தலைமாட்டில் இருந்த சுவிட்சைத் தட்டி விட்டுக் கஜேந்திரன் கட்டிலிலிருந்து குதிக்கிறார். எங்கும் கண்களைப் பறிக்கும் ஒளி! தலையணை அடியிலிருந்த கைத்துப்பாக்கி ஸ்ரீமான் கஜேந்திரன் கையில் மின்னுகிறது.

கருப்பு உருவம் ஜன்னலை நோக்கி விரைகிறது. ''அட சீ! கருப்புப் பூனை!'' என்று கொட்டாவி விடுகிறார் கஜேந்திரன். வேறு என்ன செய்வதாம்? — 'கோன்'

**கவிதாவின்** தோல்விக்குக் கதாசிரியரே முழுப் பொறுப்பாளி:

ராஜசுலோசனை இரட்டை வேடம் போட்டால் மட்டும் போதுமா; பாத்திரத்தில் வேறுபாடு வேண்டாமோ?

வில்லனை (நம்பியார்) நிமிர்த்தி நல்லவனாக ஆக்கி யிருக்கிறார்கள். என்ன பயன்?

ராதா ரொம்ப சாதா!

ஏதோ கொஞ்சம் புத்தி கலாகினத்துடன் காணப்படும் பொன்னம்மாளை அடிக்கடி பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் கொண்டுபோய் அடைக்கிறார்கள். அதற்குப் பதில் மற்றப் பாத்திரங்களை அங்கே அடைத்திருக்கலாம்.

'பாபிக்கு சகாயக' என்பார்கள். எம். ஆர். ராதாவை மலை மேலேயிருந்து அடிவாரம் வரைக்கும் புரட்டிப் புரட்டித் தள்ளியும் கடைசியில் வெடி வைத்துத்தான் கொல்ல வேண்டி யிருக்கிறது.

**'கவிதா'**—எத்தனைக்கெத்தனை அழகான பெயரோ அத்தனைக் கத்தனை மோசமான படம்!



# வாழ்வின் ழள்

**கே. ஏ. என்**

**நா**ன் இறந்து கொண்டிருக்கிறேன். நன்றாகத் தெரிகிறது. உயிரின் துடிப்பு மெல்ல மெல்ல அடங்கிக் கொண்டிருக்கிறது. ஆசைகள் அடங்கி, அவிந்து நெஞ்சினுள் நீறாகி விட்டன. ஆசைகளையும் எண்ணங்களையும் தோற்றுவித்து, இயக்கி, உணர்ச்சிகளுக்கும், கிளர்ச்சிகளுக்கும் ஆட்டபட வைத்த இதயம் மெல்ல மெல்லத் தன் துடிப்பை அடக்கிக் கொண்டு வருகிறது. பார்த்துப் பார்த்துச் சலித்து விட்ட கண்கள் தாமாக மூடிக் கொள்கின்றன. ஜீவனின் துடிப்பு அடங்கிக் கொண்டிருப்பதை நான் நன்றாக அறிகிறேன். ஆசைகள் அடங்கி, அவிந்து விட்ட நிலையில் ஒரே ஓர் ஆசை, அணையும் தீபத்தின் கடைசிச் சுடராக ஒளி தெறிக்கிறது.

பட்டென்று இமையைத் திறந்து பார்க்கிறேன்.

கூடத்தில் என்னைக் கிடத்தியிருக்கிறார்கள். கண்கள் மெல்லச் சுழலுகின்றன. வலது கைப்பக்கத்தில் அம்மா கவலை தோய்ந்த முகத்துடன் என்னையே பார்த்துக் கொண்டிருக்கிறாள். அவள் அழுதிருக்க வேண்டும். கண்ணாடியில் வடிந்த நீர் உலர்ந்து கோடாகத் தெரிவது போல் அவள் கன்னங்களில் கண்ணீர்க் கறை நீளக் கோடாக விழுந்திருந்தது. மூக்கு அளவுக்கு அதிகமாகச் சிவந்திருந்தது.

அதோ அப்பா. தலைகுனிந்து உட்கார்ந்து கொண்டிருக்கிறார். பெண்ணைப் பெற்றவன் வேதனைப் படத்தான் வேண்டும் என்பது அவர் முகத்தைப் பார்த்தாலே தெரிகிறது. என் முகத்தையும், சுவரில் மாட்டியிருக்கும் 'அவர்' படத்தையும் மாறி மாறி அவர் பார்க்கிறார்.

படத்தில் அவர் இருக்கிறார். மார்பளவில் எடுக்கப்பட்ட புகைப் படம் அது. சிரித்த முகத்துடன் 'அவர்' அதில் காட்சி யளிக்கிறார். அவர் மட்டும்தான் சிரிக்கிறார். அவரை 'மணந்த' நான் மரணத்தை நெருங்கிக் கொண்டிருக்கிறேன். அவர் இங்கே நிழலாக இருக்கிறார். உருவாக, நிஜமாக அவர் இருக்குமிடம் தெரியும். கும்பகோணத்திலிருக்கிறார் தக்க துணைவியுடன். பெற்ற செல்வத்துடன் 'குடும்பி'யாக வாழ்கிறார். எல்லாம் தெரியும்.

பார்வை திரும்புகிறது. அப்பா என்னையே பார்த்துக் கொண்டிருப்பது தெரிகிறது. அவர் கண்களில் அளவற்ற சோகம். பொன் கிடைத்தாலும் புதன் கிடைக்காது. இரண்டும் கிடைத்தாலும் ஐந்தாவது பெண் கிடைக்க மாட்டாள் என்பார்கள். நான் ஐந்தாவதாகப் பிறந்தேன். அப்பா ஆனந்தக் கூத்தாடியிருப்பார். பிறந்தது ஒரே பெண். அதுவும் ஐந்தாவது. அவர் மகிழ்ச்சி அளவற்றுப் போயிருக்கும். ஆனால் நான் கறுப்பாகப் பிறந்து விட்டேன். அப்போது அதை அவர் ஒரு பொருட்டாகவே மதித்திருக்க மாட்டார். ஆனால் அந்தக் கறுப்பே என் வாழ்வில் நிழலைக் கவித்து, இருட்டாக்கி விட்டது. அஞ்சில் மிஞ்சியது நான் ஒருத்திதான்.

அப்பா என்னை எப்படி வளர்த்தார்? அதுகூடப் பெரிதல்ல; அத்தை என்னை எப்படி வளர்த்தாள்? அடடா, நான் பிறந்தபோது ''இதோ என் மருமகள்!'' என்று மகிழ்ச்சி பொங்கக் கூறினளாம். அவள் மகிழ்ச்சி, மலராத மொட்டாக மட்டுமல்ல, மொட்டிலேயே கருகி விட்ட பூவாகி விட்டது.

எவ்வளவோ ஆசையுடன்தான் என்னை வளர்த்தார்கள். பெண் என்பதால் அன்பைச் சொரிந்தார்கள். அந்த அன்பும் மணம் முடியும் வரையில்தான். அதற்குப் பிறகு? ம்.... வாழ்வா அது?

''இந்துவுக்கென்னடி? ராஜா மாதிரி அவள் அத்தான் வாய்த்து விட்டார்!''

மணமேடையில் அமர்ந்து கொண்டிருந்த என் காதில் அந்த வார்த்தைகள் விழத்தான் செய்தன. உண்மைதான். நான் கறுப்பு நிறம். இதைத் தவிர வேறு என்ன குறை எனக்கு?

அப்படித்தான் நான் நினைத்திருந்தேன்.

ஆனால் அந்தக் கறுப்புத்தான் முதலும் முடிவுமான குறையாகப் போய் விட்டது அவருக்கு.

எவ்வளவோ மகிழ்ச்சியுடன் 'அந்த' அறையில் நுழைந்தேன். பெண் பிறவியின் பெரும் பயனை இன்று அடையப் போகிறோம் என்ற நினைப்பில் உடல் பூரித்தது. உள்ளம் கிளுகிளுத்தது.

அவர் மூலையில் நின்று கொண்டிருந்தார். கையில் சிகரெட் புகைந்து கொண்டிருந்தது. வாழ்வு சிறிது நேரத்தில் புகையப் போகிறது என்று அறியாத நான் அந்தச் சிகரெட்டையே பார்த்துக் கொண்டிருந்தேன். சொந்த அத்தான் தான் அவர். பி. ஏ. படித்தவர். நல்ல உத்தியோகத்தில் இருக்கிறார். அவர் உருவத்தை இன்றெல்லாம் பார்த்துக் கொண்டிருக்கலாம். நல்ல பசும் பொன்போல் மஞ்சள் நிற

மேனி. அடர்ந்து கறுத்துச் சுருண்ட முடி. நல்ல உயரம்: சினிமாக் கதாநாயகன்போல் இருந்தார். சில்க் சட்டையும், பட்டு வேஷ்டியுமாகக் கண் நிறைந்தவராகக் காட்சியளித்தார்.

நான் பூரித்துப் போனேன்.

அழைப்பார், அழைப்பார் என்று கால் கடுக்க நின்று கொண்டிருந்தேன். அவர் அசையவில்லை சிகரெட் தீரும் வரைக்கும். சிகரெட் தீர்ந்தது. இன்னென்றைப் பற்ற வைத்துக் கொண்டு கட்டிலின் மேல் உட்கார்ந்து கொண்டார். ஏறிட்டு நோக்கினேன், சொந்த அத்தான் தானே என்ற நினைப்பில். அவர் சுருள் சுருளாக மேலே எழும்பிக் கொண்டிருந்த புகையைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

"அத்தான்!" என்றேன் துணிந்து.

அவர் சிரித்தார். ஜீவனே, துடிப்போ இல்லாத சவச் சிரிப்பாக அது இருந்தது.

துடித்துப் போனேன்.

"இங்கே வா!" என்றார்.

அருகே சென்றேன் பயத்துடன்.



"இதோ, பார். எனக்கு நீ மனைவியாக இருக்கத் தகுதி படைத்தவள்தானு என்பதை எண்ணிப் பார். வெளியில் எங்காவது

உன்னை அழைத்துக்கொண்டு போக முடியுமா? அம்மா சொன்னாளே, வற்புறுத்தினாளே என்பதற்காகத்தான் தாலி கட்டினேன். நீ எனக்கு எந்த வகையிலும் தகுதியல்ல. உறவு உறவு என்று சொல்லியே என்னை மடக்கி விட்டனர். ஆனால் உனக்கு எனக்கும் பேருக்குத்தான் கணவன் — மனைவி என்ற உறவு இருக்கும். அதோடு சரி. நீ யாரிடம் இதைச் சொல்லுவாயோ, உன்னோடு வைத்துக் கொள்வாயோ?''

படபடவென்று அவர் பொரிந்து தள்ளி விட்டார். நெருப்புப் பொறிகளாக அவர் வார்த்தைகள் இதயத்தைச் சுட்டன. இதயத்தில் பொங்கிய உணர்வுகள் அங்கேயே பொசுங்கி விட்டன. உணர்வுகளின் நிசம் நாற்றம் தலைசுற்ற வைத்தது. மயங்கிக் கீழே விழுந்து விட்டேன்.

அதுதான் தெரியும். பிறகு ஒன்றும் எனக்குத் தெரியாது.

அத்தை வீட்டுக்கு 'மருமகள்' என்ற பட்டத்துடன் அழைத்துச் செல்லப்பட்டேன்.

எனக்கு வாழ்க்கை ஆரம்பமாகி விட்டதாக எல்லோரும் சொன்னார்கள். வெளித் தோற்றத்தையும், உணர்வுகளையுமே கண்டு எடை போடும் பழக்கம் நமக்கு உண்டு. உண்மைத் தோற்றம் வெளிப்படும்போது அதன் தீட்சண்யம் தாங்காமல் தவித்து விடும்.

நான் வெளிக்குச் சிரித்தேன்; மகிழ்ந்தேன்; பேசினேன்.

''இந்துவுக்குக் கண் நிறைந்த மாப்பிள்ளை. உயிராக வைத்திருக்கிறாராம் அவர்!''

செவி நிறைய அந்த வார்த்தைகள் விழுந்தன. ஆனால் அந்த வார்த்தைகளுக்கு மனத்தை நிறைக்கும் சக்தி துளிகூட இல்லையே. சாறு அற்ற சக்கை வார்த்தைகள்தான் அவை.

என் நிழல் பட்டாலே அவர் முகம் சுளிப்பார். எதிரில் நடமாடவே கூடாது. தப்பித் தவறிப் பட்டு விட்டால் ''பீடை, உன் முகத்தை என் முன்னால் வேறு காட்ட வேண்டுமா?'' என்று காதுபட முணுமுணுப்பார்.

பொங்கி வரும் அழுகையை அடக்க வகை தெரியாமல் விசிப்பேன்.

''என்னைத்தான் காலமெல்லாம் அழவைத்துவிட்டாயே! தொலையேன்!'' என்று கத்துவார்.

அத்தை எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டு தானிருப்பார். 'ஏன்டா அவளை அப்படிக் காயறே?' என்று ஒரு சொல் கேட்கவில்லை. கேட்கும் அளவுக்கு அம்மாவுக்கும், மகனுக்கும் உறவில்லை.

தனிமையில் அழும்போதெல்லாம், ''இந்து! அவன் புத்தி இப்படியாகும்னு நினைக்கலேம்மா. மனசறிந்து உனக்கு ஒரு கெடுதலும் செய்யலேம்மா!'' என்று அத்தை வருந்துவார்.

தீபாவளி வந்தது.

தலை தீபாவளி. இப்போதாவது கருணை பிறக்குமென்று நினைத்தேன். திடுதிப்பென்று எங்கோ புறப்பட்டுப் போய் விட்டார்.

''என்னம்மா இந்து? ஏன் மாப்பிள்ளை உன்னுடன் வரலே?'' என்று அப்பா பதறிப் போய்க் கேட்டார்.

நான் என்ன சொல்லுவேன்? 'ஓ'வென்று கதறி அழுதேன்.

அம்மாவுக்கு மட்டும் நான் மலர்ந்தும், மணம் பெறாத கதையைச் சொன்னேன். அவள் பேயடித்தவள் போல் வெறிக்கப் பார்த்தாள்.

''இந்து! இந்து! இவ்வளவு நாளாக ஒரு வார்த்தை இது பற்றிச் சொல்லலியேம்மா! வரட்டும், கேட்கிறேன்!'' என்று கதறினாள்.

ஆனால் அவர் வரவேயில்லை. போனவர் போனவர்தான். பிறகு திரும்பவே யில்லை. போன இடமும் தெரியாது போயிற்று.

''இந்து வாழாவெட்டி!''

ஊரார் சொல் காதில் விழுந்த போது அம்மா கதறித் துடித்தாள். அப்பா இடிந்து போய் விட்டார்.

என் கண்களில் கண்ணீர்கூட வரவில்லை. வருவதற்கு அங்கு ஒன்றுமில்லை. சூனியத்தில் நிலைத்து விட்ட விழிகள். உணர்வுகள் அவிந்து கொண்டிருந்தன. வீட்டின் முன்னறையில் தான் முடங்கிக் கிடப்பேன்.

ஒரோரு நாளில் கனவில் அவர் வருவார். அவருடன் குடும்பம் நடத்துவது போலவும், நான் மகிழ்ச்சியாக இருப்பது போலவும் கனவு காண்பேன். அதுகூட முழுமையாக இராது. திடீரென்று விழிப்பு வந்து விடும். வாழ்வின் கப்பிவிட்ட இருளைப் போல் அறை முழுதும் இருளில் மூழ்கிக் கிடக்கும். இருட்டில் எதையும் பார்க்க இயலாத நிலையில் கண்களைத் திறந்து கொண்டே படுத்திருப்பேன்.

என் வாழ்க்கை மரம் பட்டுக் கொண்டு வந்தது.

''இந்து! நாளுக்கு நாள் இளைக்கிறிட்டே போறியேம்மா!'' என் தோளைப் பிடித்துக் கொண்டு அம்மா உருகுவாள்.

அப்போதுதான் அவரைப் பற்றிய தகவல் கிடைத்தது. தஞ்சாவூரில் ஏதோ ஒரு தனிப்பட்ட கம்பெனியில் வேலை பார்த்து வருவதாக யாரோ சொன்னார்கள்.

''இந்து! நான் போய்ப் பார்த்துட்டு வரேம்மா!'' என்று அப்பா கிளம்பினார்.

'போய் வாருங்கள்' என்றோ, 'போகவேண்டாம்' என்றோ நான் சொல்லவில்லை. அவர் திரும்பி வருவதாக இருந்தால் எப்போதோ வந்திருக்க மாட்டாரா? இப்போது போய்க் கூப்பிட்டா வந்துவிடப் போகிறார்? நான் சும்மா இருந்து விட்டேன்.

அப்பா திரும்பி வந்தார். அளவுகடந்த கோபத்துடன் திரும்பி வந்தார். ''அயோக்கியன். மோசக்காரன்!'' என்று திட்டிக் கொண்டே வந்தார்.

''என்னங்க?'' என்று அம்மா பதறிப் போய்க் கேட்டாள்.

''அவன் செய்த வேலையைக் கேட்டியா? எவளோ ஒருத்தியைக் கட்டிக்கிட்டானாம். நம்ம சோமையா அவனைக் கும்பகோணத்திலே பார்த்தாராம். தஞ்சாவூரை விட்டு விட்டுக் கும்பகோணத்துக்கு வந்துட்டானாம். அவளிட்டியே தன் பெண்டாட்டியை அறிமுகம் செய்து வைத்தானாம். எவ்வளவு திமிர் பார்த்தியா? அவனைச் சும்மா விட்டு விடுவேன்னு நினைச்சிருக்கான் போலிருக்கு!''

அப்பா மனம் போன மட்டும் இப்படித் திட்டித் தீர்த்தார்.

அம்மா பெருங்குரலெடுத்து அழுதாள்.

நான் திடுக்கிடவில்லை. என்னைப் பொறுத்த வரை அது திடுக்கிடத்தக்க செய்தியும் அல்ல.

# புதிய 15 ஆண்டு வளரும் மாதச் சேமிப்புத் திட்டம்

1962 ஜூன் முதல்தேதி முதல் 15 ஆண்டு வளரும் மாதச் சேமிப்புத் திட்டக் கணக்கு ஒன்றை புதியதாக ஆரம்பித்துள்ளோம். இக்கணக்கில் அதிகபக்ஷமாக மாதம் ரூ. 300 செலுத்தலாம். அதே தேதிமுதல் 10 ஆண்டு கணக்கில் தற்போதுள்ள அதிகபக்ஷத் தொகையின் வரம்பும் ரூ. 200க்கு உயர்த்தப்பட்டுள்ளது.

### வருமான வரி தள்ளுபடி

ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் பிரீமியத்திற்கும், ப்ராவிடண்ட் நிதிகளுக்கும் அளிக்கப்படும் வருமான வரி தள்ளுபடி மாதிரி 10, 15 ஆண்டுக் கணக்குகளில் செலுத்தப்படும் தொகைகளுக்கும் வருமான வரி தள்ளுபடி கிடைக்கும். ஆனல் மொத்த வரம்பு ரூ. 10,000 அல்லது வருமானத்தில் கால்பாகம் இதில் எது குறைந்ததோ, அதுவாக இருக்க வேண்டும்.

### வரி இல்லாத வட்டி

10 ஆண்டு, 15 ஆண்டுக் கணக்கில் செலுத்தப்படும் தொகைகளுக்கு முறையே 3·8 சத விதம், 4·3 சத விதம் வருமான வரி இல்லாத கூட்டு வட்டி கிடைக்கிறது.

மேற்கொண்டு விவரங்களை அருகிலுள்ள தபால் நிலைய சேமிப்புப் பாங்கிலிடமிருந்து தெரிந்து கொள்ளுங்கள்.

---

தவருமல் சேமிக்க வசதியானது வளரும் மாதச் சேமிப்புத் திட்டத்தின்
5 ஆண்டு / 10 ஆண்டு / புதிய 15 ஆண்டுக் கணக்குகள்



## தேசீய சேமிப்பு நிறுவனம்

DA 62/167

ஆனால் அப்பா அடுத்துச் செய்த காரியம் தான் என்னைத் திடுக்கிடச் செய்தது.

'அவ'ருக்கு வக்கீல் நோட்டீஸ் கொடுக்க ஏற்பாடு செய்ய ஆரம்பித்தார்.

அன்றிரவு என்னுடைய அறைக்கு வந்தார். ''அம்மா, இந்து! அவன் செய்த வேலையைப் பார்த்தியாம்மா?'' அவர் குரல் அடைத்துக் கொண்டது.

நான் பேசவில்லை. மௌனமாக அவரைப் பார்த்தேன்.

''அவனுக்கு வக்கீல் நோட்டீஸ் கொடுக்கப் போறோம்மா! அதுக்கு உன்னுடைய சம்மதம் வேணும்'' என்றார்.

''எதுக்கப்பா?'' என்றேன்.

''எதுக்கா? எதுக்குன்னு கேக்கிறியேம்மா? உன்னை வாழாம அடிச்ச அந்தப் பயலைச் சும்மாவா விடறது? கோர்ட்டிலே அதுக்கு நீதி கேட்கணும். அதுக்குத்தானம்மா உன் சம்மதம் தேவை!'' அவர் புலியாகச் சீறினார்.

''அப்பா! ஒரு பெண்ணை இதைவிடக் கேவலமா ஆக்க முடியாதப்பா. என்னை அவர் வாழ வைக்கலே! அதுக்காக நான் கண்ணீர் விட்டேன். அதுகூட இப்போ வத்திப் போச்சு. ஆனால் நீங்க செய்ய இருக்கிற காரியத்தைப் போல ஒரு பெண்ணைக் கேவலப் படுத்தற காரியம் வேறே இருக்க முடியாது அப்பா! யார் மேலே யார் கேஸ் போடறது? தாலி கட்டியவர் மேலேயா? முடியாதப்பா! அவர் எனக்கு வாழ்வைத் தரலே. அதுக்காக அவர் வாழ்வை நான் பறிக்க விரும்பலே!

''அப்பா! நீங்கள் சொல்வதற்கு நான் ஒத்துக் கொள்ளவே மாட்டேன். முள் குத்தி விட்டதற்காக ஒரு ரோஜாவைக் கசக்கிவிட நான் விரும்பவில்லை. அவர் ரோஜா போல் மணக்கட்டும். அவர் வாழ்வில் முள்ளாக இருக்க நான் விரும்பவில்லை. முள் இருக்க வேண்டிய இடத்தில் இருக்கட்டும். வெறுத்து விட்டதற்காகப் பழி வாங்க வேண்டுமா? அப்பா! நீங்கள் மணப் பொருத்தம் பார்த்தீர்கள். மனப் பொருத்தம் பார்க்க மறந்து விட்டீர்கள். ஒரு வகையில் தவறே நம் பக்கம் தான். அவருக்கு விருப்பமில்லாத என்னைக் கட்டி வைத்தீர்கள். கணக்கைத் தப்பாகப் போட்டு விட்டுச் சரியான விடையை எதிர் பார்க்கலாமா? வேண்டாம் அப்பா இந்த முயற்சி வெல்லாம்!''

''நீ ஒரு பைத்தியக்காரி!'' அப்பா முணு முணுத்து விட்டுப் போய் விட்டார்.

நான் அழவில்லை; குமுறவில்லை. அவர் மறுமணம் செய்து கொண்டார் என்பதைக் கேட்டுக் கண் கலங்கவில்லை. ஏன் கலங்க வேண்டும்? நிலைத்த முடிவுக்குப் பிறகு தொடர்ச்சி உண்டா என்ன? அப்படி இருந்தால் அதற்கு முடிவு என்று பெயரில்லையே! என் வாழ்க்கையின் முடிவு எனக்குத் தெரிந்து விட்டது. கதறியோ புலம்பியோ ஆகப் போவது என்ன? ஒன்றுமில்லை.

வாய்ச் சொல்லும் அடங்கி விட்டது. எல்லாமே அடங்க ஆரம்பித்து விட்டன. அடக்கம், உடலில் ஒடுக்கத்தைச் சேர்த்தது.

''இந்து...!'' என்று மனம் உருகுவாள் அம்மா. நான் விரக்தியுடன் சிரிப்பேன்.

வர வர உடல் நிற்க மறுத்தது. சாய் மானம் கேட்டது. பிறகு அதுவும் முடிய வில்லை. படுக்கையில் விழுந்து இரண்டு



மனைவி: அடாடா! நடு ராத்திரியில் குழந்தை இப்படி அலறுகிறதே! தூக்கக் கலக்கத்தில் குழந்தை வாய் ரப்பரை எங்கே வைத்தீர்கள்?

---

ஆண்டுகளாகி விட்டன. அவருக்குக் குழந்தை பிறந்ததாகக்கூடக் கேள்விப்பட்டேன்.

எந்தப் பிடிப்பும், நம்பிக்கையும் இல்லாத ஜீவன் ஒடுங்க ஆரம்பித்து விட்டது.

அம்மா கண்ணீர் விட்டாள். அப்பா பெருமூச்சு விட்டார். இதோ ஓடும் மூச்சு ஒடுங்குகிறது.

ஐயோ, இதென்ன கூட்டம்? யார் யார் தலையோ தெரிகிறதே? எல்லார் முகத்திலும் சோகம் கவிழ்ந்திருக்கிறதே!

''பாவம்! இந்து வாழக் கொடுத்து வைக்கல்லே....!''

யாரோ பேசுவது காதில் விழுகிறது.

''அம்மா!''

''இந்து, என்னைப் பாரம்மா!''

அம்மா அழுகிறாள்.

''சார், தந்தி!''

இதென்ன குரல்? அப்பா எழுந்து வேகமாக ஓடுகிறார். திடீரென ஒரு சலசலப்பு.

''ஐயோ இந்து!'' அப்பாவின் அலறல் கேட்கிறது.

''அடேடே! சந்திரன் லாரியிலே சிக்கிக் கிட்டு இறந்து விட்டானாம்!''

இந்தக் குரல்தான் என் காதில் விழுகிறது.

'ஐயோ! அவர் இறந்து விட்டாரா? அவருக்கு முன் நான் போய்ச் சேர்ந்துவிட நினைத்தேனே. இப்போது அந்த ஆசையும் நிறைவேறவில்லையே. என் உயிரைப் பறிக்க வந்த எமன் அவருக்குக் கயிற்றை நீட்டிவிட்டானே?'

கண்களில் நீண்ட நாட்களுக்குப் பிறகு கண்ணீர் வழிகிறது.

நான் பிழைத்துக் கொண்டேன்.

ஆனால் பயன்? எனக்கு மறுபடியும் வாய்க்க இருப்பது அந்த அறையின் மூலைதான். இது வரை 'அவர்' உயிரோடு இருக்கிறார் என்ற தெம்பாவது இருந்தது. இனி அதற்கும் வழி இல்லை. பிழைத்து என்ன பயன் ?

உயிர் தேறி விட்டது. வாழ்க்கை....?

# வாதியின் வக்கீல்

ஏ.எஸ். சுந்தரராஜன்

**கா**லை நேரம் —

பிரம்பு நாற்காலியில் சாய்ந்தபடியே அன்றையத் 'தினசரி'யைப் புரட்டிக் கொண்டிருந்தேன்.

உள்ளே சமையலறையில் என் மனைவி சாந்தாவுக்கும் எட்டே வயது நிரம்பிய என் புத்திரச் செல்வம் அப்பர்சாமிக்கும் ஏதோ பலத்த வாக்குவாதம் நடந்து கொண்டிருந்தது.

''ஏண்டா முணுமுணுத்துக் கொண்டு நிக்கிறே? டிபன் பொட்டலத்தை எடுத்துக் கொண்டு போயேன் பள்ளிக் கூடம்!'' — இது சாந்தா.

அடுத்து ஒலித்தது அப்பர்சாமியின் அலட்சியக் குரல்:

''இது என்ன டிபனு? ஒண்ணரை இட்டிலி!''

''பின்னே எத்தனை வேணுமாம்!''

''நாலு வை!''

''அட குண்டோதரா! வேண்டாண்டா — பாழாக்காதே— நீ தின்ன மாட்டே.''

''எல்லாம் தின்னுவேன்.''

''சொல்றதைக் கேட்கலேன்னு உதை விழும், தெரியுமா?''

''அப்போ தரமாட்டியா?''

''தர மாட்டேன்!''





''உம். அப்பாவுக்கு மட்டும் வைக்கிறியே ஆறு.''

''ஆமா — அவர் சம்பாதிக்கிறார் — வைப்பேன். நீ சம்பாதிக்கிறியோ?''

''சம்பாதிச்சால்தான் ஆறு இட்டிலி திங்கணுமா?''

''ஆமாம்.''

''உம். எதிர் வீட்டுச் சங்கர் மாமா சம்பாதிக்கிறாரா?''

''இல்லே. இப்போத்தான் வேலைக்கு எழுதிப் போட்டிருக்கார். அதுக்கென்ன?''

''அவரு மட்டும் சம்பாதிக்காமலேயே எட்டு இட்டிலி திங்கிறாரே. நான்தான் பார்த்தேனே நேத்து ஹோட்டலிலே..''

சாந்தா சிரித்து விட்டாள்.

சற்று நேரம் மௌனம் நிலவியது.

அப்பர்சாமி வெற்றிக் கொடி நாட்டிவிட்டானல்லவா? டிபன் பொட்டலத்தில் நான்கு இட்டிலிகள் அடக்கம் செய்யப்படுகின்றன என்று ஊகித்து அறிந்துகொண்டேன்.

அப்பர்சாமி எங்களுக்கு ஒரே பிள்ளை. ஆனால் நாலைந்து பிள்ளைகளைச் சமாளிப்பதும் சரி, அவன் ஒருவனைச் சமாளிப்பதும் சரி. காலையில் அவனைப் பள்ளிக்கூடம் அனுப்பும் வரை சாந்தாவுக்குப் போதும் போதுமென்று ஆகிவிடும். மாலையில் வீடு திரும்பினேனோ என் பாடு ஆபத்துத்தான். இல்லாத சந்தேகங்களை யெல்லாம் கேட்டு என்னைத் திணற அடித்து விடுவான். வயதுக்கு மீறிய பேச்சு, சிந்தனை, அறிவு..

''அப்பா!''

வந்து விட்டான் புத்தகப் பையைத் தூக்கிக் கொண்டு. அவனுடைய பழை மொடுப்பைச் சமாளிக்கத் தயாரானேன்.

''என்னடா?''

''ஒரு பேனா வேணும்ப்பா.''

''சின்னப் பையனுக்கு எதுக்குடா பேனா?''

''நான் ஒண்ணும் சின்னப் பையன் இல்லே... இல்லே .... இல்லே!''

''சரி. பெரிய பையனாத்தான் இருக்கட்டுமே. மூணாங் கிளாஸ் படிக்கிறவனுக்கு எதுக்குடா பேனா?'' என்றேன்.

''பேனாவாலே எழுத ஆசையாயிருக்குப்பா!''

''அதெல்லாம் நீ பேனாவாலே எழுதக்கூடாது. பென்சிலாலேதான் எழுதணும் இப்போ.''

''ஏன்?''

''பென்சிலாலே எழுதினால்தான் கையெழுத்து அழகாய் வரும்.''

''நான் இப்போ அழகாய்த்தானே எழுதறேன், அப்பா?''

நோட் புக் ஒன்றைப் பிரித்து என்னிடம் காட்டினான் அப்பர்சாமி.

''ஊஹும்—இது அழகாவேயில்லே. இன்னும் ரெண்டு வருஷம் நீ பென்சிலாலே எழுதிப் பழகணும்.''

''அப்போ நீ நாலு வருஷம் பென்சிலாலே எழுதிப் பழகணும்!''

எனக்குத் தூக்கிவாரிப் போட்டது.

''ஏண்டா?''

''உன் எழுத்தும் கொஞ்சம் கூட நல்லாவேயில்லேயே, ராமு போட்ற காக்காய்ப் படம் மாதிரி யிருக்கு!''

ஆதாரத்துக்கு மேஜை மேல் கிடந்த 'பைல்' அட்டையைத் தூக்கி வந்து காண்பித்தான் அப்பர்சாமி.

என் தலை தொங்கிப் போயிற்று.




''என்ன அண்ணாச்சி! திடீர்னு இந்த வேலையை எடுத்துக்கிட்டே?''
''என்ன செய்யறது. சலவைக்காரர் வரவில்லே. என் சொக்காய் முன்னேயும் பின்னேயும் ஏகக் கிழிசலாக இருக்கு. அதை மறைக்கத்தான் இந்த வேலே!''

''சாயந்திரம் வரும்போது கட்டாயம் உனக்கு ஒரு பேனு வாங்கி வருகிறேண்டா கண்ணு!'' என்று அவனுக்கு வாக்களித்தேன். வேறு வழி?

அன்று மாலை மறக்காமல் புதிய பேனுவுடன் வீட்டுக்குத் திரும்பினேன்.

அப்பர் என்னைக் கண்டும் காணுத மாதிரி தெருத் திண்ணையில் உம்மென்று உட்கார்ந்திருந்தான். பக்கத்தில் பிரித்து வைத்தபடி ஒரு புஸ்தகம் கிடந்தது. இந்தக் கோணத்தில் என்றுமே நான் அவனேப் பார்த்ததில்லே யாகையால் ஏதோ முக்கிய விஷயம் நடந்திருக்க வேண்டும் என்று எண்ணிக் கொண்டு, ''என்னடா! வேணு, சேகர் எல்லாம் விளையாடுகிருர்களே! நீ போக வில்லேயா?'' என்று வினவினேன்.

''ஊஹூம். முதல்லே உங்கிட்டே ஒரு சந்தேகம் கேட்கணும்பா. அப்புறம் தான் விளேயாடப் போவேன்.''

எனக்குத் திக்கென்றது.

அவனுக்கு சந்தேகம் என்ருல் தீர்ப்ப தற்கு, 'என்ஸைக்ளோபீடியா' வால் யூம் வால்யூமாகப் பக்கத்தில் அடுக்கி வைத்துக் கொண்டல்லவா உட்கார வேண்டும் நான்?

''என்னடா சந்தேகம், எந்த நேர மும்?'' என்றேன் சற்று எரிச்சலுடன்.

''திருட்டுன்னு என்ன அப்பா!'' என்று கேட்டான் அப்பர்சாமி முதல் கேள்வியாக.

''ஏன், உன் வாத்தியார் சொல்லித் தரவில்லேயா? திருட்டுன்னு ஒருத்த ருக்குச் சொந்தமான பொருளே இன் னெருத்தர் தெரியாமல் ரகசியமாக எடுத்துக்கிறது'' என்றேன்.

''அது தப்புத்தானே?''

''ஆமாம். திருடுவது மகா பாவ மாச்சே.''

''அதனுல்தான் போலிருக்கு பள் ளிக்கூடத்திலே ரகு என் புத்தகத்தைத் திருடிட்டாம்பா. அதுக்கு வாத்தியார் அவனே உதை உதைன்னு உதைச்சு....''

''யாரு, எங்க ஆபீஸ் ஹெட்கிளார்க் வேணுவோட மகனேயா?''

''ஆமாம்பா. 'ஏண்டா திருடி'னேன்னு அவனைக் கேட்டேன். அதுக்கு அவன், ''இது என்னடா சின்னத் திருட்டு.- உங்கப்பா எங்கப்பாவுக்குக் கிடைக்க வேண்டிய மானேஜர் வேலேயையே திருடப் பார்க்கிருர்டா'ன்னு சொன் னன். ஏம்ப்பா! திருடுவது பாபம்னு சொல்லிட்டு நீயே திருடலாமா?''

'சுரீர்' என்றது எனக்குக் கண்ணிலே நெருப்பு பட்ட மாதிரி.

எங்கள் ஆபீஸ் மானேஜர் ரிட்டையர் ஆனதும் அந்தப் பதவிக்கு நியாயமாக வரவேண்டிய ஹெட் கிளார்க் வேணு வைத் தடுத்து, நானே அந்தப் பதவியில் அமர வேண்டுமென்று முதலாளியை அந்தரங்கமாகப் பேட்டி கண்டு 'அண் டர்கிரவுண்டு' வேலே செய்யும் விஷய மெல்லாம் இந்தச் சின்னப் பையன் களுக்கு எப்படித் தெரிந்தது?

திருட்டு —

ஒருவருக்குச் சொந்தமான பொருளே மட்டுமல்ல, சேர வேண்டிய பொருளே அபகரித்துக் கொண்டாலும் திருட்டுத் தான். அந்த வகையில் பார்த்தால் நான் பதவித் திருடன்!

என் சாண் உடம்பும் அணு அணு வாகச் சிறுத்துக் குறுகுவது போல் மெய் விதிர்த்து நின்றேன். இத்தனே நாட்க ளும் என்னுள் உறங்கிக் கிடந்த நியாய உணர்ச்சி விழித்து எழுந்தது. துரோக சிந்தை சொல்லிக் கொள்ளாமல் ஓடிற்று.

''ஏம்ப்பா! சின்னவங்க திருடினுல் வாத்தியார் அடிக்கிருர் — பெரியவங்க திருடினுல் யார் அடிப்பாங்க?''

நான் அப்படியே என் செல்வ மகனே அள்ளி அணைத்துக் கொண்டேன்.

''யாரும் அடிக்க மாட்டார்களடா. சட்டத்தின் பிடியிலிருந்து தப்பினுலும் மனச்சாட்சி அவர்களைக் கொன்றே விடும்'' என்றேன் கண்களில் நீர் மல்க.

இப்பொழுது அப்பர்சாமி என் கண் முன்னே வெறும் பாலகனுகத் தோன்ற வில்லே. சிவபெருமானுக்கு உபதேசித்த பால முருகனுகவே காட்சியளித்தான்.

# சிறிய தொழில்களை ஆரம்பித்து
# அதிக லாபம் பெறுங்கள்

தற்சமயம் பிரசுரமான 'சிறு தொழில்கள்' என்ற தமிழ்ப் புத்தகம் (புதிய இரண்டாவது பதிப்பில்) அநேக விதமான கைத்தொழில்களை ஆரம்பம் செய்ய பூரா விவரமும், தொழிற்சாலைகளுக்குத் தேவையான மிஷின்களின் விவரமும், சாமான்களின் விவரமும், சர்க்காரின் உதவியின் மூலம் மிஷின்களை தவணையில் பணம் செலுத்தி பெறும் விதமும், வெளி தேசத்து சாமான்களை வரவழைக்கும் விதமும் அடங்கியுள்ளது. 856 பக்கங்கள், 300 படங்கள்,

விலை ரூ. 13. தபால் செலவு ரூ. 1.60 ந. பை.

**COTTAGE INDUSTRY**

(KT-151) P.B. 1262, Jamuna Rd., **DELHI-6** Phone: 229835

---

# க்ளுகோவிடா விரைவில்




## தருவது
## கூடுதலான
## சக்தி

- களைப்பின்றி செயலாற்றும் சக்தி
- இரத்தத்திற்கு வேண்டிய சர்க்கரைச் சத்து
- விரைவில் ஜீரணிக்கப்பட்டு பலன் தருகிறது

அன்றாடம் அருந்துவீர்!

**க்ளுகோவிடா**

கார்ன் பிராடக்ட்ஸ் கோ. (இந்தியா) பிரைவேட் லிட்.





# கூடைப்பந்துக் கொண்டாட்டம்

குண்டுமணி



ஆரம்பக் காலத்தில் அமெரிக்காவில் கூடைப் பந்தாட்டத்துக்கு ஏணி தேவையாக இருந்ததாம். அமெரிக்கர்களே ஏணிபோல் உயரமாக இருப்பார்களே, அவர்களுக்கு ஏணி எதற்கு என்று கேட்கலாம். ஆனால் இந்த ஆட்டம் ஆரம்பித்த புதிதில் சுவர்களில் இரு பீச் பழக் கூடைகளை ஆணி யடித்து வைத்து, கால் பந்தைக் கொண்டே கூடைப் பந்தாட்டம் ஆடினர். பீச் பழக் கூடையின் அடி மூடப் பட்டிருந்ததால் கூடையில் விழுந்த பந்தை ஏணியை வைத்தே எடுக்கும்படியாயிற்று.

1891-ம் வருஷம் பிறந்த இந்த ஆட்டம் அமெரிக்க ஸ்பிரிங்பீல்ட் கல்லூரியைச்சேர்ந்த டாக்டர் ஜேம்ஸ் நயிஸ்மித் என்பவரால் கண்டு பிடிக்கப்பட்டது.

இந்தியாவில் கூடைப் பந்தாட்டம் நாற்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னால்தான் வந்தது. இருந்தாலும் கூடைப் பந்து பிறந்த தாயகத்திலிருந்து வந்த அமெரிக்க 'மெல்ஸ் ஸெப்'பைத் தென்னிந்திய ரயில்வே கோஷ்டி வெற்றி பெற்றது அருஞ் செயலாகக் கருதலாம். சென்னை தியாகராய நகர் நகரசபை மைதானத்தில் மக்ளேனியா கோப்பைக்காக நடைபெற்ற கூடைப் பந்தாட்டப் போட்டியில் தான் இந்தச் சாதனையைக் கண்டோம். இந்தப் போட்டி கடைசி வரையில் யார் வெற்றி பெறுவார்களோ என்ற திகைப்பைக் கொடுத்துக் கொண்டிருந்தது. நெட்டிலிங்க மரம் போல் உயர்ந்த அமெரிக்க நாட்டைச் சேர்ந்த நீக்ரோ ஆட்டக்காரர் ஜான் யார்பரோ இருந்தும், ஆட்டத்தை அவர் நன்கு நிர்வகித்தும் வெற்றி தென்னிந்திய ரயில்வே கோஷ்டிக்குக் கிடைத்தது என்றும் தென்னிந்திய ரயில்வேயில் மணியான ஆட்டக்காரர்கள் இருக்கிறார்கள் என்பதைத் தெரிந்து கொள்ளலாம். அமெரிக்க ஆட்டக்காரர்களுக்கு அடிக்கடி முன்கோபம் எழுந்த போதெல்லாம் அவர்களைச் சமாதானப் படுத்தி ஆட்டத்தைச் செவ்வனே நடத்த வழிகோலிய நீக்ரோ ஆட்டக்காரர் ஜான் யார்பரோவுக்கு பரிசு அளித்துக் கௌரவித்தது மிகப் பொருத்தமாகும்.



இறுதி ஆட்டத்தன்று சின்னஞ் சிறுவர்களை முதலில் ஆடவிட்டுக் கூடைப் பந்தாட்ட ரசிகர்களை மகிழ்வித்தது. விளையும் பயிர் வளர்வதில் போட்டியை நடத்திய எஸ் கிளப்பினருக்குள்ள ஆர்வம் தெரிந்தது. எத்தனையோ இளஞ்சிறுர்களை ஊக்கப் படுத்தினால்தானே ஆட்டம் முன்னேற வாய்ப்புண்டு? சின்னஞ் சிறுவர்கள் இக்கித் திணறிப் பந்தைத் தூக்க முடியாமல் தூக்கிக் கூடைக்குள் போட்டது மிகவும் வேடிக்கையாகவும் ரஸமாகவும் இருந்தது.

தென்னிந்திய ரயில்வே ஆட்டக்காரர்கள் அமெரிக்க ஆட்டக்காரர்களை வென்றுவிட்டதால், 'கை'யேறிப்போயிருந்தார்கள். அவர்களுக்கு எதிராக ஆடிய எஸ் கிளப் ஆட்டக்காரர்கள் முதலில் கோட்டை விட்டுவிட்டுப் பின்னால் துரத்தி ஓடினால் பிடிக்க முடியுமா? எப்பொழுதும் நன்றாக ஆடும் வேங்கடராமனும், ராமசாமியும் அன்று சோபிக்கவில்லை. ஆனால் ரயில்வே கோஷ்டியில் கணேச ராஜா எதிர்க் கோஷ்டியினர் முன்னேற விடாமல் தடுத்ததோடு, பந்தைத் தம் கட்சியினருக்கு அழகாகப் போட்டுக் கொடுத்து ஒத்தாசை செய்தார். அந்த ஒத்தாசையை வீணாக்காமல் சந்தானமும், மீனாட்சிசுந்தரமும் சிவசுப்பிரமணியமும் தங்கள் குறியான வீச்சால் எண்ணிக்கைகளை வாரிக் குவித்தனர். வெற்றி தென்னிந்திய ரயில்வே கோஷ்டிக்குக் கிட்டியது; மக்ளேனியாக் கோப்பைஅதற்குக் கிடைத்துவிட்டது.

முதன் முதலாக மாம்பலம் எஸ் கிளப் நிர்வாகிகள் சிம்ஸன் திருஎம்.வி. வேங்கடராமன் தலைமையில் போட்டி நடத்தினார்கள். முதல் போட்டியே மிக வெற்றிகரமாக நடந்தேறிவிட்டது. அடிக்கடி இத்தகையகூடைப் பந்தாட்டப் போட்டிகள் நிகழ்ந்து வந்தால் நாளடைவில் நல்ல ஆட்டக்காரர்கள் கிடைக்க இப்போட்டி முன்னோடியாக அமைந்தது.

# யாரோ ஒருவருக்கு

பழமையும் புதுமையும் கைகோத்துப் பவனி வருவதை நம் பாரதத்தில் அதுவும் சென்னையிலேயேதான் காண முடியும். பம்பாய் எக்ஸ்பிரஸும் பங்களூர் மெயிலும் பகட்டாக, பாங்காக வரும் பாதையில் அவற்றோடு கூடவே தான், அரக்கோணம் பாசஞ்சரும் திருவள்ளூர் லோக்கலும் வருகின்றன!

நூறு வருடங்களுக்கு முன், இந்தியாவில் ரயில் போட்ட புதிதில் கம்பார்ட்மெண்டுகள் எப்படியிருந்தனவோ என்று யாரும் மூளையைக் கலக்கிக் கொண்டு கற்பனைக்கு வேலை கொடுக்க வேண்டிய அவசியமில்லை. ஆவடி லோக்கலில் ஏறி அமர்ந்தால் போதும்.

கதவுகள் வெளிப் பக்கமும் திறக்கும்; உள் பக்கமும் திறக்கும். திறந்த கதவு மூடாது. மூடிய கதவு திறக்காது. ஒண்டுக் குடித்தனங்கள்மிருந்த வீடுகளில் இடத்துக்கு இடம் மூங்கில் தட்டி வைத்து மறைத்திருப்பதுபோல் பெட்டிகளை ரேழிரேழியாகத் தடுத்திருக்கும் அற்புதத்தையும் காணலாம். சில பெட்டிகள் நாம் அந்தக் காலத்தில் படித்த திண்ணைப் பள்ளிகளின் சூழ்நிலையையும் நினைவூட்டலாம், பெஞ்சுகளின் அமைப்புமூலம்.



மற்றொரு ரசமான விஷயம். சென்ற நூற்றாண்டில் மக்கள் எத்தனை நிதானமாகவும் சாவகாசமாகவும் பதற்றப்படாமலும் வாழ்க்கை நடத்தினார்களோ, அத்தனை சாவகாசம், நிதானம், பதற்ற மின்மை, அப்படியே இன்னும் அந்த 'கம்பார்ட்டுமெண்டு'களுக்குத் துணையாக நிற்கின்றன.

மாலை ஏழு பதினைந்துக்குப் புறப்பட வேண்டிய திருவள்ளூர் லோக்கல் ஏழு பதினைந்துக்குத்தான் புறப்பட வேண்டும் என்ற கட்டாயமில்லை. ஏழரைக்குத்தான் வண்டித் தொடரே பிளாட்பாரத்தில் வந்து நிற்கும். எட்டு மணிக்கு ஒரு வயோதிக இஞ்சினும் அதில் வந்து மாட்டிக் கொண்டு நிற்கும். ஆவடி போக வேண்டிய அன்பர் ஒன்பது மணிக்காவது சாப்பாட்டைப் பார்க்கலாம் என்ற எண்ணத்தில் இன்னும் பசியை அடக்க முயலுவார்.

எட்டரைக்கும் வண்டி புறப்படாது. இஞ்சினில் ஏதோ கோளாறும் என்ற செய்தி வரும். ஒரு வழியாக அதற்கே வைத்தியம் செய்தோ, அல்லது மற்றொரு ரிட்டயரான இஞ்சினைக் கொண்டு வந்து இணைத்தோ, ஒன்பது மணிக்கு வண்டி புறப்பட மணியை அடிப்பார்கள். பள்ளிக்குப்போகும் சின்னக் குழந்தையா மணி ஓசை கேட்டவுடன் குதி போட்டுக் கொண்டு கிளம்ப? இஞ்சினின் வயதுக்குத் தகுந்த தோரணை வேண்டாமா? சாவகாசமாக ஒன்பதே காலுக்குத்தான் அது கிளம்பும். அதற்குள் ஆவடி அன்பருக்குப் பசியெல்லாம் அடங்கி உடல் வருத்தம் தெரியாத பரம ஞானியாகி விட்டிருப்பார். பொழுது விடிவதற்குள் வீடு சேர்ந்து விடலாம் என்ற அற்ப நம்பிக்கையும் தோன்றும்.

இந்த நிகழ்ச்சி அனேகமாகத் தினசரி நடப்பதுதான். நாலு லோக்கல் டிரெயின்களில் மூன்றுக்கு ஏற்படுவதும் கூடத்தான்.

புறப்படும் வண்டிகள்தான் இப்படியென்றில்லை; வரும் வண்டிகளும் குறிப்பிட்ட நேரத்தில் வந்து சேர வேண்டும் என்ற கண்டிப்பு ஒன்றும் கிடையாது.

காரியாலயத்தில் இன்ஸ்பெக்ஷன் என்றோ, மேலதிகாரிகளின் விஜயம் என்றோ வழக்கத்துக்கு ஒரு மணி நேரத்துக்கு முன்பே ரயிலைப் பிடித்து அம்பத்தூர் அன்பர் கிளம்பினால், இடைவேளைக்குள் வேண்டுமானால் ஒருவேளை வந்துசேரலாம். வியாசர்பாடிப் பகுதியில் கைகாட்டி இறங்கவில்லை என்ற சாக்கில் ஒரு மகாபாரத காலம் வண்டி நின்று விடும். கஞ்சி போட்டுச் சலவை செய்த ஆடைகள் அணிந்து ஆபீஸ் புறப்பட்ட அன்பர்கள் அந்தக் கஞ்சியெல்லாம் கரைந்து ஓடும் காலம் வரையில் வண்டியில் உட்கார்ந்திருக்க வேண்டியதுதான். ஒரு வேளை இறங்கிய கைகாட்டியாக ஒன்று கொண்டு வந்து அங்கு நட்டு வைத்த பிறகுதான் வண்டி கிளம்புமோ என்ற ஐயப்பாடுகூடச் சில சமயம் தோன்றும்.



"என்னை எந்த அபிப்பிராயமும் கேட்காதீங்க. நான் சங்கீதம் என்றால் விலை என்ன விலை என்று கேட்பேன்."
"அதனால் பாதகமில்லை; பாகவதரும் நிறுத்துத்தான் பாடுகிறார்!"

மழைக்காலத்தில் தெருக்களிலாவது குடையில்லாமல் நடக்கலாம். இந்த லோக்கல் வண்டித் தொடர்களுக்குள் குடையை விரித்துக் கொண்டு தான் உட்காரவோ நிற்கவோ வேண்டும். வெளியே பெய்யும் மழை வண்டிக்கு உள்ளேயும் பெய்யும். ஆனால் ஒரு வித்தியாசம். வெளியே ஸ்படிகம் போன்ற மழைத் தண்ணீர் மேலே விழும். இந்த வண்டி அறைக்குள்ளே வான வில்லின் அத்தனை வர்ணங்களிலும் தண்ணீர் சொட்டும். பெட்டிகளின் மேல் பாகம் அத்தனை புதிசு! அவ்வளவு சுத்தம்!

தாம்பரம் - பீச் மின்சார வண்டிகள் ஓரளவு அரக்கோணம் சென்ட்ரல் லோக்கல்களை விடத் தரத்தில் உயர்ந்தவை என்றுதான் சொல்ல வேண்டும். வேகத்திலும், நேரக் கட்டுப்பாட்டிலும் மேம்பட்டவைதான். ஆனால் வண்டியின் உள்ளே நுழைந்து குறிப்பிட்ட ஸ்டேஷனில் இறங்குவது என்பது துர்லபமான விஷயம்தான்.

கதவு என்ற சாதனம் கிடையாதாகையால், அதற்குப் பதில் மனிதர்களே அந்த இடத்தை அடைத்துக் கொண்டு நிற்க முடிகிறது. அதனால் உள்ளே சிக்கியவர்கள் உள்ளேயே தவிக்க வேண்டியிருக்கிறது. ஒருநாள் சேத்துப்பட்டு ஸ்டேஷனில் எப்படியோ அந்தக் கதவில்லா இடத்து வியூகத்தைப் பிளந்து உள்ளே நுழைந்து விட்ட நான் இறங்க வேண்டிய இடமாகிய எழும்பூர் ஸ்டேஷனில் இறங்க முடியாமல் பீச் ஸ்டேஷனில் போய் இறங்கித் திரும்பி வந்திருக்கிறேன். வழியை அடைத்துக்கொண்டு நிற்போருக்கும், வண்டியில் ஏற முற்றுகை இடுபவர்களுக்கும் இறங்க வேண்டியவர்கள் என்ற ஒரு வர்க்கத்தினர் இருப்பதாக எண்ணமே இருக்காது.

வண்டிகளில் எப்போதும் கூட்டம் பிதுங்கும் காட்சியைப் பொது மக்களுக்கு எடுத்துக் காட்டும் சாமர்த்தியத்துக்கு ரயில் நிர்வாகத்தை எவ்வளவு பாராட்டினாலும் தகும். காலை மாலை ஆபீஸ் நேரங்களில் எட்டுப் பெட்டிகளை ஒரு தொடராக அமைத்தால் நடுப்பகலில் ஒரு பெட்டியோ, இரண்டு பெட்டிகளோ தானே உபயோகத்தில் வருகின்றன!

கொத்தவால் சாவடிக்குத் தினம் எங்கிருந்தோ பல வகை வாகனங்கள் மூலம் கறி காய்கள் வந்து குவிகின்றன. ஏறத்தாழ இந்த ரீதியில் தான் சுற்று வட்டாரங்களிலிருந்து எத்தனையோ நபர்கள் நகரத்திலுள்ள காரியாலயங்களிலும், அலுவலகங்களிலும், வியாபார ஸ்தாபனங்களிலும் சேவை செய்யக் காலை நேரத்தில் வந்து குவிகிறார்கள். அதனால் தானே என்னவோ அவர்களுடைய ரயில் பிரயாணமும் பார வண்டிப் பிரயாணம் ஆகிவிடுகிறது!

காரியாலயங்களுக்குக் கிளம்புபவர்களின் உற்சாகம் இத்தகைய தாமதப் போக்கு வரத்தாலும், நெரிசலாலும் காரியாலயங்களை அடையு முன்பே கரைந்து விடுகின்றன.

அனேகச் சந்தர்ப்பங்களில் மின்சார ரயிலும், திருவள்ளூர் லோக்கலுக்குத் தான் என்ன மட்டமா என்ற நிலையில் நடு வழியில் மக்கர் செய்து விடுகிறது. மின்சாரக் கோளாறோ, தண்டவாளத் தடுமாற்றமோ காரணமாக இருக்கலாம்! அந்த ஒரு வண்டிக்கு அனுதாபம் தெரிவிக்கும் வகையில் பின் வரும் வண்டிகளும் நின்று விடுகின்றன.

சென்னை நகர வாழ்க்கையில், பஸ், டாக்ஸி, ஆட்டோ இவைகளை நம்பியிருக்கிறவர்களை விட, ரயிலை நம்பியிருக்கிறவர்கள்தான் அதிகம்.

"பெட்டி எத்தனை ஓட்டையாக இருந்தாலும் பரவாயில்லை ஸ்வாமி! குறித்த நேரத்துக்கு ஓடினால் போதும்!" என்கிறார் ஒரு பெரம்பூர் அன்பர்.

"இப்போதெல்லாம் வண்டிகள் கடிகாரத்தையும் நம்புவதில்லை! கரியையும் நம்புவதில்லை. காற்றை நம்பி ஓடுகின்றன" என்கிறார் ஒரு வில்லிவாக்கம் பிரயாணி!

ரயில்வே நிர்வாகம் எத்தனையோ முன்னேற்றங்களுக்காகவும் மாறுதல்களுக்காகவும் திட்டங்கள் தீட்டும் வேகத்தில் ஏனோ நகரவாசிகளுக்கான சில முக்கிய வசதிகளை மறந்து விடுகிறது.

யாரோ எழுதியது

அத்தியாயம் பதினான்கு

## இளமைத் துடிப்பின் எதிரொலி

திடீரென்று பெருமாள்சாமி தன்னிடம் முரட்டுத்தனமாக நடந்து கொண்டது கண்டு வியப்பும் வேதனையும் அடைந்தான் முருகையன். எதற்காக அவன் மிகுந்த கோபத்துடன் தன்னை எச்சரிக்க வேண்டுமென்று அவனுக்குப் புரியவில்லை.

'சாந்தாவின் வீட்டிலிருந்து வருவதைப் பார்த்து விட்டு, அதனால் இப்படி ஆத்திரப் படுகிறானா? ஆத்திரத்துக்குக் காரணம் பொறாமைதானா? — பொறாமையென்றால் அந்தப் பொறாமைக்குக் காரணம்? சாந்தாவிடம் அவன் அன்பு கொண்டிருந்து, அந்த அன்புக்குக் குறுக்கே நிற்பதாக நினைத்துக் கொண்டு... ஒரு வேளை அதுதான் காரணமாக இருக்குமோ?'

"பெருமாள்சாமி! நீ கோபப்படும் அளவுக்கு நான் என்ன தவறு செய்து விட்டேன்?" என்று துக்கம் தோய்ந்த குரலில் கேட்டான் முருகையன்.

"என் பெயர் பெருமாள்சாமியில்லை; கன்னையன்!" என்று கத்தினான் அவன்.




"சரி! அப்படியே வைத்துக் கொள். இப்போது என்னை எச்சரிக்க வேண்டிய அவசியம் என்ன வந்து விட்டது?"

"நீ என்ன செய்திருக்கிறாய் என்பது உனக்கே தெரியும். ஒன்றும் தெரியாதவனைப் போல் என்னிடம் நீ உண்மையை மறைக்க முடியாது. —முருகையா! நான் ஒருவன் இங்கே இருக்கிறேன் என்பதை நீ மறந்து விடாதே."

"விவரமாய்ச் சொல், பெருமாள் சாமி!" என்றான் முருகையன்.

பெருமாள்சாமியின் உதடுகள் துடித்தனவே தவிர, அவன் பதில் ஒன்றும் சொல்லவில்லை.

"சொல்லாவிட்டால் விட்டு விடு; நடு வழியில் நின்று நாம் சண்டை போட்டுக் கொள்ள வேண்டாம்" என்று நிதானமாகச் சொல்லி விட்டு, அங்கிருந்து கிளம்பினான் முருகையன்; ஆனால் பெருமாள்சாமி அவனை விடவில்லை. தடுத்து நிறுத்தினான்.

"அதோ பார், நீ மிஷினில் பயிற்சி பெறுவதற்கு உன் பெயரைக் கொடுத்திருப்பது உண்மைதானே?"

இதைக் கேட்டவுடன் முருகையனின் மனத்திலிருந்து ஒரு பாதிச் சுமை இறங்கியது போலிருந்தது. நல்ல வேளையாக வேறெதுவும் சாந்தாவைப் பற்றிக் கேட்காமல் இருந்தானே என்ற வரையில் திருப்தி அடைந்தான்.

"இயந்திரப் பயிற்சிக்கு ஒப்புக் கொண்டது எனக்கொன்றும் தவறாகத் தோன்றவில்லை. அதனால்தான் சம்மதம் தெரிவித்தேன்."

"குறுக்கு வழியில் சீக்கிரம் முன்னேறி விடலாம் என்ற ஆசைபோலிருக்கிறது!"

"பெருமாள்சாமி!" என்று அதட்டினான் முருகையன்.

"வேறென்ன? இயந்திரங்களைக் கொண்டு வந்து நிரப்பி, தொழிலாளர்களுக்குச் சீட்டுக் கொடுத்து வெளியில் அனுப்பப் பார்க்கிறார்கள். இப்பொழுதே நிலைமை படுமோசமாகி விட்டது. இனி இயந்திரங்களும் வந்து விட்டால் கேட்க வேண்டியதில்லை. நீயும் உன்னைப்போன்றவர்களும் சுகமாக இருப்பீர்கள். நாங்கள் வெளியில் விரட்டப் படுவோம்."

"ஒருகாலும் அப்படி நடக்காது... இன்னும் புதியகரங்கள் தோண்டி அதிகமான கரிஎடுக்கப் போகிறார்களாம். அதனால் யாரையும் வேலையிலிருந்து நீக்க மாட்டார்கள். இயந்



திரங்களின் உதவியால் உற்பத்தி பெருகி அதிக லாபம் கிடைக்கும். தொழிலாளர்களும் வசதியோடு வாழ முடியும்.''

பரிகாசமாக நகைத்தான் பெருமாள்சாமி.

''இப்போது அப்படித்தான் சொல்வார்கள். இயந்திரங்களின் ருசியைக் கண்டபிறகு மனித இயந்திரங்களின் உதவி அவர்களுக்குத் தேவைப்படாது. நீயும் அவர்களோடு சேர்ந்துகொண்டு உன் இயந்திரத்தின் கீழ் எங்களைப் போட்டு நசுக்கப் போகிறாய்!—ஏனென்றால் நீயும் ஒரு நிலப்பிரபுவுக்கு மகளாய்ப்

பிறந்தவன் தானே?'' என்று கூறினன் பெருமாள்சாமி.

பெருமாள்சாமியின் கடைசிச் சொற்கள் முருகையனின் மனத்தில் 'சுருக்' கென்று தைத்தன. இயற்கையாகவே எளிதில் உணர்ச்சி வயப்படக்கூடிய பெருமாள்சாமி, இந்த விஷயத்தில் மிகவும் பிடிவாதத்துடன் பேசினன்.

''முருகையா! உன்னை மறுபடியும் எச்சரிக்கை செய்கிறேன். நீ ஆயிரக் கணக்கான பேர்களுக்குத் துரோகம் செய்யத் துணிந்து விட்டாய். ஏற்கனவே வேலையும் கூலியும் இல்லாத கூட்டம் இங்கே நிறைந்திருக்கிறது. இந்த நிலையில் இயந்திரங்களைப் புகுத்துகிறவர்களுக்கு நீ கருவியாகத் துணிந்திருக்கிறாய். நண்பன் என்ற பேச்சுக்கு இனிமேல் இடமில்லை. கவனமாக நடந்துகொள்.''

மேலும் மேலும் பெருமாள்சாமி ஆத்திரத்துடன் பேசிக் கொண்டு போனன். முருகையனுக்கோ நிலைமை மிகவும் தர்ம சங்கடமாகி விட்டது. நிதானத் தெளிவுடன் அவனுக்குத் தனது நிலையை விளக்க விரும்பினன் முருகையன். ஆனல் அவனே எதையும் காதில் போட்டுக்கொள்ள விரும்பவில்லை.

இதற்குள் சாந்தாவே அவளுடைய வீட்டிலிருந்து அவர்கள் நின்ற இடத்துக்கு வந்து விட்டாள். ஆண்கள் இருவரும் பேசிக் கொண்ட முறையிலிருந்து அவர்களுடைய மனவேற்றுமை அவளுக்குப் புரிந்துவிட்டது. குறுக்கிட்டுப் பேச முடியாமல் ஒரு கணம் தவித்து விட்டு, ''இரண்டு பேரும் வீட்டுக்கு வந்து பேசுங்களேன்!'' என்று அழைத்தாள் அவள்.

''நேரமாகி விட்டது; நான் போக வேண்டும்'' என்றான் முருகையன்.

''அவன் போகட்டுமே! எனக்கு உன்னிடம் தனியாகப் பேச வேண்டிய வேலை இருக்கிறது. முக்கியமான விஷயங்கள் பேச வேண்டும். அதற்காக வந்த போதுதான் இவனைச் சந்தித்தேன். வா, நாம் வீட்டுக்குள் போகலாம்!'' என்றான் பெருமாள்சாமி.

சாந்தாவின் முகத்தை அந்தச் சமயத்தில் கூர்ந்து நோக்கினன் முருகையன். அந்த முகத்திலிருந்து எவ்விதமான உணர்ச்சிகளும் வெளிப்படவில்லை. வெகு வேகமாக அங்கிருந்து நடந்தான். சிறிது தூரம் நடந்த பிறகு அவனல் திரும்பிப் பார்க்காமல் இருக்க முடியவில்லை. திரும்பிப் பார்த்த போது பெருமாள்சாமியும் சாந்தாவும் ஒன்ருக அவளுடைய வீட்டுக்குள் நுழைந்து கொண்டிருந்தனர்.

நீண்ட பெருமூச்சு விட்டான் முருகையன்: 'தனியாகச் சாந்தாவுடன் அவன் பேச வேண்டுமென்ருனே! என்னதான் அப்படி முக்கியமான விஷயங்களை அவர்கள் தனித்துப் பேசப் போகிருர்கள்? சாந்தாவை அவனும் உரிமையுடன் அழைக்கிருன்; அவளும் பின்பற்றிச் செல்கிருள்!... ஹூம்!'

வீட்டுக்கு வந்த முருகையன் நெடு நேரம் தனிமையில் கழித்து விட்டு, பிறகு சுந்தரம் அலுவலகத்திலிருந்து திரும்பியவுடன் அவனிடம் பெருமாள்சாமி எழுப்பிய பிரச்னைகளைப் பற்றி விவாதித்தான். இயந்திரங்கள் வருவதால் தங்களுடைய பிழைப்பு பாதிக்கப்படும் என்று தொழிலாளர்கள் பயப்படுவதைக் குறிப்பிட்டான். பெருமாள்சாமியின் பெயரை மட்டும் அவன் வெளியிடவில்லை.

சுந்தரம் மட்டிலும் அந்தத் தொழிலின் எதிர்கால வளர்ச்சியிலும் தொழிலாளர்களின் முன்னேற்றத்திலும்மிகுந்த நம்பிக்கை கொண்டிருந்தான். பல புதிய மாற்றங்கள் வேகமாக நடைபெறக் கூடும் என்று அவன் உற்சாகத்தோடு முருகையனிடம் தெரிவித்தான்.

''இப்போது ஒரு புதிய நிர்வாகத் தலைவர் வந்திருக்கிருர். இங்குள்ள தற்போதைய நிலைமைகளைக் கூர்ந்து கவனித்து வருகிருர். தொழிலாளர்களின் வறுமை, உழைப்பில் உற்சாகமின்மை, அவற்றின் காரணமாக ஏற்பட்டுள்ள விளைவுகள் இவ்வளவும் ஆராயப்பட்டு வருகின்றன.''

''இயந்திரங்கள் கூட அவருடைய ஏற்பாடுதானு?''

''ஆமாம்; இவர் இந்தத் தொழிலை ஒரு புதுக் கண்ணேட்டத்துடன் பார்க்கிருர். இந்த நாட்டைத் தொழில் மயமாக்கி மக்களுடைய வாழ்க்கைத் தரத்தை உயர்த்தும் சக்தி நிலக்கரிக்கு இருக்கிறது. ஆகவே எவ்வளவுக்கு அதிகமாக அதைத் தோண்டி எடுக்க வேண்டுமோ, அவ்வளவும் எடுக்க வேண்டும். அதே சமயம் தொழிலாளர்களுடைய வாழ்க்கையும் கவலையற்றதாக, ஊக்கமும் உற்சாகமும் நிறைந்ததாக இருக்க வேண்டும்.— 'உற்சாகத்தை ஊட்டி உற்பத்தியைப் பெருக்கு!' என்பதுதான் இவருடைய திட்டம். ஊக்கத்துடன் உழைப்பவர்களுக்கு உயர்ந்த ஊதியம் கொடுக்க வேண்டுமென்கிருர் இவர்.''

''அருமையான திட்டம்'' என்றான் முருகையன்.

''ஆனல், நீண்ட நாட்களாகச் சொந்த லாபத்தை மட்டுமே கருதி



தொண்டை
மற்றும் மார்பு
உபாதைகளுக்குக்
குணமளிக்கும்

# பெப்ஸ் வில்லைகளை

**உட்கொண்டால், உங்கள் இருமல் உடனேயே அகலும்**

பெப்ஸ் வில்லை ஒன்றைச் சுவைத்து ஆவி போன்ற அதன் சத்து குணமளிக்க வேலை செய்வதை உணருங்கள். வலியைக் குறைக்கவும், தொண்டைப் புண், பிராங்கைடிஸ், இருமல் மற்றும் ஜலதோஷம் இவைகளுக்குக் காரணமாகிய கிருமிகளை அகற்றவும் உதவியளிக்கிறது. பெப்ஸ் உடனடி நிவாரணம் அளித்து விரைவில் குணமடையச் செய்கிறது.



பிராங்கைடிஸ்,
தொண்டைப்புண்,
மண்டைநீர்,
அடைப்பு,
ஜலதோஷம்
மற்றும்
இருமலுக்கு
உடனேயே
நிவாரண
மளிக்கிறது.

எல்லா மருந்து
வியாபாரிகளிடமும்
கிடைக்கும்.

PPY-34-TAM

**ஸி. இ. புல்போர்ட் (இந்தியா) பிரைவேட் லிட்**

சோல் ஏஜன்டுகள் :
தாதா & கோ., 86, வருனிசாப்ப நாயக் தெரு, சென்னை-3



நீங்கள் எங்கு சென்றாலும்
எளிதில் ரொக்கமாக்கலாம்

## பிளன்பி பிரயாணி செக்குகள்

* பிரயாணத்தின்போது பயமில்லாமல் தொகை எடுத்துச்செல்லும் முறை.
* எமது 425 ஆபீஸ்களிலோ இந்தியா முழுவதிலுமுள்ள ஏராளமான ஏஜன்ஸிகளிலோ எங்கும் எளிதில் ரொக்கமாக்கலாம்.
* பாங்கின் எல்லா முக்கியமான கிளைகளிலும் இந்த செக்குகள் கிடைக்கும்.
* செக்குகள் ரூ. 100, ரூ. 50, ரூ. 25 ஆகிய சௌகரியமான மதிப்புகளில் கிடைக்கும்.

பஞ்சாப் நேஷனல் பாங்க் லிமிடெட்



# ஆராயும் வேளையில்

ஆரோக்கிய வாழ்விற்கு ஆகாரம் சம நிலையில் சத்துப் பொருள்கள் கலந்ததாக இருக்க வேண்டும். சூரியன் மார்க் கோதுமைப் பொருள்கள் முழுக் கோதுமையின் நல்ல தன்மைகள் அனைத்தையும்—புரதச் சத்து, கார்போ ஹைட்ரேட்டுகள், A & B வைட்டமின்கள்—கொண்டவை, சுத்தமானவை, சுகாதாரம் மிக்கவை. கையால் தொடப்படாமல், நியூ மாடிக் முறையில் அரைக்கப்பட்டு, இயந்திரங்களாலேயே மூடைகளாக்கப்படுகின்றன. பிஸ்கோத்துகள், கேக்குகள், பூரிகள் தயாரிக்க சாலச் சிறந்தவை.




## சூரியன் மார்க்

### மைதா, சூஜி, ஆட்டா

*தயாரிப்பாளர்கள்:*

**செஞ்சுரி பிளவர் மில்ஸ் லிட்.**

330, தம்பு செட்டி தெரு, சென்னை-1

போன்: 21043, 21044 & 21045

தந்தி: "MATHOORAN".



EP-CFM-2.TAM.

வந்தவர்களிடம் இந்தப் பரந்த நோக்கமுள்ள திட்டத்தை நிலைநாட்டுவது அவ்வளவு எளிய காரியமல்ல. நிர்வாகத் துறையின் அடிப்படையிலேயே மனமாற்றம் ஏற்பட வேண்டும்'' என்று கூறினான் சுந்தரம்.

''அது மாத்திரமல்ல, தொழிலாளர்களும் இதைப் புரிந்து கொள்ள வேண்டும். நல்ல காரியங்களைக் கூடச் சந்தேகத்துடன் பார்ப்பவர்கள் எல்லா இடங்களிலும் இருக்கத்தான் செய்கிறார்கள்'' என்றான் முருகையன்.

முருகையனுக்குப் பெருமாள்சாமியின் நினைவு வந்தது. 'இந்தப் புதிய மாற்றங்களைத் தலைவர் ஏற்படுத்த வேண்டுமானால் அவர் இரு புறங்களிலும் போராடித் தீர வேண்டும். இந்த இருமுனைப் போராட்டத்தில் பெருமாள்சாமி என்ன செய்யப் போகிறான்? நான் என்ன செய்யப் போகிறேன்?'

## அத்தியாயம் பதினைந்து

# கடமை அறிந்தவன்

சென்னைமா நகரத்து அதிகார வட்டத்தில் செல்வரத்தினத்தின் செல்வாக்கு நாளுக்கு நாள் அதிகமாகப் பெருகிக் கொண்டு வந்தது. அவன் ஒரு சிறு அதிகாரியாக இருந்தாலும் அவனுடைய உழைப்பு, நேர்மை, கலகலப்பான சுபாவம் இவ்வளவும் அவனுடைய வளர்ச்சிக்குத் துணை செய்து வந்தன. பிறந்த இடத்துச் செல்வம் போதாதென்று மனைவியின் பங்குச் சொத்தும் சேர்ந்ததால், தாராளமாகச் செலவு செய்து கொண்டு மகிழ்ச்சியோடு வாழ்க்கை நடத்தினான்.

கால நேரத்தில் கண்டிப்பு, கடமையில் கவனம், அன்பு கலந்த அதிகாரம் இவைகளில் அவன் மேல்நாட்டாரின் பழக்க வழக்கங்களைக் கைக்கொண்டதால் அவனுக்கு வீடும் இன்பகரமாக இருந்தது; வெளி உலகமும் சுறுசுறுப்புடன் விளங்கியது. சித்திராவுக்கு அவன் பல விஷயங்களில் சுதந்திரம் கொடுத்திருந்தான். என்றாலும் தன்னுடைய உத்தியோக விஷயங்களில் மட்டும் அவன் யாரையும் குறுக்கிட விடுவதில்லை.

திறமையும் நேர்மையும் கொண்டவன் என்ற பெயரை அழுத்தமாக நிலைநாட்டி விட்டதால், அவனுடைய மேலதிகாரிகளும் சரி, அவனிடம் வேலை பார்ப்பவர்களும் சரி, அவனிடம் மிகுந்த மதிப்பு வைத்திருந்தார்கள். வெளி வட்டாரத்தில் பழகிய மற்றத் துறையில் உள்ள மிக உயர்ந்த அதிகாரிகள் கூட அவனிடம் தனிப் பரிவு காட்டினார்கள்.

பொது மக்களின் வரிப்பணத்தைச் செலவு செய்யும் அதிகாரம் அவனிடம் இருந்தது. செலவு செய்யும் பணத்தை விட அதிகமான பலன் தெரிந்தால்தான் அவனுக்கு அதில் திருப்தி ஏற்படும். இல்லா விட்டால் குத்தகை எடுப்பவர்களை இலேசில் விட மாட்டான். ''பொதுப் பணம் என்றால் மட்டும் ஏன் இந்த அலட்சியம் உங்களுக்கு? உங்களுக்கென்று சொந்தமாய்க் கட்டடம் கட்டுவதென்றால் மட்டும் இதைவிடக் குறைந்த செலவில் இதைவிட உறுதியாகக் கட்ட முடிகிறதே! பொது வேலை என்றால் அதைவிடச் சிக்கனமாகவும் உறுதியாகவும், அல்லவோ இருக்க வேண்டும்?'' என்று கண்டித்துக் கேட்பான். நடவடிக்கையும் எடுத்துக் கொள்வான்.

பொதுநலப் போர்வைக்குள் திரியும் சுயநலக்காரர்கள் யாராவது அவனிடம் வந்தால், அவர்களுடைய செல்வாக்கும் பொரிகம் அவனிடம் எடுபடுவதில்லை. அவனைப் பொறுத்தவரையில் கூடிய வரையில் அவனுடைய அலுவலகத்தில் 'சிவப்பு நாடாத் தன்மை' என்கிற சோம்பல் விவகாரம் இல்லாமல் பார்த்துக் கொண்டான். கடுமையான உழைப்பு, நியாயமான ஊதியம், கவலையற்ற குடும்பம், ஓய்வு நேர உல்லாசம் — இவையே அவன் அமைத்துக் கொண்ட வாழ்க்கை முறை.

சித்திராவின் மீது அவன் உயிரையே வைத்திருந்தான். என்றாலும் அவனுடைய இன்பம் நிறைந்த இல்லறமும் சில கட்டுத் திட்டங்களுக்கு உட்பட்டுத்தான் இருந்தது. அலுவல்கள் காரணமாக அவன் வெளியூர்களுக்குச் செல்வது மட்டிலும் சித்திராவுக்குப் பிடிக்காது. தானும் உடன் வருவதாகப் பிடிவாதம் பிடிப்பாள். ஆனால் செல்வரத்தினமோ அன்பு நிறைந்த கண்டிப்புடன் அவளுக்குத் தன் பொறுப்புக்களை விளக்கி விட்டுச் செல்வான்.

ஒரே ஒரு காரணத்துக்காக மட்டிலும் கணவனுக்கும் மனைவிக்கும் சிறு சிறு சண்டைகள் ஏற்படுவதுண்டு. செல்வரத்தினமோ உழைத்துக் களைத்த பின், தனது கடமைகளை முடித்துக்கொண்டு ஓய்வு நேரத்தில் உல்லாசத்தையும், களியாட்டங்களையும் விரும்பினான்; சித்திராவோ உல்லாச வாழ்விலும் களியாட்டங்களிலுமே தன் வாழ்வை நடத்திக் களைத்துப் போக விரும்பினாள்;



வாயில் புகையிலே அடக்கியபடியே மானேஜர் 'கிளார்க்'கிடம் ஒரு கடிதம் டிக்டேட் செய்தார்.

"அம்பார்த அம்யா! தம்கள் கமிதம் கிமைத்தமு...' என்று சொல்லி விட்டு 'நாம் சொன்ன பமியே எமுதினீரா? திருப்பிப் படியும்கள்!" என்றார்.

உடனே 'கிளார்க்'கும் வெற்றிலே புகையிலையைப் போட்டுக் கொண்டு அதைப் படித்தார்

"அம்பார்த அம்யா! தம்கள் கமிதம் கிமைத்தமு."

மானேஜர்: "கமைக்ட்! வெமி கமைக்ட்! மேலே எமுதும்கம்!"

செல்வரத்தினம் இந்த அளவுக்கு வாழ்க்கையைச் சிறு பிள்ளை விளையாட்டாக நடத்தி வீணடிக்கத் துணியவில்லை.

வெளியூர்களிலிருந்து திரும்பி வந்த செல்வரத்தினம், ஒருநாள் வீட்டிலுள்ள அலுவல் அறையில் காகிதக் கட்டுக்களைக் கவனித்துக் கொண்டிருந்தான். அப்போது குமரவேல் தம்முடைய காரை அவன் வீட்டு வாசலில் நிறுத்தி விட்டு அவசரம் அவசரமாக உள்ளே வந்தார். அவருடைய முகத்தில் பீதியும் பரபரப்பும் நிறைந்திருந்தன.

"செல்வம்! என்னோட மானம், மரியாதை, கௌரவம், அந்தஸ்து எல்லாமே போயிடும் போலே இருக்கு. எல்லாம் அந்த முருகையன் பயலால் வந்த வினை" என்று பதறினார்.

"பாவம், முருகையன் உங்களுக்கு என்னப்பா கெடுதல் செய்தான்?"

"அவன் கல்யாணம் செய்து கொள்ள இருந்த சித்திராவைத் தடுத்து, நான் தானே உனக்குச் செய்து வைத்தேன்? அந்த ஆத்திரத்தில் என் மேலே பழி தீர்த்துக்கிட்டான். என் பிள்ளைக்கு நான் நன்மை செய்யப் போக அது எனக்கே தீமையாக வந்திருக்கு."

செல்வரத்தினத்திற்கு இந்தச் செய்தி புதுமையாக இருந்தது. முருகையனுக்கும் சித்திராவுக்கும் நடப்பதாக இருந்த திருமணத்தை அவர் தடுத்திருப்பார் என்று அவன் முன்பு நினைக்கவில்லை. இப்போது அதை நம்பினான்.

"நீங்கள் அப்படிச் செய்திருந்தால் நான் அதற்காக வருத்தப் படுகிறேன், அப்பா!" என்றான் செல்வரத்தினம். "ஒருவனுடைய வாழ்வைக் கெடுத்து மற்றவர் வாழ்வது நியாயமில்லை."

எந்தக் காரணத்தைச் சொன்னால் அவனுடைய பரிவைப் பெற முடியுமென்று நினைத்தாரோ, அதுவே அவருக்கெதிராகத் திரும்பியவுடன் அவருடைய நிலைமை தர்மசங்கடமாகியது.

"அப்பா! விஷயத்தை நேரடியாகச் சுருக்கமாய்ச் சொல்லுங்கள். நான் செய்யக் கூடியது எதுவும் இருந்தால் செய்வதற்கு முயற்சி செய்கிறேன்."

முருகையனை வாய்க்கு வந்தபடி திட்டி விட்டு, பெரியபாளையத்துக்கு ஒருநாள் சென்னைக் கடையிலிருந்து தந்தி வந்ததாகவும், வந்து பார்த்த போது அவர் கடையை அதிகாரிகள் சோதனையிட்டு விட்டுப் போனதாகவும் தெரிவித்தார்.

"அவசரமாய்த் தந்தியைக் கண்டு விட்டுப் பட்டணத்துக்கு வந்தேன். நேரடியாய் அதிகாரிகளிடம் போய் நான் ஒரு தப்பும் செய்யவில்லை என்றேன். செய்யா விட்டால் கவலைப்பட வேண்டாம் என்று சொல்லியனுப்பினார்கள். நானும் பேசாமலிருந்து விட்டேன். இப்போ திரும்பவும் என்னை விட மாட்டாங்க போலே இருக்கு.—இதோ பார், கடுதாசி வந்திருக்கு!"

செல்வரத்தினம் கடிதத்தை வாங்கிப் பார்த்து விட்டுத் தலையைக் கீழே குனிந்து கொண்டான். அவனால் அந்த அவமானத்தைத் தாங்க முடியவில்லை.

"கோர்ட்டு, கச்சேரி, விவகாரம்னு நம்மை இழுத்தடிச்சா நம்மோட மதிப்பு என்ன ஆகும்? எனக்கு ஒரு தண்டனை கிடைச்சா அதிலே உனக்கும்தானே பங்கு உண்டு? யாரோ ஒருத்தி எங்கேயோ செத்துப் போய்த் தொலைச்சா அதுக்கு நானா பொறுப்பு?"

"அப்பா! இந்த விஷயத்தில் என்னால் ஒன்றுமே செய்ய முடியாது" என்றான் செல்வரத்தினம்.

"செல்வம்!" என்று திடுக்கிட்டுக் கத்தினார் குமரவேல். "எவ்வளவு பெரிய விஷயம்னு கொஞ்சம் யோசனை செய்து பாரப்பா. இதிலே கையெழுத்துப் போட்டிருக்கிற அதிகாரியை உனக்கு நல்லாத் தெரியும். உன் மேல் அவர் வைச்சிருக்கிற மதிப்புக்கு நீ ஒரே ஒரு வார்த்தை சொன்னால் போதும். உனக்காக அவர் கட்டாயம் விட்டுக் கொடுத்திடுவார்....."

"அப்பா! இது அவர் வீட்டுச் சொந்த விஷயமுமில்லை. என் வீட்டு விஷயமுமில்லை. என்னிடம் அவர் மதிப்பு





---






PANDYAN
INSURANCE COMPANY
LIMITED

# இலவசம்

## கவர்ச்சி மிகுந்த ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பாத்திரங்கள்

தேவைக்கு ஏற்பத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். மன மகிழ்வு பெறலாம்.





ஓ. கே. தயாரிப்புகளின் பரிசுக் கூப்பன்களைச் சேகரியுங்கள்.








★ ஓ. கே. வனஸ்பதி ★ ஓ. கே. டபிள் ரிபைண்ட் ஆயில் ★ கோல்டன் ஸாலட் ஆயில் ★ ஓ. கே. சந்தன சோப் ★ ஓ. கே. ஓரியண்டல் ரோஸ் சோப் ★ ஓ. கே. கிரீம் சோப் ★ மியோகே சோப் ★ சோப் சிப்ஸ்

நீங்கள் வாங்கும் ஒவ்வொரு ஓ. கே. தயாரிப்புகளிலும் உள்ள பரிசுக் கூப்பன்களைச் சேகரியுங்கள். அவற்றிற்குப் பதிலாக, உங்கள் அருகிலுள்ள ஓ. கே. வியாபாரியிடமிருந்து, நீங்கள் விரும்பும் அளவிலும், வடிவிலும் கவர்ச்சி மிகுந்த ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பாத்திரங்களைப் பெறுங்கள்.

இந்த விசேஷமான பரிசுத் திட்டம் பற்றிய இதர விவரங்களை அறிய உங்கள் ஓ. கே. வியாபாரியிடமிருந்து, படங்களோடு கூடிய 'போல்டரை' (folder) வாங்கிப் பாருங்கள்.





EP-EAC-3-TAM

*தயாரிப்பாளர்கள் :*

**தி ஈஸ்ட் ஏஷியாடிக் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிமிடெட், மதராஸ்-1**

வைத்திருந்தால், இந்த மாதிரி வேலைகளில் நான் தலையிட மாட்டேன் என்பதால்தான் வைத்திருக்கிறார்.''

''செல்வரத்தினம்...!''

''என்னை மன்னித்துக் கொள்ளுங்களப்பா. என்னால் முடியாது.''

''நாளைக்கு என்னோட பேர் கெட்டுப் போனால் அதிலே உனக்குப் பங்கு இல்லையா? இன்னாரோட மகன்கிற பேர் தானே உனக்கு வரும்?''

செல்வரத்தினம் அவமானத்தால் குன்றிப் போய்க் கண் கலங்கினான். பல பெரிய இடங்களில் அடிக்கடி பழகும் வாய்ப்புக்கள் உள்ளவன். அலுவலகத்திலும் வெளியிலும் பலருடைய அன்புக்கும் மரியாதைக்கும் பாத்திரமானவன். அவனுடைய தகப்பனாரைப் பற்றி ஒரு கெட்ட பெயர் வெளியில் வந்து விட்டால்....?

செல்வரத்தினத்தின் குரல் தழுதழுத்தது. ''உங்களுக்கு வரும் கெட்ட பெயரில் எனக்கும் பங்கு கிடைக்கத்தான் செய்யும். அதற்காக நான் மிகவும் கவலைப்படுகிறேன். அந்த நினைவே எனக்கு வெறுப்பைத் தருகிறது. ஆனாலும், உங்களுக்கு இந்த விஷயத்தில் நான் உதவி செய்ய முடியாது!''

குமரவேல் தாம் தந்தை என்பதையும் மறந்து விட்டு மகனிடம் கெஞ்சினார்; மன்றாடினார்; கோபமாய்ப் பேசிப் பார்த்தார். செல்வரத்தினத்தின் மனம் இளகவில்லை.

'''இந்த நாடு ஒவ்வொருவனும் தன் கடமையைச் செய்ய வேண்டுமென்று எதிர்பார்க்கிறது' என்று ஒரு வெள்ளைக்காரர் தம்முடைய நாட்டைப் பற்றிச் சொன்னார். அந்த வார்த்தையை என் உத்தியோகத்தில் நான் கடைசிவரையில் கடைப்பிடிப்பதாக முடிவு செய்து விட்டேன். நீங்களும் உங்களைப் போன்றவர்களும், நானும் என்னைப் போன்றவர்களும் நம் கடமைகளைச் சரிவரச் செய்வோமானால் எல்லோரும் கவலையின்றி இங்கே வாழலாம். குற்றம் செய்தவர்கள் தண்டனை அடையத்தான் வேண்டும். இல்லாவிடில் குற்றவாளிகளின் கூட்டம் பெருகி நாட்டில் நல்லவர்களை வாழ விட மாட்டார்கள்.''

தந்தையும் மகனும் பேசிக் கொண்டிருந்த போது, சித்திராவின் தமையன் மாணிக்கம் அங்கு வந்ததையோ, அவரும் சித்திராவும் உள்ளே பேசிக் கொண்டிருந்ததையோ செல்வரத்தினம் கவனிக்கவில்லை.

திடீரென்று மாணிக்கமும் சித்திராவும் அங்கே நுழைந்தார்கள்.

''உங்களையும் உங்கள் அப்பாவையும் மட்டும் பொறுத்த காரியமில்லை இது.



'' நான் வாழ்க்கையில் ரொம்ப அடிபட்டவன் ஸார் !''
'' தெரியறது !''
'' எப்படித் தெரிஞ்சுகிட்டீங்க ?''
'' உங்கள் உடம்பில் இருக்கும் தழும்புகளைப் பார்த்து !''

என் அண்ணாவும் இதில் சம்பந்தப்பட்டிருக்கிறார். உங்களுடைய கௌரவத்துக்காகவும், என் மாமனார் அண்ணா இவர்களுடைய மதிப்புக்காகவும் நீங்கள் ஒரு வார்த்தை சொல்லத்தான் வேண்டும்'' என்றாள் சித்திரா.

சித்திராவைச் சுட்டெரித்து விடுவது போல் விழித்துப் பார்த்தான் செல்வரத்தினம். இதற்கு முன்பு ஒரு போதும் அவனுடைய விழிகளில் இவ்வளவு கடுமை இருந்ததில்லை.

''உங்களுக்குப் பிரியமில்லாவிட்டால் நான் அவர் மனைவியிடம் சொல்லிப் பார்க்கிறேன். நான் தனியாக அந்த அம்மாளைப் போய்ச் சந்திக்கிறேன்'' என்றாள் சித்திரா.

செல்வரத்தினம் இதற்குப் பதிலளிக்கவே இல்லை.

அந்த மௌனத்தைச் சித்திராவால் பொறுக்க முடியவில்லை.

''என்ன சொல்கிறீர்கள்? நான் போய் வரட்டுமா?'' என்றாள்.

திறந்த கதவைச் சுட்டிக் காட்டினான் செல்வரத்தினம். '' தாராளமாய் நீ போகலாம். ஆனால் திரும்பவும் இந்த வீட்டுக்கு வருவதற்கு என்னுடைய அநுமதியை நீ பெற வேண்டும்!''

நடுநடுங்கினாள் சித்திரா. அவனுடைய சொற்களின் பொருளை அவளாக உடனே புரிந்து கொள்ள முடிந்தது. அவள் வீட்டுக்குள் ஓடி வந்து விழுந்து விம்மினாள். திறந்த கதவின் வழியாக அவனுடைய தகப்பனாரும் மைத்துனரும் வெளியேறினார்கள்.

அவன் தன் கண்களைத் துடைத்துக் கொண்டான். (தொடரும்)



# யாருக்காக

ஓடிக் களைத்த நெட்டுயிர்ப்பைச் சிதறடிப்பது போல் ஒரு குலுக்கலுடன் நின்றது பஸ். ஏற்கெனவே இறங்குவதற்குத் தயாராகச் சாமான்களை ஒழுங்குபடுத்திக் கொண்டிருந்த பிரயாணிகள் போட்டி போட்டுக் கொண்டு இறங்கலாயினர். முன்னே சென்றவரைக் கூடையினால் இடித்துத் தள்ளிக் கொண்டு இறங்கிய ஒரு பட்டிக்காட்டான் தன் முரட்டுச் செருப்புக்களால் ஸ்வர்ணத்தின் பாதங்களை நசுக்கியபடி இறங்கினான். அவன் அப்படி மிதித்திருக்காவிடில் அவனது அகப் புலம்பலுக்கு உருவே ஏற்பட்டிராதோ? பிரக்ஞை மீண்டிராதோ?

“என்ன டீச்சரம்மா! இறங்க வேண்டிய இடத்தை மறந்து உட்கார்ந்திருக்கிறீர்களே! நேரே ஷெட்டிலே கொண்டு இறக்க வேண்டியதுதானு?” என்று சிரித்தபடியே கேட்டான் கண்டக்டர். சென்ற இரண்டு வருடங்களாக மாதந்தோறும் டிக்கட் வழங்கிப் பழகிப்போன உரிமையும் சலுகையும் அவன் விசாரணையில் ஒலித்தன.

ஸ்வர்ணம் இரு பைகளையும் சுமந்தபடி கீழே இறங்கினாள். ஊரானிக் காற்று 'ஜில்' லென்று காதை ஊடுருவிச் சென்றது. மழை வருவதற்கு அறிகுறியாக ஒன்றிரண்டு நீர்த் துளிகள் பொட்டென்று மேலே விழுந்தன.

மேட்டுத் தெருத் திருப்பத்தில் வழக்கம் போல் கயிற்றுக் கட்டிலை வாசலில் போட்டுக் கொண்டு காலை நீட்டிப் படுத்திருந்தான் ஒரு கிழவன். கிழவி கலுவத்தில் வெற்றிலைக் கலவையைப் போட்டு இடித்துக் கொண்டிருந்தாள்.

“வாத்தியாரம்மாவா வரது? இப்போத்தான் வரியா? ஐயாவுக்கு எப்படி இருக்கு?”

“அவரைப் பார்க்கத்தான் வந்து கொண்டிருக்கிறேன், தாயி!” ஸ்வர்ணத்தின் விழிகள் இருட்டைத் துழாவின.

''போ....தாயே....போ...நீயும் நடையா நடந்து இரண்டு வருஷங்களாகத்தான் கரைஞ்சு போறே. ஆண்டவன் பார்த்து இந்தப் பூட்டுக்கு அவரைப் பிழைக்கச் செய்ய வேணும்!'' கிழவியின் ஆசிகள், கனவத்தின் ஒலிக்குரலில் ஒடுங்கி விட்டன.

ஸ்வர்ணம் வேகமாக நடந்தாள். அவள் போக வேண்டிய காலனி ஊருக்கு வெளியே சிறிது தூரம் தள்ளியிருந்தது. காம்பவுண்டுக் கதவின் மீது பெரிய பூட்டொன்று தொங்கியது. ஆள் நிழல் தட்டவும் தோட்டக்காரன் ஓடி வந்தான். ''யாரது?''

''நான்தான்.'' ஸ்வர்ணத்தின் பதில் குளிரால் தடைப்பட்டது.

''அதுதானே? இந்த நேரத்திலே வேறு யாராக இருக்க முடியுமினு பார்த்தேன்.'' கிரீச்சென்ற அலறலுடன் கதவுகள் நகர்ந்தன. வராந்தா வழியே செல்லத் திரும்பினாள். நடையில் கட்சிக்காரர்கள் சூழ, ராகவன் உட்கார்ந்திருந்தான். பெரிய சட்டப் புத்தகங்கள் முகத்தை மறைத்தன. ஸ்வர்ணத்தின் மெலிந்த உருவைக் கண்டதும் முழு முகமும் புத்தகங்களின் பின்னே மறைந்துவிட்டது.

அவர்களைக் கடந்து செல்லத் தயங்கியவாறு தோட்டத்தைச் சுற்றிச் சென்றாள் ஸ்வர்ணம். மாடி ஜன்னல் வழியே நீலக் குழல் விளக்கின் ஒளி கொசு வலையை ஊடுருவிக் கொண்டு,




தோட்டத்து ஒற்றையடிப் பாதையில் நீண்டு படுத்து கிடந்தது. கீழ் வாசற் கதவைத் தட்டினாள். சமையற்கார அம்மாவின் பூத நிழல் கதவின் பின்னே ஆடி அசைந்தது. ''நீங்கள் தானா?'' ஸ்வர்ணத்தின் உணர்வுக்குள் 'விருக்' கென்று ஏதோ பாய்ந்தது.

அடக்க முடியாத ஆதங்கம் உடைத்துவர, ''அவர் உடம்பு எப்படியிருக்கிறது?'' என்று தவிப்போடு வினவினாள் ஸ்வர்ணம்.

கதவின் பின்னேயிருந்து பதில் உடனே வரவில்லை.

''நீங்கள்தான் நேரிலே வந்தாச்சே. போய்ப் பாருங்கள்.'' அம்மாள் உள்ளே போய் விட்டாள். கண்கள் வரையில் முட்டி எழுந்த நெகிழ்வை இமைகளுக்குள் தேக்கிக் கொண்டாள் ஸ்வர்ணம்.

மெல்லிய விளக்கொளியில் கட்டில் மீது படுத்திருந்த கணவரின் முழு உருவமும் தெளிவாகப் புலப்படவில்லை. தூரத்தி வரும் சுவாசங்களின் அதிர்ச்சியில், கழுத்து கோணி ஒரு பக்கம் சாய்ந்து கிடந்தது. நெற்றியிலிருந்தும் ஏதோ நழுவிப் புலன்களைத் தழுவியதைப் போன்ற சிலிர்ப்பு உடலெங்கும் பொடித்து வந்தது. அந்த இருண்ட நினைவுகளிலிருந்தும் தன்னை மீட்டுக் கொள்ள ஸ்வர்ணம் மின்விசையை அமுக்கி அறையெங்கும் ஒளியைப் பாயச் செய்தாள். ஒளி பாய்ந்த முதல் விநாடி அவள் பார்வை அவரது பாதங்களைச் சரணடைந்தது. திடீர் வெளிச்சத்தால் கட்புலன் கூசிக்

குறுகிய அசைவுகள் நெற்றியில் சுருக்கமிட்டன. ஸ்வர்ணம் அருகே சென்று பூட்டிக் கிடந்த இரு கைகளையும் பிரித்து விட்டாள். அந்த ஸ்பரிசத்தில் தண்மையிலேயே ஜீவ வேர்கள் உயிர்த்து விட்ட துடிப்பு இமைகளைச் சாட, அவர் கண்களைத் திறந்து அவளை நோக்கினார். "ஸ்வர்ணமா? எப்பொழுது வந்தாய்?" என்று ஈனஸ்வரத்தில் கேட்டார்.

"இப்பொழுதுதான் உள்ளே நுழைந்தேன்." தலையணைகளும், மடிப்புக்களிடையே கசங்கிச் சுருங்கிய விரிப்புக்களும், கடமையிலே முடமாகிக் கிடக்கும் அவள் ஸ்தானத்தைப் பரிகசிப்பன போலத் தாறுமாறாகக் கிடந்தன.

"சாயங்காலத்திலிருந்தே உன்னை எதிர்பார்த்தேன்."

"இன்று முதல் தேதியில்லையா? சம்பளம் வாங்கிக் கொண்டு பஸ் ஸ்டாண்டை அடைவதற்குள் பஸ் போய் விட்டது. கடைசிப் பஸ்ஸைப் பிடித்து வந்தேன். அது சரி! உங்கள் உடம்பு எப்படி இருக்கிறது?"

நோயின் வெம்மை அவர் முகத்தைக் குங்குமமாக்கியிருந்தது. அவர் பார்வை கண நேரம் அவள் நெற்றியின் மீது நிலைத்தது. "ஸ்வர்ணம்! நெற்றியிலே நீ சூடியுள்ள அந்தச் செந்தீக் கொழுந்துதான் இந்தப் பஞ்ச பூதக் கூட்டுக்குள் என்னுடைய உயிரைப் பூட்டி வைத்திருக்கிறது" என்றார்.

பையிலிருந்து ஆரஞ்சுப் பழங்களை எடுத்துச் சாறு பிழிந்தாள். ரஸத்தைக் கண்ணாடி தம்ளரில் ஊற்றி மெல்ல அவர் வாயில் ஊற்றினாள்.

காலையிலிருந்து வீட்டு வேலைகளும், பள்ளி வேலைகளும், தொடர்ந்து நீண்ட தூரப் பிரயாணக் களைப்பும் சேர்ந்து கொண்டு உடம்பைக் குலுக்கின. பார்வையில் முன்பு பஞ்சு படர்ந்தது. பசியும், களைப்பும் நரம்பைக் கண்டியிழுக்கக் கை தடுமாறிப் பழரஸம் அவர் தலையணையை நனைத்தது.

"சாப்பிட்டாயா ஸ்வர்ணம்?"

சமையற் கதவு இழுத்துத் தாளிடப்படும் பேரொலி அவள் பசியை உள்ளடக்கிவிட்டது. "நான் பஸ்ஸிலிருந்து இறங்கியவுடன் சாப்பிட்டு விட்டுத்தான் வந்தேன்" என்றாள் வறண்ட புன்னகையுடன்.

கூடத்தில் மெட்டிகளின் ஒலி மருமகளின் வரவைக் கட்டியங் கூறியது. ஸ்வர்ணம் அறையிலிருந்து வெளியே வந்தாள். குளிர்ந்து டவராவில் பால் கரைத்துக் கொண்டிருந்தாள் மைதிலி. புரண்டழும் பிடிவாதக்காரச் சிறுமி போல் அவளது கருங்குழற் கற்றைகள் பின்னலிலின்று பிரிந்து கன்னத்திலும் நெற்றியிலும் புரண்டு கிடந்தன.

ஸ்வர்ணம் அவளை நெருங்கி விசாரித்தாள். "சௌக்கியமா, மைதிலி?"

நீண்ட நாசியின் மீது ஒற்றைக்கல் வைரம் கொட்ட நிமிர்ந்தாள் மைதிலி. "சௌக்கியத்துக்கு என்ன? குடும்பம், புருஷன் என்று கடமைகளை உதறி விட்டுப் படியிறங்கி விட்டால் உடம்பு வாடாமல் இருக்கலாம்!" என்றாள் வெற்றுத் தொனியில்.

கொட்டும் மழையிலே இறங்கியபின் இடி, மின்னலுக்குப் பயப்பட்டால் கட்டுமா? மைதிலியின் இடித்துரைத்தலைப் பாராட்டாமல், "பெரியவர் உடம்பு பற்றி டாக்டர் என்ன சொல்கிறார்?" என்று கேட்டாள். இக்கேள்விக்குரிய பதிலைத் தேடி அவ்வீட்டுக்கு அவள் தினம் நடந்தாள். ஆனால் நேரிடையான பதில் இன்றுவரை கிடைத்ததேயில்லை.

"யாரால்தான் சொல்ல முடியும்? வயதான தேகம்." மைதிலியின் மெட்டி ஒலி மாடிப் படிகளில் தேய்ந்து ஒலித்தது.

வரவேற்பிலிருந்த வெம்மையின் காரணமாக, நா வறண்டது; சோர்வு கண்களைக் கட்டியது. எதிரேயிருந்த பானையிலிருந்து குளிர்ந்த நீரை எடுத்துப் பருகி விட்டு உள்ளே வந்தாள். விளக்கை அணைத்து விட்டுக் கட்டிலருகே உட்கார்ந்தாள். கூடத்துக் கடிகாரத்தின் ஒலியுடன் இதய வேதனையும் இழைந்து ஒலி கூட்டியது. இருட்டின் சூழலில் வாழ வந்த நினைவுகளை அசை போட்டது அவள் மனம். இறுதி மூச்சிலே கூட இப்படியொரு புறக்கணிக்கும் உதாசீனத்தைத் தண்டனையாக அடைய அந்த முதிய நெஞ்சம் என்ன தவறு செய்தது? முதல் மனைவியைப் பறிகொடுத்த அவர் இரண்டாம் முறையாக முடிச்சுக்கவிட்ட தவறுதான் இப்படிப் பெரியதொரு கைப்புணர்வாக வளர்ந்து விட்டதோ? அதென்ன, அப்படிப் பெரியதொரு தவறு? எல்லோரையும் போலக் கணவன் அருகேயிருந்து கடமையாற்றும் மனைவியாக ஒவ்வொரு விநாடியையும் செலவழிக்க அவளது இயந்திர வாழ்க்கையில் இடமும் வசதியும் அமைந்திருக்குமானால் இந்த நரகச் சூழ்நிலையில் அவரை விட்டு வைத்திருப்பாளா?

அவரோடு வாழ்ந்து முடித்த பத்தொன்பது வருடங்களில் ஆரம்பத்திலிருந்து முடிவு வரை ஒரு மாற்றமும் இல்லை. வீட்டிலும், வெளியிலும் உழைத்து ஊதியத்தை அவர் கைகளில் அளிக்கும்போது அவர் உதிர்க்கும் ஆதரவான புன்னகையில் அயர்ச்சியைக் கரைத்தபடி வருடங்களை ஓட்டி விட்டாள்.

ஒரே நிமிஷத்தில் கலையாதிய தென்பையும் பறித்துக் கொண்டு விட்டது இறுதி யாத்திரை! கடைசி மூச்சை மகனின் மடியில் விட வேண்டும் என்ற தவிப்போடு அவர் தம் வீடு தேடி வந்தார். அங்கு தனக்குக் கிடைக்கும் எந்த அலட்சியப் பாவனைகளையும் அவள் பாராட்டத் தயாராக இல்லை. அவர் ஆசை நிராசையாகாமல் நிறைவேறினால் போதும் என்றே எண்ணினாள்.

நீராடிய மஞ்சளின் மினுமினுப்பை அழுந்தத் துடைத்தபடி ஸ்வர்ணம் குளிக்கும் அறையிலிருந்து வெளியே வந்த போது, ராகவன் குழாயடியில் பல் விளக்கிக் கொண்டிருந்தான். ஸ்வர்ணம் தயங்கியவாறு அருகே சென்றாள்.

"ராகவா! அப்பாவின் உடம்பு பற்றி.... ஒரு வார்த்தை...." குழாயிலிருந்து சிதறிய தண்ணீரின் ஒலி மனத்துக்குள் சலசலப்பை எழுப்பியது.

"நின்று பேச நேரம் இல்லை. வந்து பேசிக் கொள்கிறேன்." நடை தோட்டத்துப் பக்கம் திரும்பி விட்டது.

அதன்பின் தோட்டக்காரனிடம் பூக்களையும், காய்கறிகளையும் பறிக்கச் சொல்லிக் கொண்டிருந்த மகனைச் சில நிமிடங்கள் வரை ஜன்னல் வழியே நோக்கினாள். அவன் செல்லமாக வீசியெறிந்த பாலினை ஓடிச் சென்று எசமானனிடம் சேர்த்த பெருமிதத்தோடு அவனைச் சுற்றி வந்து விளையாடிக் கொண்டிருந்தது டைகர். அந்த நாலு கால் பிராணிக்குக் கிடைக்கும் அற்ப நேரமும், சலுகையும் கூட அவளுக்கு அந்தக் குடும்பத்தினரிடமிருந்து கிடைக்கப் போவதில்லை. மன விளிம்பு வரை ஆடிக் கொப்புளித்த எழுச்சிகளை அசைவின்றி அணை கட்டி வைத்தாள்.

"பளிச்சென்று கொடியிலும், இடுப்பிலும் பட்டுப் புடவையைப் பார்த்தாயா, மைதிலி?" சமையற்கார அம்மாளின் கிசுகிசுப்பைத் தொடர்ந்து கையில் இருந்த செம்பை ஆங்காரத்துடன் கீழே வைத்தாள் மைதிலி.

"அவளுக்கென்ன மாமி? கை நிறையச் சம்பாதித்து வேளைக்கொன்றாகக் கட்டிக் கிழிக்கிறாள். புருஷன் மலையாகக் கிடக்கிறான் என்ற கவலையையே காணோமே. புருஷனைத்தான் வேலையைச் சாக்காகச் சொல்லி நம் தலையில் கட்டியாகி விட்டது. சபாவுக்கும் நாடகத்துக்கும் ஜாலியாகச் சுற்றிக் கொண்டிருக்கிறாள். உடம்பிலே கவலையின் நிழல்கூடப் பட்டால்தானே....?" ஆக்கிரம் குமுறிக் கண்டத்தை அடைத்தது.

"ஒரு வீட்டைப் பார்த்து அழைத்துப் போகச் சொல்லுங்கள். கட்டின கடனுக்கு இதுகூடச் செய்ய வேண்டாமா?" தோட்டத்தில் வாழை இலைகளை அரிந்தபடி சமையற்கார அம்மாள் கூறினாள். அரிந்த அதிர்ச்சியில் நடுங்கிய வாழைக் குருத்தென ஸ்வர்ணத்தின்



பாடகர்: நான் ரேடியோவில் பாடும்படி நேற்றுத்தான் எனக்குக் கடிதாசு வந்தது. உங்களுக்குத் தெரியுமோ?

அவர்: நான் நேற்றுத்தான் ரேடியோவையே விற்றுவிட்டேன். அது தெரியுமோ உங்களுக்கு?

மனமும் அவளது சொற்களின் கூர்மைக்குள் சிக்கி நடுங்கியது.

பகல் ஒரு மணிக்கு மேல் முதியவருக்கு ஜுரம் அதிகமாகி யிருந்தது. மாலை பஸ்ஸுக்கு அவள் புறப்பட்டாக வேண்டும். மருமகளை நெருங்கி, "ஜுரம் அதிகமாகி யிருக்கிறதே! டாக்டர் எப்பொழுது வருவார்?" என்று வினவினாள்.

மைதிலியின் முகம் சுருங்கியது. "நேற்று வரையில் நன்றாகத்தான் இருந்தார். கட்டுப்பாடின்றி நீங்கள் பழத்தையும், பிஸ்கட்டையும் கொடுத்ததால் அவருக்குத் திருப்பிக் கொண்டு விட்டது" என்றாள்.

ஸ்வர்ணம் பதிலுரைக்காமல் உள்ளே சென்றாள். இனி இந்தப் பணிகூடத் துண்டிக்கப்பட்டு விடலாமோ என்ற துயரம் அவள் நெஞ்சை அடைத்தது. நோயாளிக் கணவரின் முகத்தை ஆழ்ந்து நோக்கினாள். கூடத்துக் கடிகாரம் நாலடிக்கவும் அவள் புறப்படத் தயாரானாள்.

களைத்துக் கொண்டு ராகவன் உள்ளே நுழைந்தான். கடைசி நிமிடத்திலாவது அவளிடம் இரு வார்த்தைகள் பேச அவனுக்கு நேரம் கிடைத்ததே!

"தோட்டனூர்த்து நிலம் விற்றது பற்றி ஒரு முக்கியமான விஷயம்."

புறப் பார்வையின் முன்பு திரை விழுந்தாற் போல் அசையாது நின்றாள் ஸ்வர்ணம். மகனை ஆராய்வது போல நோக்கினார் தந்தை. வெம்மை படர்ந்த முகத்தில் அந்தரங்க உணர்ச்சிகள் நிழலாடினவோ? பழுத்த சருகு உதிர ஒரு சிறு அசைவு போதாதா?

"அதை விற்றுப் பாங்கியில் போட்டிருக்கும் தொகையை என் பெயருக்கு மாற்றிக் கொடுத்து விட்டால் நல்லது." ஸ்வர்ணத்தின் பாதாதி கேசம் வரை அனல் பொரிந்தது.

"ராகவா! இருபது வருடங்கள் அவள் உழைத்து உயர்த்திய குடும்பம் என்பதை மறந்து போகிறாயா?"

கிழவருக்குச் சொர்ணத்தின் தியாகம் நினைவு வந்தது. மாற்றாந்தாய்க் குழந்தையாக வளர்க்காமல் தன் சொந்தக் குழந்தையாக ராகவனை அவள் வளர்த்தாள். தனக்கென்று தனியாகக் குழந்தை பிறக்கக் கூடாது என்று அவள் வேண்டாத தெய்வம் இல்லை. அப்படி அவள் தன் மகனாக நினைத்து வளர்த்த

தமது மகனு இப்படிப் பேசுகிறான்' இறைவரின் நெஞ்சில் முள் நெருடியது.

"உங்கள் கையாலாகாத்தனத்துக்கு மற்றவர்கள் எப்படிப் பொறுப்பாக முடியும்? என் அம்மாவின் நகைகளை விற்று வாங்கிய நிலந்தான் கை மாறி விட்டது. தோட்டமாவது எனக்குச் சேரலாம் அல்லவா?" அவன் சாடி எழுந்து சென்ற அதிர்ச்சியில் ஆசனம் இரீச் சென்று அலறியது.

நிலவுகள் கொத்தாக உதிரப் பிரக்ஞை நழுவியது முதியவருக்கு. ஸ்வர்ணத்தின் கண்களிலிருந்து உணர்ச்சி இதழ்களாகச் சிதறின.

சற்றும் எதிர்பாராத நிலையில் ஸ்வர்ணம் திடீரென்று ராகவனின் அறைக்குள் நுழைந்தாள். நெருப்புத் துண்டங்களை உதறுவது போல் பையில் இருந்த பத்திரங்களை எடுத்து மேஜை மீது வைத்தாள். "ராகவா! இனி இது போன்ற பிரச்னைகளை நீ நேரில் என்னிடமே பேசித் தீர்த்துக் கொள்ளலாம். துர்ப்பல நிலையில் இருக்கும் அவர் எதிரே இத்தகைய அதிர்ச்சி தரும் விஷயங்களைப் பேசுவது இதுவே கடைசி முறையாக இருக்கட்டும். உன்னிடம் தந்தை என்ற பற்றுடனும் என்னிடம் கணவன் என்ற கடமையுடனும் பழகிய அவரது அமைதியைப் பறிப்பது நல்ல செயல் அல்ல." வார்த்தைகளை உதிர்த்த வேகத்திலேயே படியிறங்கி விட்டாள்.

பணமும் காசுமா அவளுக்குப் பெரிதாகத் தோன்றியது? தன் கணவன் மனம்கோணாமல் நிம்மதியாக வாழ வேண்டும் என்ற தன் எண்ணம் தன் பிற்காலத்தையும் எண்ணிப் பாராமல் அவளைத் தியாகத்துக்குத் தூண்டியது.

"இந்த மாதக் கடைசிக்குள் அவரை அழைத்துப் போக ஏற்பாடு செய்யுங்கள்." மைதிலியின் கீச்சிடும் குரல், பழுதடைந்த இயந்திரத்தின் ஓசை போல், சிந்தனையின் ஒவ்வொரு மூலையிலிருந்தும் ஒலிக்க ஸ்வர்ணம் பஸ் ஸ்டாண்டை நோக்கி நடந்தாள். சந்தைப் பேட்டைத் திருப்பத்திலே நடை தேங்கி விட்டது.

இடம் அருகே அவள் கால்கள் தாமாகவே நின்று விட்டன. இந்தக் காலி மனையை எத்தனை ஆசையோடு அவர் அவளுக்கு வாங்கி வைத்தார்? அதிலே சின்னஞ் சிறு வீடு கட்டி வாழ வேண்டுமென்ற ஆசையை வளர்த்த அந்த மனிதத் தெய்வத்துக்கு இன்று இறுதி நிழல் இல்லை! நெடுமூச்சொன்று நெஞ்சைக் கிழித்துக் கொண்டு வர அருகே பின்னிப் பிணைந்து ஓங்கித் தழைத்திருந்த வேப்பமரத்து வேரின் மீது களைப்போடு சாய்ந்தாள்.

ஜில்லென்று காற்றின் தண்மை நெஞ்சுக்குள் புகுந்து வருடியது. புலன்களின் ஆசைகளைக் குழைத்தெடுத்து எண்ணக் கோட்டை எழுந்தது. "மூன்று மாதங்களில் ஓர் ஓட்டு வீட்டை எழுப்பியாவது அவரைக் குடியேறச்செய்வேன். இன்னும் ஆறு மாதம் கடவுள் அவருக்கு உயிர்ப் பிச்சை கொடுக்கக் கூடாதா?" ஸ்வர்ணம் எழுந்த வேகத்தில் நெருஞ்சிக்கொத்துகள் பாதத்தில் பாய்ந்தன.

"நமஸ்காரம் அம்மா!"

"நமஸ்காரம். நீங்கள் யார் தெரியவில்லையே?" என்றாள் ஸ்வர்ணம்.

"காலி மனை விஷயமாக உங்களைக் கேட்டுப் போகலாமென்று வந்தோம்."

"என்ன வேண்டும் உங்களுக்கு?"

"ஊரில் ஆஸ்திகர்களின் அன்பளிப்பாக ஒரு நிதி திரட்டிப் பஜனை மடம் கட்ட ஏற்பாடு செய்து வருகிறோம். உங்கள் காலி மனையை ஒரு விலை போட்டுக் கொடுத்தால் இறைவன் கைங்கரியத்தைத் தொடர்ந்து செய்ய இயலும்."

ஸ்வர்ணத்தின் ஆசைகள் உயிர்க் கருவிலேயே பட்டுப் போயின. 'ராகவா! இதுவும் உன் முன்னேற்பாடா? ஒரே ஊரில் உன் அந்தஸ்துக்கு எதிராக வந்து விடுவேன் என்ற பயமா?' மாவிட ராகவன், அவள் மனத்திலிருந்து மறைந்து விட்டான். எல்லாம் ஆண்டவன் திருவிளையாடல் என்ற எண்ணம் மேலோங்கியது. "பரம்பொருளே! இந்த உலகமே உன் விசுவரூபத்துக்குள் அடங்கி இருக்கும் பொழுது, இப்பரந்த பூமியில் ஊரார் என் கணவரின் இறுதி நிழலையும் பறிக்க விழைந்தாரோ?" என்று மனம் புழுங்கினாள்.

"ஜல் ஜல்..." என்று சலங்கைகள் ஒலிக்க விரைந்த மாட்டு வண்டியில் ஜடமாக வீற்றிருந்தாள் ஸ்வர்ணம். சுற்றிலும் தெரிந்த காட்சிகளை மிக அமைதியாக உள் வாங்கியது மனம். இனி நீண்டு வளைந்த அந்தப் பாதையும் அதன் மருங்கிலுள்ள தோற்றங்களும் ஞாபகத்தின் இருண்ட பகுதியில் மறைந்தும் மறையாததுமாக ஒதுக்கித் தள்ள வேண்டிய சிந்தனைக் கீற்றுக்கள்தாம்! கடைசிப் பஸ்ஸைப் பிடித்து ஓட்டமும் நடையுமாகப் பாதசாரியாக விரைந்து வரும் அத்தியாயம் முற்றுப் பெற்றது. இருட்டறைச் செடிபோல் வெளுத்து வீற்றிருந்த முதிய உருவம், அவளது கனவு விரித்த நிழலுக்குள்ளேயே கலந்து விட்டது.

சுண்ணாம்பும் செம்மண் பட்டையும் தீட்டப்பெற்ற உயர்ந்த மதிற் சுவரின் பின்னே உயிரோவியம் போல் அந்த வெள்ளைக் கட்டடந்தான் பஜனை மடமோ? கடந்த கால ஆசாபாசங்கள் கண்ணாடித் துகள்களாகச் சிதறி நெஞ்சிலே பாய்ந்தன.

"இறைவர் தலையெழுத்தைச் சொல். மாளிகை போல் பெரிய வீடு இருந்தும் பஜனை மடத்திலே போய்த் தலையைச் சாய்த்தாரே!" இடறி விழுந்தாற் போல அதிர்ந்து விழித்துக் கொண்டது அவள் உள்ளுணர்வு.

"கொஞ்சம் வண்டியை நிறுத்தப்பா!" வண்டியின் வேகத்தின் கதியிலேயே கிழே குதித்த அதிர்ச்சியில் உடல் குலுங்கியது. பாய் விரித்தாற் போல் பவழமல்லிகை மலர்ப் படுக்கையின் நறுமணமும், துளசித் திருத் துழாயின் மணமும் கலந்த தெய்வ சான்னித்தியம் மனத்தைக் குளுக்க அவள் உள்ளே சென்றாள்.

மலர் ஓடைகளை விரிந்து வளைந்து செல்லும் கோலச் சித்திரத்தின் நடுவே, முத்துச் சுடர் வெள்ளத்தில், சோக ரஸம் ஊற்றெடுக்க, கண்ணீர் பொங்கி வரும் கண்களை மூடிக் கரம் குவித்தாள் ஸ்வர்ணம். "இறைவா! இங்கு நீ எழுந்தருளி இறுதி மூச்சுக்கு அவருக்கு இடம் தந்திராவிடில், என் ஆசைகள் வெறும் கனவின் நிழல்களாக மறைந்திருக்கும். இன்று வரையில் நெஞ்சிலே புரையோடிக் கிடந்த பேதமையை மன்னித்து விடு." மனத்தின் சுமையை அவர் பாதங்களில் வண்ண மலர்களாக உதிர்த்து விட்ட நிறைவுடன், வெளியே வந்து வண்டியில் ஏறிக் கொண்டாள் ஸ்வர்ணம்.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited, at the Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor, T. Sadasivam.




சட்டை, சால்வை, சேலை, துவாலை... நம் வீட்டுத் துணிகள் எல்லாவற்றுக்கும் ஏற்றது: வீட்டிலேயே ஸர்ப் சலவை... வெகு இலகுவாக வெள்ளைவெளே ரென்று துப்புரவாக்கும் சலவை! எல்லாம் ஸர்ப் செயல், அதன் பேராற்றல்! இன்றே செய்வீர் ஸர்ப் சலவை... இல்லத்திற்கான ஈடு இணையற்ற சலவை!

# ஸர்ப் சலவை: வெள்ளைவெளேர் சலவை!

துஸ்தான் லீவர் தயாரிப்பு.

SU. 27-X52 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon